யாதவ ராஜாவுடன் பேச்சுவார்த்தை நடத்தினார். அப்பொழுது யாதவ ராஜா, அல்லியதில்ஷாவை நோக்கி, "நம் இருவர்களுடைய சைன்னியத்தினால் மட்டும் நிஜாம்ஷாவுடன் யுத்தஞ் செய்து வெற்றியடைய முடியாது. ஏனெனில், அவரிடம் ஷாஹஜி ராஜா முதலான சில பிரசித்திபெற்ற வீரர்கள் இருக்கின்றார்கள். ஆதலால், நாம், டில்லி பாதுஷாவான ஜிஹாங்கீர் பாதுஷாவுடன் பேச்சு வார்த்தை நடத்தி, அவரிடமிருந்தும் சேனையைச் சேர்த்துக்கொண்டு நிஜாம் பாதுஷாவுடன் யுத்தம் தொடங்கவேண்டும்" என்று சொன்னார். அப்பொழுது அல்லியதில்ஷா, "தாங்கள் சொல்வது முற்றிலும் சரிதான். அதிலும், நமது தகப்பனாரான இப்ரஹிம்கானுக்கும் ஜிஹாங்கீர் பாதுஷாவிற்கும் நெருங்கிய தொடர்புண்டு. அவரும் நம்முடைய யோசனையை அங்கீகரித்து நமக்கு உதவி புரிவார்" என்று சொல்லி, இருவரும் அவ்வாறே ஏற்பாடு செய்தனர்.

அப்பொழுது, டில்லி பாதுஷாவான ஜிஹாங்கீரும், இப்ரஹிம்கானுக்கும் தனக்கும் உள்ள சிநேகத்தால், அல்லியதில்ஷாவிற்கு உதவி செய்ய நினைத்து, லஷ்கீர்கான் என்ற பெயருள்ள முகலாயப் பிரபுவின் தலைமையில் ஒரு சேனையை அனுப்பினார். அந்த முகலாய பிரபுவின் சேனையோடும், யாதவ ராஜனின் சேனையோடும் அல்லியதில்ஷா, நிஜாம்ஷாவுடன் யுத்தத்திற்காக அவருடைய இராச்சியத்திற்குள் புகுந்து உபத்திரவப்படுத்தினார். அப்பொழுது, நிஜாம் பாதுஷாவுடன் சேர்ந்திருந்த பிரபுக்களின் பெயர்களாவன: மாலோஜி ராஜாவின் புத்திரரான ஷாஹஜி ராஜா, இவரது சகோதரரான சரபோஜி ராஜா, விட்டோஜி ராஜாவின் மூத்த புதல்வரான சம்பாஜி ராஜா வீரசுவர்க்கம் அடைந்து விட்டதினால் அவருடைய சகோதரர்கள் எழுவராகிய கேலோஜி ராஜா, மாலோஜி ராஜா, கங்காஜி ராஜா, நாகோஜி ராஜா, பரசோஜி ராஜா, மனோஜி ராஜா, திரிம்பக்ஜி ராஜா, சிகமீர்கான், முதாகான், பல சகா தேசத்தின் அதிபதியான பல்லாள ராஜா, பேடர் தேசத்தரசனான சிம்ஹ ராஜா, விட்டோஜி ராஜா என்ற மராட்டியர், தத்தாஜிராஜா, நாகோஜி

ராஜா, நரசிம்ஹ ராஜா, ஜகதேவ ராஜாவின் புத்திரரான சுந்தரராஜா, தக்ஷிணத்தின் துருஷ்கப் பிரபுவான சாரத்கான், யாகுப்கான், பரசூத்கான், பனசூர்கான் சுருப்கான், ஜோஹர் கான், பத்மேதகான், அவரது புதல்வரான அகமத்கான் என்ற தலைமை வாய்ந்த அநேக பிரபுக்களும் அரசர்களும் அவர்களுடைய சேனைகளுடன் கூட இருந்தார்கள். அதனால் நிஜாம் பாதுஷா, அல்லியதில்ஷாவை அலக்ஷியப்படுத்தினர். அல்லியதில்ஷா, யாதவ ராஜாவின் சைன்னியத்தோடும் டில்லி பாதுஷாவால் அனுப்பப்பட்ட முகலாய சேனையின் உதவியாலும் நிஜாம்ஷாவுடன் யுத்தம் தொடங்க, அப்பொழுது அந்த அல்லியதில்ஷாவிற்கு சகாயமாக இருந்த பிரபுக்கள், அரசர்களின் பெயர்களாவன:— ஜலாகான், கஜீர்கான், கரமுல்லாகான், ஸுஜான்கான், ஜாஹன்கான், சிகந்தர்கான், கலேல்கான், இஜாமத்கான் முதலியவர்களும், யாதவராஜாவின் ஏழு பிள்ளைகளான உதார்ராம். விஸ்வனுக், அச்சல், பகதார், தாதாஜி, ராகவ், ஜஸ்வந்த் என்றவர்களும், யாதவ ராஜாவுடன் கூட இருந்த மராட்டிய, முகம்மதியப் பிரபுக்களும், டில்லி பாதுஷாவினல் அனுப்பப்பட்ட முகலாய சர்தாராகிய லஷ்கர்கானும், அல்லியதில்ஷாவுடன் கூட இருந்த மராட்டியப் பிரபுக்களும், முகம்மதியப் பிரபுக்களான முஸ்தப்கான், கஹமத்கானும், திலாவர்கன், யாகுப்கான், அபர்கான், முஸ்ஸேகான், பரீத்கான், சஜிகான், ஜோகர்கான், அங்குசகான் என்ற பத்து பேர்களும், இதைத் தவிர அல்லியதிஷாவின் தந்தையான இப்ரஹிம்கானுக்கு சிநேகிதர்களான ருஸ்தம்கான் முதலியோர்களும், மற்றும், துண்டி ராவ் என்னும் பிராமணப் பிரபுவும், மராட்டியப் பிரபுவான காண்டகே முதலியோர்களும், சேனதிபதியான முல்லாம் அகமத்கானைத் தலைவராகக்கொண்டு, நிஜாம் பாதுஷாவுடன் யுத்தத்திற்குக் கிளம்பினர்கள்.

மேற்கூறியவாறு நிஜாம்பாதுஷா தன்னுடைய சேனைகளுடனும் மற்ற பிரபுக்கள், சிற்றரசர்கள் முதலியோர்களுடனும், அபர்கான் என்பவனைத் தலைவனுகக்கொண்டு, அல்லியதில்ஷாவுடன் யுத்தஞ் செய்தார். அந்த யுத்தத்தில மாலோஜி

ராஜாவின் புதல்வரான ஷாஹாஜி ராஜா அந்த யுத்த களத்தில் பெரிய சூரராய் விளங்கி, முன் காலத்தில் நடந்த தேவாசுர யுத்தத்திற்கு ஒப்பான யுத்தஞ் செய்து, அல்லியதில்ஷாவிற்கு, டில்லி பாதுஷாவான ஜிகாங்கீரால் அனுப்பப்பட்ட மொகலாய சேனை முழுவதையும் தோற்கடித்துத் துரத்தி புறமுதுகிடச் செய்தார். பிறகு யாதவ ராஜாவின் சைன்னியத்தையும் தோற்கடித்தார்.

ஷாஹாஜி ராசனின் சகோதரனாகிய சரபோஜி ராஜா, அல்லியதில்ஷாவின் சேனையுடன் யுத்தஞ் செய்து அச்சேனையையும் துரத்தியடித்தார். தோல்வியடைந்த அல்லியதில்ஷாவின் சேனை கொஞ்சதூரம் ஓடிய பிறகு அக்கக்ஷியிலுள்ள பிரபுக்களில் ஒருவரான ஜோகர்கான் என்பவர் திரும்பி சிதறுண்டுப் போகும் சேனையை ஒன்று சேர்த்து திரும்பவும் யுத்தத்திற்கு வந்தார். அப்பொழுது மாலோஜி ராஜாவின் இரண்டாவது புதல்வரான சரபோஜி ராஜா யுத்தபாரத்தை வகித்துப் பற்பல தடவை பற்பல விதமாக சத்துருக்களை அடித்துப் பிறகு யுத்தத்திலேயே வீர சுவர்க்கம் எய்தினார்.

உடனே அவருடைய மூத்த சகோதரரான ஷாஹாஜி ராஜாவானவர் தனது சிற்றப்பனின் புதல்வனும் விட்டோஜி ராஜாவின் இரண்டாவது புத்திரனுமான கேலோஜி ராஜாவைச் சேர்த்துக் கொண்டு மிகவும் பராக்கிரமத்துடன் யுத்தஞ்செய்து, சத்துருக்களுக்கு அச்சத்தை யுண்டாக்கி, யுத்தத்திற்கு வந்த ஜோகர்கானையும் அவனுடன் வந்த சில பிரபுக்களையும் கொன்று வீழ்த்தி, மற்றும் சில பிரபுக்களை உயிருடன்பிடித்துச் சிறையிலடைத்து, அடில்ஷாவுடன் யுத்தம் செய்து, அவரையும் வென்று, மீதியுள்ள யாதவ ராஜா முதலிய பிரபுக்களை சின்னபின்னமாய் சிதறடித்து, அவர்கள் புறமுதுகிட்டு ஓடும்படி செய்தார்.

பிறகு ஷாஹாஜி ராஜா யுத்தகளத்தைத் தனக்கு சுவாதீனப் படுத்திக்கொண்டு, அம்பர் சேனாதிபதியை முன்னிட்டுக்

கொண்டு நிஜாம் பாதுஷாவிடம் வந்து வணங்கினர். அப்பொழுது நிஜாம் பாதுஷாவானவர் ஷாஹஜி ராஜரின் தீரச் செயலைப் பாராட்டி அவருக்கு விசேஷமான மரியாதையையும் ஆதரவையும் அளித்தார். அப்போது விட்டோஜி ராஜாவின் புதல்வரான கேலோஜி ராஜாவானவர் ஷாஹஜி ராஜருக்கு நடந்த மரியாதைகள் தனக்கும் நடக்கவேண்டும் என்ற விருப்பங்கொண்டு அம்பர்கான் என்னும் சேனாதிபதியை அணுகினர். அம்பர்கான், தான் சேனாதிபதியாயிருந்தும் ஷாஹஜி ராஜா யுத்தத்தில் வெற்றி அடைந்ததற்காகத் தன்னைவிட அதிகமான மரியாதை வழங்கப்பட்டதே என்று பொறாமைகொண்டு, ஷாஹஜி ராஜாவைக் காட்டிலும் கேலோஜீ ராஜாவுக்கு அதிகமான மரியாதைகள் நடக்கவேண்டும் என்ற எண்ணத்துடன், நிஜாம்ஷாவிடம் சென்று, கேலோஜி ராஜாவின் பராக்கிரமத்தைப் பலவாறாகப் புகழ்ந்து, அவர்தான் வெற்றிக்கு முக்கிய காரணமாயிருந்தவர் என்று சொல்லி, நிஜாம்ஷாவிடமிருந்து கேலோஜீ ராஜாவிற்கு விசேஷ மரியாதை செய்துவித்தார்.

இவற்றை யறிந்த ஷாஹஜீ ராஜா மனக்கலக்கமுற்றவராய் அங்கிருந்து தனது சொந்த ஸ்தலமாகிய சத்தாரா கோட்டைக்குச் சென்றார். சில நாட்களுக்குப் பிறகு ஷாஹஜீ ராஜா, நிஜாம் பதுாஷாவோடு மனவருத்தமடைந்து தன்னிருப்பிடத்திற்குச் சென்றுவிட்டார் என்ற செய்தியை யறிந்த அல்லியதில்ஷா, ஷாஹஜீ ராஜாவைத் தன் கக்ஷியுடன் சேர்த்துக்கொள்ள ஏற்பாடு செய்தார். அவ்வாறே அதற்குத் தக்க பேச்சு வார்த்தைகள் நடந்து ஷஹாஜீ ராஜாவும், அல்லியதில்ஷாவின் பேட்டி கண்டு, அவருடன் தன் சைன்னியத்தைச் சேர்த்துக்கொண்டு நிஜாம் பாதுஷாவை தீவிரமாக எதிர்த்தார்.

முன்பு அல்லியதில்ஷாவின் சகாயத்திற்காக வந்த முகலாய சேனையும், யாதவ ராஜாவும், ஷாஹஜியால் துரத்தியடிக்கப் பட்டு, அச்சேனையும் யாதவ ராஜாவும் முகலாய இராச்சியத்தில் வசித்து வந்தார்கள். தற்சமயம் ஷாஹஜீ ராஜா, அல்லியதில்ஷா

வின் சைன்னியத்தை மாத்திரம் தன்னுடைய சைன்னியத்துடன் கூட்டிக்கொண்டு போய், நிஜாம் பாதுஷாவுடன் யுத்தஞ் செய்து, அவருடைய சேனையையும் சேனாதிபதியான அம்பர் கானையும் தோற்கடித்து அல்லியதில்ஷாவிடம் வந்து சேர்ந்தார். அப்போது நடந்த சங்கதிகளை யறிந்து சந்தோஷமடைந்து ஷாஹஜீ ராஜாவிற்கு தன்னுடைய பாதி ராஜ்யத்தை ஜாகீராகக் கொடுத்தார். பிறகு ஷாஹஜீ ராஜா, அல்லியதில்ஷாவின் ஸ்வாதீனத்திலிருந்து முத்தேகான் முதலியவர்களை வென்று, அவர்களைத் தன் வசப்படுத்திக்கொண்டு, மேற்குப் பக்கத்திலுள்ள கேரள தேச முதலான அநேக தேசத்து அரசர்களையும் வென்று, அல்லியதில்ஷாவிற்கு குண்டு மரியாதைகளைக் கொடுக்கும்படி செய்து, அல்லியதில்ஷாவின் கஜானாவிற் ஏராளமான திரவியங்கள் சேருமாறும் செய்தனர்.

அதன் பிறகு ஷாஹஜி ராஜா விஜயதுர்க்கம் என்ற பீஜாபூரில் இருந்த சமயத்தில் அவருடைய இரண்டாவது மனைவியான ஜிஜாயிக்கு சாலிவாகன சகம் 1547 அக்ஷய வருடத்தில் முதல் புத்திரனாக சம்பாஜி ராஜா பிறந்தார். அவருக்குப் பிறகு கிரமப்படி நான்கு பிள்ளைகள் பிறந்தார்கள். ஆனால் அவர்கள் வளர்ந்து பெரியவர்களாகவில்லை. இவ்விதமிருக்கும் சமயத்தில் தேவதுர்க்கத்தை யாண்டுவந்த நிஜாம்ஷாவின் சேனாதிபதியானவரும் ஷாஹஜி ராஜாவிடத்தில் பொறாமை கொண்டவருமான அம்பர்கானும் தெய்வகதி யடைந்தார். இங்கு அல்லியதில்ஷாவின் தந்தையான் இப்ராகிம்கானும் இறந்துவிட்டார். அப்பொழுது டில்லி அதிபதியான ஜிகாங்கீர் பாதுஷா நினைத்ததாவது:—தக்ஷிணப்பிராந்தியத்தில் தேவதுர்க்கத்து நிஜாம்ஷாவிற்கும் பீஜபுரத்து அல்லியதில்ஷாவிற்கும் சண்டை நடந்தபோது அல்லியதில்ஷாவிற்குச் சகாயமாக மொகலாய சேனையின் ஒரு பகுதியை லஷ்கர்ன் தலைமையில் யுத்தத்திற்கு அனுப்பினோம். அப்போது நிஜாம்ஷா, ஷாஹஜியின் பலத்தினால் நம்முடைய மொகலாய சேனையை அடித்துத் துரத்தி அவமானப்படுத்திவிட்டார். இப்பொழுது அந்த நிஜாம்ஷாவினிடத்தில் ஷாஹஜி

ராஜாவும் இல்லை. யாதவ ராஜாவும் முன்னமேயே அவரிடமிருந்து விலகிவிட்டார். அந்த நிஜாமின் சேனாதிபதியான அம்பர்கான் தெய்வகதி அடைந்ததிலிருந்து அவரது பலம் மிகமிகக் குன்றிப் போய்விட்டது. இரண்டாவதாக அந்த நிஜாம்ஷாவின் நடத்தையும் நேர்மையுடனில்லை இச்சமயத்தில் அவர்மீது படையெடுத்தால் அவர் நமக்கு ஸ்வாதீனம்ஆவது நிச்சயம், என்று தீர்மானித்து, நிஜாம் ஷாவுடன் யுத்தந் தொடங்குவதற்கு தரியாகான் என்பவரைச் சைன்னியத்துடன் அனுப்பினார். இச்செய்தியை அறிந்த நிஜாம்ஷா தன்னிடத்திலிருந்த ஷஹாஜி ராஜா, யாதவ ராஜா ஆகிய இருவரும் தம்மைவிட்டு நீங்கினமையே தமக்கு தோல்விக்கு முக்கிய காரணம் என்று எண்ணி, அநேக பிரயத்தனம் செய்து ஷாஹஜி ராஜா யாதவ ராஜாவாகிய அவ்விருவரையும் தன்னிடம் அழைத்துக்கொள்ள அநேக இரகசியமான ஏற்பாடுகள் செய்தார்.

அதன் பிறகு மொகலாய எல்லைக்குள் இருந்த யாதவ ராஜாவும், பீஜபூரிலிருந்த ஷாஹஜி ராஜாவும், நிஜாம்ஷாவின் இராச்சியத்தில் உள்ளதும், தேவகிரிக்கு சமீபமானதுமாகிய தாராகிரி என்ற இடத்திற்கு வந்து சேர்ந்தனர். அந்த தாராகிரியின் பக்கத்தில் சிவநேரிக் கோட்டை என்ற ஒரு இடம் உண்டு. அந்த சிவநேரிக் கோட்டையின் அதிபதியான விச்வாஸ ராவ் என்பவருடைய வம்சத்தில் பிறந்த விஜய ராஜா என்பவர் அதை ஆண்டு வந்தார். அந்த விஜய ராஜாவும் தன் கன்னிகையான ஜெயந்தி பாயியை ஷாஹஜி ராஜாவின் மூத்த புதல்வன் சம்பாஜி ராஜாவுக்கு பாணிக்கிரஹணம் செய்து கொடுப்பதாகச் சொல்லி அனுப்பினார். அப்பொழுது ஷாஹஜி ராஜா அந்தக்கன்னிகையைத்தன் புதல்வனாகிய சம்பாஜி ராஜாவிற்குப் பொருத்தம் பார்த்துப் பிறகு பீஜபூரிலிருந்த தன்னுடைய குடும்பத்தை வரவழைத்து சிவநேரிக் கோட்டைக்குச் சென்று சம்பாஜி ராஜாவின் திருமணத்திற்கு நிச்சயம் செய்தார்.

அப்பொழுது நிஜாம்ஷா, ஷாஹஜி ராஜரை மொகலாய சைன்னியத்துடன் இருக்கும் தரியாகானின்மேல் படைஎடுத்துச்

செல்லுமாறும் யாதவ ராஜரைச் தன்னை வந்து பேட்டி காணுமாறும் சொல்லியனுப்பினர். அப்பொழுது ஷாஹஜி ராஜரின் இரண்டாவது மனைவி பூரண கருப்பமுற்றிருந்தார். அக்கர்ப்பிணியையும் அவருடைய பாதுகாப்பிற்காக சில சேனையையும் சிவநேரிக் கோட்டையிலேயே வைத்துவிட்டு, எஞ்சிய சேனையோடு தரியாகானைச் சந்திப்பதற்குச் சென்றார். சென்ற இடத்தில் தரியாகானோடு யுத்தஞ் செய்து முகலாய சேனையோடுகூடிய தரியாகானைத் துரத்தியடித்து வெற்றியடைந்து, ஷாஹஜி ராஜா திரும்பவும் சிவநேரிக்கோட்டை வந்தடைவதற்குள் அவரது பத்தினி ஜிஜாபாயி சாகேப் சாலிவாகன சகம் 1551க்குச் சரியான இங்கிலீஷ் வருடம் 1628 பிரமோதூத வருடத்தில் பிரசவித்து புத்திர பாக்கியத்தைப் பெற்றார். அப்புதல்வனுக்கு *ஏகோஜி ராஜா என்று பெயரிட்டார்கள். இந்த ஏகோஜி ராஜாவின் வமிசத்தில் நான்கு ஏகோஜி ராஜாக்கள் உண்டானார்கள்.

சாலிவாகன சகம் 1552 பிரசோர்ப்பத்தி வருடம் ஷாஹஜி ராஜா, சிவநேரிக் கோட்டையில் தன்னுடைய மனைவியை வைத்துவிட்டு, நிஜாம்ஷாவின் சகாயத்திற்காக, முகலாய பிரபுவான தரியாகானின்மேல் படையெடுத்து அவரைத் துரத்தியடித்தபோது, தரியாகான் ஷாஹஜி ராஜாவிடம் தோல்வியடைந்து திரும்பிச் சென்றார். ஆனால் அவர் நெடுந்தூரம் போகாமல் தபுதி நதிக்கரையில் தன்னுடைய சைன்னியத்துடன் தங்கினார். அப்போது நிஜாம்ஷாவின் ஸ்திரமற்ற நிலையையும், யாதவ ராஜா தெய்வகதியடைந்து விட்டதையும், ஷாஹஜி ராஜாவும் வருத்தத்துடன் தன் ஊருக்குப் போய்விட்டதையும் தெரிந்துகொண்ட அல்லியதில்ஷா, இப்போது நிஜாம்ஷாவின் ராஜ்யத்தை ஸ்வாதீனம் செய்யலாம் என்று நிச்சயித்து, அதன்மேல் படையெடுத்தார். அப்பொழுது நிஜாம்ஷா, தேவகிரி கோட்டையை விட்டுத் தாராகிரிக்கோட்டையில் தங்கியிருந்தார். நிஜாம்ஷாவின் நிலையை

* ஏகோஜி ராஜா, ஜிஜாபாயியின் குமாரர் என்பது சரித்திரத்துக்கு முரணாக இருக்கிறது,

அறிந்த அல்லியதில்ஷா, நிஜாம்ஷாவின் பிரபுத்துவமும் ஐசுவரிய மும் நிலைபெறப் போவதில்லை, க்ஷீண தசையை அடைவார் என்றும் ஆனால் தாராகிரிக் கோட்டை திடமாய் இருப்பதால், அத்தகைய கோட்டை தரியாகானின் கையிலகப் பட்டால் அவர், எப்போதும் தனக்கு ஒரு புதிய இடைஞ்சலாக இருப்பார், ஆகையால் அந்த தாராகிரி கோட்டையைத் தான கைப்பற்றிக் கொள்ளுதல் வேண்டும் என்று எண்ணி, அல்லியதில்ஷா தன்னுடைய சேனையோடு தாராகிரி கோட்டையை அடைந்தார். இச்செய்தி டில்லிக்குத் தெரிந்தது.

அப்பொழுது டில்லியை ஆண்டு வந்த ஜிஹாங்கீர் பாதுஷா தெய்வகதி அடைந்து, அலாம்கீர் என்ற ஔரங்கசீப் பாதுஷா நிஜாமைத் தன் வசமாக்கிக் கொள்ளவேண்டுமென்று புறப்பட்டு வந்தார். இந்தச் செய்திகளெல்லாம் சாந்தஜி ராஜாவின் காதிற்கு எட்டியது. அவரும் இக்கோட்டை யாரைச் சேருகிறதோ பார்ப்போம் என்று அமைதியுடன் தன்னிருப்பிடத்திலேயே இருந்தனர். அப்பொழுது ஔரங்கசீப் தன் தந்தையால் அனுப்பப் பட்ட தரியாகானோடு தாராகிரிக் கோட்டையின் ஒரு பாகத்தை நன்றாகத் திடப்படுத்திக்கொண்டு யுத்தஞ் செய்தார். மற்றொரு புறம் அல்லியதில்ஷா தன்னைத் திடப்படுத்திக்கொண்டு யுத்தஞ் செய்தார். இத்தகைய சந்தர்ப்பத்தில் நிஜாம் நிலைகலங்கி சக்தியற்றவராய் ஔரங்கசீப்பிற்கு ஸ்வாதீனமானார். உடனே ஔரங்கசீப்பு, அல்லியதில்ஷாவுடன் யுத்தஞ் செய்து அவரைத் துரத்தியடித்து தேவகிரி கோட்டையிலிருந்துகொண்டு இராஜ்ஜிய பரிபாலனம் செய்து வந்தார். அப்பொழுது சதாரா கோட்டையில் இருந்த ஷாஹஜி ராஜா முடிவு செய்ததாவது, எதுவரைக்கும் நிஜாம்ஷா தன்னுடைய முழு ஐசுவரியத்துடன் கூடியிருந்தாரோ அதுவரைக்கும் அல்லியதில்ஷா தில்லீச்சுரரான ஔரங்கசீப்புடன் சேர்ந்திருந்தார். தற்காலம் தாராகிரி கோட்டையின் நிமித்தமாய் அல்லியதில்ஷாவிற்கும் ஔரங்கசீப்பிற்கும் விரோதம் ஏற்பட்டதனால் ஔரங்கசீப் தன் சேனையுடன் மாத்திரம் இருக்கிறார். இனிமேல் அல்லியதில்ஷாவும், ஔரங்கசீப்பும்

சேர்ந்திருக்கமுடியாது. இவ்விதம் யோசனை செய்து, ஷாஹஜி ராஜா, நிஜாம்ஷாவினல் தனக்கு ஜாகிராகக் கொடுக்கப்பட்ட தேசத்தை இப்பொழுது அடையமுடியும் என்று நிச்சயம்செய்து ஜாகிரைக் காரணமாகக்கொண்டு, தேவகிரி துர்க்க ராஜ்ஜியத்தின் கீழ் உள்ள எண்பது துர்க்கங்களையும் தன் வசப்படுத்திக்கொண்டார். அப்பொழுது ஷாஹஜி ராஜாவின் ஐசுவரியத்தையும் வீரத்தையும் அறிந்து, ஷாஹஜி ராஜாவுடன் சேர்ந்துகொண்ட இதர அரசர்களும் சர்தார்களுமான தொண்ணூற்றுறு மராட்டிய குலத்தவர்களின் விவரத்தை அறிவிக்கிறேன்:—

எந்த க்ஷத்திரிய வம்சம் சூரியன் மூலமாகவும், சந்திரன் மூலமாகவும், பிர்மதேவன் மூலமாகவும் விருத்தியடைந்தது என்று பாரதம், பாகவதம், ஹரிவம்சம், இராமாயணம் முதலிய கிரந்தங்களில் சொல்லப்பட்டிருக்கிறதோ, அவைகளில் எல்லா வம்சங்களையும்விட மிக முக்கியமானதும் முதலில் ஏற்பட்டவைகளுமானது பிரம, சந்திர, சூரிய வம்சங்களாகும். இந்த பிரம்ம, சூரிய, சந்திர வம்சத்தைச் சேர்ந்த அரசர்கள் ஒருவரோடொருவர் சம்பந்தங்கொண்டுள்ளனர். இவைகளுள் முக்கியமான பிரம்ம வம்சத்தில், முதன் முதலில் மரீசரும், அவர் மூலமாக கச்யபர், அவர் மூலமாக சூரியநாராயணர், அவர் மூலமாக வைவஸ்த மனுவும், அவர் மூலமாக உத்தானபாத ராஜாவின் சந்ததியில் தாம்ீக ராஜாவும், அவருடைய ஆறு புதல்வர்களும் தோன்றி அவர்கள் வம்சத்தில் ராஜ வம்சங்களும் ஏற்பட்டிருக்கின்றன. அதைப்போலவே சூரிய வம்சத்திலும் இராமபிரானின் புதல்வர்களான லவ, குசன் மூலமாக வம்சம் விருத்தியடைந்து இருக்கிறது. அதுபோலவே சந்திர வம்சத்திலும் சந்திரனுடைய மகன் புதன் அவருடைய மகன் ஆயு, அவருடைய மகன் நகுஷன், அவருடைய மகன் யயாதி, அவருடைய மூலமாக பூரு ராஜா, என இவர்கள் மூலமாகவும் இராச வம்சம் விருத்தியடைந்துள்ளது. இந்த மூன்று வம்சங்களின் மூலமாய் விருத்தியடைந்த க்ஷத்திரிய குலம் தொண்ணூற்றுறாகும். அவற்றின் விபரம் பின்வருமாறு:—

போசலே, கோர்படே, ஷிம்பால்கர், ஜாப்தியாப், நளர்வதே கிடோ, சதே, சாகத, நிககாகட, படக, மானே, இதல்கர், பிஸலே, மொகிதே, சிரகே, படதரே, காளே, அகரே, பும்வார், ஹோல்கர், வணகே, ரணநவரே, அடாலே, பாஹதஸே, கரஜா தாளே, போலவா, படசால், கேடகலே, பகுகுண, மோரே, சாவத், சூர்ய வம்சி, ஸோமவம்சி, யாதவ, மஸ்தகே, லோகடே, சிங்காடே, தளவி, காண்டகே, சனகர், காயகவாட, தேவகர், ஜாதவ, ஸோனவணே, லாண்டர், உதாரே, பிம்ஸால், விரஜ, ராய, ஜாஹே, பாடலகர், யூஜாடே, சிசோங்க, சிரசாடே, பானதுர்க, காடே, கராடே, காலிங்கரூட, காவாடே, துமால், ரணபிசகா, புசே, மடலே, டோகே, குஜர், கடோன், குராஹே, சலகே, சீலார், காடே, காட்கர், மஹடிக், வானவிரே, விதரே, வாகமாரே, வாகசவரே, வாக, கல்பாடே, சிதோலே, சிகரே, வாவர், இகவளே, நாரதிவே, போதளே, பருகர், இம்சாப், ஆஹாரகர், அவாரே, துணமோதாடே, தகட, லகட, கல்யாண, கரடோம்வர், சங்கர், பாலகே, என இவர்கள். இந்த எல்லா மராட்டியப் பிரபுக்களும் ஷாஹஜி ராஜாவுடன் சேர்ந்தார்கள். இதனால் ஷாஹஜி ராஜாவின் அதிகாரம் ஏராளமாக வளர்ச்சியுற்றது.

இச்செய்தியைச் செவியுற்ற டில்லி அதிபதி சிந்தித்து, இவ்விதம் ஏற்பட்டதற்கு, அல்லியத்தில்ஷாவை நாம் துரத்தியடித்ததுதான் முக்கிய காரணம் என்று எண்ணினர். இதற்காக இப்பொழுது அல்லியத்தில்ஷாவும் தானும் ஒருமனதுடன் சேர்ந்து, ஷாஹஜி ராஜரைக் கீழ்ப்படுத்தவேண்டும் என்று, டில்லி அதிபதியான ஔரங்கசீப் முயற்சிசெய்து, அல்லியதில்ஷாவுடன் ஒன்றுசேர்ந்து, உடன்படிக்கை செய்துகொண்டு, ஷாஹஜி ராஜாவுடன் யுத்தம் செய்வதற்கு பீவராதீரத்தில் வந்து இறங்கினர். அப்போது ஷாஹஜி ராஜா எல்லா முகம்மதியர்களையும் அடித்து நொறுக்கி நிர்மூலமாக்கிவிடுவது என்று வீரத்துடன் மூன்று வருடம்வரை யுத்தம் செய்தார். அப்பொழுது ஷாஹஜி ராஜரின் குலதெய்வமானது அவரது

கனவில் தோன்றி, எதிரிகள் உன்னால் தோற்று நாசமடைய மாட்டார்கள். ஆனால் உனக்குப்பிறகு உன் மகனால் வெகுகாலத்திற்கப்பால் தோற்கடிக்கப்படுவார்கள். ஆதலால் நீ எதிரிகளுடன் இப்போதே உடன்படிக்கை செய்துகொள், என்று ஆணையிட்டது. கனவிற்கூறிய அக்கடவுளின் சொல்லைக் கேட்ட, ஷாஹஜி ராஜர் நிஜாம்ஷாவின் புதிய இடங்களைத் தானே பிடித்து, அவைகளை எல்லாம் டில்லி அதிபதியான ஔரங்கசீப்பிற்கும் விஜயபுரத்தின் அல்லியத்தில்ஷாவிற்கும் இரண்டாகப் பிரித்துக் கொடுத்துவிட்டுத் தன்னுடைய ராஜ்யமாகிய சாதாரக் கோட்டையிலேயே வசித்துவரலானார்.

சில நாட்களுக்குப் பிறகு ஔரங்கசீப்பிற்கும் அல்லியதில்ஷாவிற்கும் விரோதம் ஏற்பட்டது. அப்பொழுது அல்லியதில்ஷா தந்தை இப்ரஹிம்கானுக்கு ஷாஹஜி ராஜா நெருங்கிய நண்பினராக இருந்தமையாலும், சூரராக விளங்குவதனாலும், இப்பொழுது அவருடைய நட்பை திரும்பவும் அடையவேண்டும் என்று நினைத்து, ஷாஹஜி ராஜரை வரவழைத்து, சர்தார்களில் ஒருவரான ரணதுல்லாகான் என்பவருடன் ஷாஹஜி ராஜாவையும் சேர்த்து, ஒரு சேனையுடன் தக்ஷிண பிராந்தியத்து இராஜ்ஜியங்கள் மூலமாக ஔரங்கசீப்பிற்கு கிடைத்துவந்த குண்டு மரியாதைகளை எல்லாம் தன் ஸ்வாதீனப் படுத்திக் கொண்டு வரும்படி அனுப்பினார். ஷாஹஜி ராஜா அவ்வாறே சென்று தக்ஷிண பிராந்திய அரசர்களை வென்றார். தோல்வியுற்ற அவ்வரசர்களின் பெயர்களாவன:

விதுபுரத்து ராஜாவாகிய வீரபத்திரர், கொங்க தேசத்து ராஜாவாகிய கோங்க நாயக், காவேரிப்பட்டிணத்து ராஜாவாகிய ஜகதேவர், ஸ்ரீரங்கபட்டணத்து ராஜாவாகிய கண்டீரவர், தஞ்சாவூரின் ராஜாவாகிய விஜயராகவ ராஜா, செஞ்சியின் ராஜாவாகிய வெங்கிட நாயக்கர், மதுரையின் ராஜாவாகிய திருமல் நாயக்கர், வாலிகுண்டாபுரத்து ராஜாவாகிய அரிகரல வெங்கட்ட நாயக்கர், விதா நகரத்து ராஜாவாகிய ரங்கசாயி, இம்சகூடபுரத்து ராஜா

வாகிய தன்னேகோட நாயக்கர், பாளையபட்டின் அரசர்களிற் சிலர், ஆகிய இவர்களை வென்று அவர்களிடமிருந்து கப்பங்களை யும் பெற்றார். இவைகள் எல்லாவற்றையும் அல்லியதில்ஷாவிற்கு அனுப்பினர். அதனல் அவர் மிகவும் சந்தோஷம் அடைந்து புதிதாக நியமித்திருந்த பெங்களூர் இராஜ்ஜியத்தை வெற்றிலை பாக்கிற்காக ஷாஹஜி ராஜாவிற்குக் கொடுத்தார். ஷாஹஜி ராஜா பெங்களூருக்கு வந்து பார்த்தபொழுது, கோட்டை மிகவும் வசிப் பதற்கேற்றதாயும் அழகு நிறைந்ததாகவும் இருந்தது. இதைக் கண்ட ஷாஹஜி ராஜா சாதாராவிலிருந்து தன் குடும்பத்துடன் பெங்களூருக்கு வந்து வசித்தார். சிவாஜி ராஜா, ஏகோஜி ராஜா இவ்விருவருக்கும் சகல வித்தைகளையும் கற்றுக் கொடுத்தார். அப்பொழுது சிவாஜி ராஜாவுக்கு வயது பனிரெண்டு. அவர் மிகுந்த சூரராக இருந்து வந்தார். அந்தச் சமயத்தில் ஷாஹஜி ராஜாவின் கனவில் ஸ்ரீ சாம்பசிவன் தோன்றி சிவாஜி ராஜாவை இவ்விடத்தில் வைத்துக்கொள்ளக் கூடாதென்றும், இவரால் அநேக காரியங்கள் நடக்கப் போகின்றதென்றும், அதற்காக அவரை சாதாரா, பூனா இப்பிராந்தியத்திற்கு அனுப்பிவைக்கு மாறும் ஆணையிட்டருளினர். அப்பொழுது ஷாஹஜி ராஜரது மூத்த மனைவிக்குப் பிறந்த மகனாகிய ஏகோஜி ராஜாவானவர் வய தில் சிறியவராக இருந்தபோதிலும் பாத்தியத்தில் அதிக முள்ளவர். இக்காரணத்தினல் யுவராஜா பதவியையும் பெங்க ளூர் பட்டத்தையும் 1562 விஷு வருடத்தில் ஏகோஜி ராஜா வுக்கு கொடுத்தும், தன் விருதுகள் எல்லாவற்றையும் ஏகோஜி ராஜாவிற்கு கொடுத்து, தன் குலதெய்வத்தையும் பூஜை செய்யு மாறு கொடுத்தார். சிவாஜி ராஜாவிற்கு, சாதாரா, புனா பிராந்திய இராஜ்ஜியத்திற்கு 1562 விஷு வருடத்தில் யுவராஜ பட்டத் தையும் கட்டிவைத்தார்.

அதன் பிறகு சிவாஜி ராஜா சாதாராவிற்கு வந்து பாது ஷாவின் இராஜ்ஜியத்தைச் சேர்ந்த கோட்டைகள் சிலவற்றைப் பிடித்துக்கொண்டு இராஜ்ஜியத்தை ஆண்டு வந்தார். ஷாஹஜி ராஜா பெங்களூரிலேயே தங்கி இருந்தார். அவருக்கு அல்லிய

தில்ஷா இரண்டு மூன்று தடவைகள் அழைப்பு அனுப்பினர். அவ்வழைப்பை ஷாஹஜி ராஜா நிராகரித்துக்கொண்டே இருந்தார். அல்லியதில்ஷா, தனது அழைப்பிற்கு அவர் இணங்கி வாராததினல், அவருடைய மகன் சூரனக இருந்துகொண்டு பாதுஷாவின் கோட்டைகளைக் கட்டிக்கொண்டு இருக்கிறனென்றும், ஆரம்பத்திலிருந்தே ஷாஹஜி ராஜர் சூரராக இருப்பதோடு இவரது இருமகனும் சூரராய் இருப்பதனல் இவருக்கு இவ்வளவு கர்வம் ஏற்பட்டிருக்கிறது என்றும், பொருமையும் கோபமும் கொண்டு அவரை கபடத்தினல் எப்படியாவது பிடித்துக் கைதி செய்யவேண்டும் என்று யோசனை செய்து, அதற்கு கபடியான முஸ்தபகான் என்ற சர்தாரை அனுப்புவது என்று தீர்மானித்து, அவருக்குத் துணையாக திலாவர்கான், பரீதுகான், ஹைவதி ராஜாவின் மகனை பல்லாள ராஜா, மசூதகான், அஜ்ஜமகான், ஸஜார்கான், ராகவ ராஜ மராட்டியர், யாதுஹகான், பாஜிராஜே மராட்டியர், அம்பர்கான், வேதாஜி பாஸ்கர் என்ற பிராமணர், ஜோகர்கான், கன்னர் என்ற கன்னேல் பிரபு, என்ற இவர்களை அனுப்பிவைத்து, எவ்விதமாவது ஷாஹஜி ராஜரை உயிருடன் பிடித்து வரவேண்டும் என்று உத்திரவிட்டு, முஸ்தபகானை பெங்களூர் பிராந்தியத்திற்கு அனுப்பினர்.

அந்த முஸ்தபகான் பெங்களூருக்கு வந்து ஷாஹஜி ராஜருக்குச் சொல்லியனுப்பியதாவது:—“அல்லியதில்ஷா பாதுஷாவிடமிருந்து ஒரு காரியத்திற்காகத் தங்களைக்கண்டு பேசிய பிறகு ஏற்பாடு செய்யவேண்டியிருக்கிறபடியால், பேச்சு வார்த்தைகள் நடத்த அவசியமாகப் பேட்டிகாண வரவேண்டும்” என்று சொல்லியனுப்பினர். அப்பொழுது முஸ்தபகானின் கபடயோசனையை ஷாஹஜி அறிந்திருந்தபோதிலும், நாம் ஏன் மரியாதைக்குறைவு செய்யவேண்டும் என்றும், இவருடைய கபடத்தினல் என்ன நேர்ந்துவிடப்போகிறது என்றும், அவ்வாறு நேர்ந்தாலும் பார்த்துக்கொள்வோமென்றும், தைரியத்துடன் கிளம்பினர். ஏகோஜி ராஜாவிற்கு எல்லா அதிகாரங்களையும் கொடுத்திருந்தார்; ஆனல் அவர் வயதினல் சிறியராக இருந்ததால் துர்க்கத்தின் சம்ரக்ஷணை

யின் பொருட்டு மூத்த புத்திரன் சம்பாஜி ராஜாவை வைத்து விட்டுத் தானும் தன்னுடன் அழைத்துச் சென்ற பிரபுக்களான கண்டாஜி, மானுமானுஜி, தானுஜி, பந்துஜி, பாண்டவல்கர், தஸதீத், மேகஜித் ஆக இந்த ஏழு வீரர்களும் ஆப்தர்களாக இருந்தபடியால் அவர்களுடன் முஸ்தபகானின் பேட்டியைக் காணச்சென்றார். அப்போது சில அபசகுனங்கள் தோன்றின. ஆனால் அவைகளை அவர் லக்ஷியம் செய்யவில்லை. அப்பொழுது முஸ்தபகான் அவரை மிக்க மரியாதையுடன் வரவேற்று வேண்டிய உபசாரங்களைச் செய்து இவ்விடம் எனக்கு பத்துப் பதினைந்து நாட்களுக்கு வேலை இருக்கிறபடியால் தாங்கள் இங்கேயே தங்கி யிருக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டார். அதன்பிரகாரம் ஷாஹஜி ராஜா அவர் சமீபத்திலேயே தன் கூடாரத்தை அடித் துக்கொண்டு தங்கி இருந்தார். முஸ்தபகான் ஷாஹஜி ராஜா வுக்கு நம்பும்படியான சிநேகத்தைத் தினந்தோறும் வளர்த்து வந்தார். ஆனால் ஷாஹஜி ராஜா இவரிடம் விசுவாசம் சிறிதும் வைக்கவில்லை.

வெளித்தோற்றத்திற்கு அவரது கபடச்செயல் தனக்குச் சிறிதும் தெரியாது என்று முஸ்தபகான் நினைக்கும்படியாகவும் இருந்துவந்தார். அப்பொழுது ராஜாவின் கூடாரத்திலும் அபசகுனச் சின்னங்கள் தோன்றின. அதனால் அரசர் அந்த இடத்தைவிட்டுத் தன்னுடைய துர்க்கத்திற்கு வந்து சேர்ந்தார். விதியின் செயலால் அங்கேயே தங்கி இருந்தார். அப்பொழுது முஸ்தபகான் ஒரு நாள் இரவு, தன்னுடன் வந்திருந்த சர்தார்களை ஷாஹஜி ராஜாவின் கூடாரத்தை வளைத்துக்கொள்ளும்படி உத்திரவிட்டுத்தானும் அவர்களுக்குத் துணையாக இருந்தார். ஷாஹஜி ராஜாவிற்கு இந்த விஷயம் தெரியாமல் இருந்ததால் தன் சர்தார்களுடன் கூடாரத்தில் சுகமாக இருந்துவந்தார். நடு இரவில் திடீரென்று கூடாரத்தை சர்தார்கள் சுற்றி வளைத்துக் கொண்டனர். இச்செய்தியறிந்த ராஜாவிடமிருந்த சர்தார்கள் அரசரை எழுப்பி விஷயத்தை அறிவித்தனர். அப்பொழுது அரசர் உஷாராகிக் குதிரையின்மீது உட்கார்ந்து தன் சர்தார்

களுடன் யுத்தத்திற்கு ஆயத்தமாகி யுத்தஞ்செய்தார். சிலரைக் கொன்று வீராவேசத்துடன் நீண்ட நேரம் சண்டை செய்தவர் கடைசியில் சர்தார் பாஜிராயரோடு யுத்தம் செய்துகொண்டிருக்கையில், ஷாஹஜி ராஜா பாஜி ராவின் கத்தியால் குத்துண்டு காயமுற்று மூர்ச்சையடைந்து குதிரையின் காலடியின்கீழ் விழுந்தார்.

உடனே பாஜி ராஜாவும் முஸ்தபகானும், ஷாஹஜி ராஜாவின் அருகில் வந்து பல உபசாரங்களைச் செய்து மூர்ச்சை தெளிய வைத்துக் காயங்களைக் கட்டியும், அரசரை அம்பாரியில் உட்கார வைத்து விஜாபுரத்து அல்லியதில்ஷாவிடத்திற்கு அனுப்பினார்கள். அப்பொழுது ஷாஹஜி ராஜாவின் மூத்த மகன் சம்பாஜி ராஜா பெங்களூரில் இருந்தார். தன் தந்தைக்கு முஸ்தபகானால் செய்யப்பட்ட வஞ்சனையையும் ஷாஹஜி ராஜாவை விஜயபுரத்திற்கு அனுப்பப்பட்டசெய்தி எல்லாவற்றையும் அறிந்துஉடனே முஸ்தபகானுடன் யுத்தத்திற்கு ஆயத்தமானார். இதற்குள்ளாக முஸ்தபகானும் பெங்களூர் கோட்டையைப் பிடித்துக்கொள்ளும் பொருட்டு யுத்தஞ்செய்ய வந்தார்.

இருவருக்கும் யுத்தம் ஏற்பட்டது. இச்செய்திகள் எல்லாம் சிவாஜி ராஜாவின் காதிற்கு எட்டியது. அவர் சேனைகளுடன் அல்லியதில்ஷாவுடன் யுத்தஞ் செய்ய ஆயத்தமானார். இந்த இரண்டு இடத்துச் செய்திகளையும் அறிந்த அல்லியதில்ஷா, தன் சேனையையும், பேடரின் எஜமானன் பல்லாளன், பத்தேகான், முஜேகான் என்ற இம்மூன்று சர்தார்களையும் யுத்தசன்னத்தர்களாகச் செய்து, சிவாஜி ராஜாவும் பாதுஷாவும் கட்டிய கோட்டைகளையும் பிடித்து, புரந்தர்கட்டிற்குச் சென்று அங்கு சிவாஜி ராஜாவைக் கைப்பற்றி வரவேண்டும் என்று உத்திரவிட்டு அனுப்பினார். மேலும் இம்மூன்று சர்தார்களும், சிரோபல் என்னும் கோட்டை சிவாஜியினால் ஆக்கிரமிக்கப்பட்டிருந்ததினால் அக்கோட்டையைப் பிடித்து, அங்கு பேடரின் எஜமானனான பல்லாளரை வைத்துவிட்டு, பத்தேகான், முஸ்ஸேகான்

இருவரும் சிவாஜி ராஜா இருந்த புரந்தர் கோட்டைக்குச் சென்று முற்றுகை செய்தார்கள். அப்பொழுது சிவாஜி ராஜா தன் சேனாதிபதி பீமன் என்பவரை அழைத்து, மிக்க கோபத்துடன், "நீ இப்பொழுதே சென்று சிரோபல் கோட்டையைப் பிடித்து, காவல் வைத்து வரவேண்டியது" என்று உத்தரவிட்டு, தான் முஸேகான், பத்தேகான் என்ற இருவருடன் யுத்தம் செய்ய ஆயத்தமானார். பீமசேனாபதி சிரோபல் கோட்டையை முற்றுகையிட்டு, நாலா பக்கங்களிலும் சேனைகளை வைத்து, குண்டு மாரி பொழிந்தார். அப்பொழுது பல்லாளரிடத்தில் இருந்த சைன்னியங்கள் தலைகாட்டாது ஓடி ஒளிந்து இருந்தார்கள். சேனாதிபதி பீமன் கோட்டையை நான்கு பக்கங்களிலும் உடைத்து உள்ளே நுழைந்து சண்டை செய்ததில், பல்லாளரைக் கொன்று, கோட்டையை வசப்படுத்திக்கொண்டு, அதில் தன் சேனைகளை வைத்துக் காவல்புரியும்படி கட்டளையிட்டுச் சிவாஜி ராஜாவிடம் வந்தார். அவர் அவ்விடம் வருவதற்கு முன்பு பத்தேகான், முஸேகான் இவ்விருவரும் சேனையை ஆயத்தஞ் செய்துகொண்டு, புரந்தர் கோட்டையைத் தாக்கி அதிலுள்ள சேனையை அழித்தார்கள். அப்பொழுது சிவாஜி ராஜா கோட்டையின் மேலிருந்துகொண்டே பலமான சண்டை செய்து, சில எதிரிகளைக் கோட்டையிலிருந்து உருட்டி விட்டும், குண்டுகளாலும் ஈட்டிகளினாலும் பட்டாக் கத்திகளினாலும் குத்தியும், வெட்டியும், ஈயத்தைக் காய்ச்சி ஊற்றியும், ஒரு பெரிய யுத்தஞ் செய்து, கோட்டையை மீட்டுக்கொண்டார்.

அதன் பிறகு இரண்டாந் தடவை பத்தேகான், முஸேகான் தன் சைன்னியங்களுடன் சமயம் அறிந்து, திடீரென்று புரந்தர் கோட்டைக்கு ஏறிச்சென்று, கோட்டையின் வாயிற்படியை நெருங்கினார்கள். அப்பொழுது சிவாஜி ராஜா, தன்னிடம் உள்ள சில படைகளுடன் வெளியில் வந்து பெரும் யுத்தம் செய்து, எதிரிகளின் படைகள் யாவற்றையும் அழித்து முஸேகானையும் கொன்றுவிட்டார். பத்தேகான் ஓடிவிட்டார். அவருடன் அவரது படைகளும் சென்று விட்டன.

அதன் பிறகு சிவாஜீ ராஜா வெளிக்கிளம்பி படைகளைத் திரட்டிக்கொண்டு, அல்லியதில்ஷாவுடன் சண்டை செய்யப் புறப்பட்டார். இதற்குள்ளாக சேனாதிபதி பீமன் சிரோபல் துர்க்கத்தைப் பிடித்துவிட்டு வந்து சேர்ந்தார். இவ்விதமிருக்கும் பொழுது, சித்ரகல் என்னும் துர்க்கத்தில் விச்சகத்தி பரமா என்னும் ஒரு சூரர் இருந்தார். அவருடைய சேனை அணிவகுப்பில், குதிரைப் படைகளுக்கு இடதுபுறமாக மூவாயிரம் குதிரைப் படைகளும், கத்திப் படைகளுக்கு வலது புறமாக மூவாயிரம் குதிரைப் படைகளும், தவிர, முன்னும் பின்னுமாக காவல் படைகளும் இருந்தன. மேலும், சித்ரகல் கோட்டையில் காலாட் படையின் தொகையும் அதிகம், அவர் வீரமும் அதிகம். இவ்விதமான பலமுள்ள படைகளைக் கொண்டு, அவர் அடிக்கடி அல்லியதில்ஷாவின் கோட்டைகளையும், விஜாபுர நகரத்தையும் கொள்ளை அடித்துக்கொண்டு போவது வழக்கமா யிருந்தது. அவர் இப்பொழுதும் முன்போலவே விஜாபுரத்தைக் கொள்ளையடித்துச் சென்றார். அப்பொழுது அல்லியதில்ஷா நினைத்ததாவது:—

"தக்ஷிண பாகத்திலுள்ள வெங்களூருக்குச் சேனை யனுப்பியும், சம்பாஜி ராஜா நமக்குக் கீழ்ப்படிவதாகத் தெரியவில்லை. சித்ரகல் துர்க்கத்தின் பரமா என்பவர் விஜாபுரத்தில் பல இடங்களைக் கொள்ளையடித்துக் கொண்டு போகிறார். புனா பிராந்தியத்திற்கு முஸேகான், பத்தேகான் என்ற இருவர்களையும் அனுப்பியதில், சிவாஜி ராஜா முஸேகானைக் கொன்றுவிட்டார். பத்தேகானும் எல்லாவற்றையும் இழந்து உயிருடன் வந்து சேர்ந்திருக்கிறார். இப்போது சிவாஜி ராஜா சேனைகளைத் திரட்டிக்கொண்டு விஜாபுரத்தின்மேல் படையெடுக்கத் தயாராக இருக்கிறார். சிவாஜி ராஜா ஒரு வரப்பிரசாதியாகவும், சூரராகவும், எங்கு சென்றாலும் வெற்றியுடன் வருவதனால் இப்பொழுது விஜாபுரத்தின் மீதும் படையெடுப்பு ஏற்பட நேரிடுமோ என்று சந்தேகமாக இருக்கிறது."

இவ்விதமாகச் சிந்தித்து அதற்கான தீர்க்க யோசனை செய்து ஷாஹஜி ராஜாவுக்கு வாக்குக் கொடுத்துச் சிறையினின்

றும் விடுவித்து அவரிடம் ராஜீய விவகாரங்களை ஒப்படைப்ப தென்று தீர்மானித்து, அவரை விடுதலை செய்து, தன்னிடம் பேட்டிகாண வரும்படி அழைத்து அவரிடம் சொன்னதாவது, "அரசே! உங்களுக்கும் என் தந்தை இப்ராஹீம் கானுக்கும் நீண்ட நாட்களாக சிநேகம் இருந்து வந்திருக்கிறது. அதனால் என் தந்தைக்கு அளவற்ற உபகாரங்களும் செய்திருக்கிறீர்கள். அவரும் உங்களுக்கு அளவற்ற உபகாரங்களைச் செய்திருக்கிறார். அதைப்போல நானும் உங்களிடம் நடந்து வந்திருக்கிறேன். உங்களை நான் தக்ஷிண பிராந்தியத்திற்கு அனுப்பியதற்குத் தாங்களும் நான் சொல்லியபடி நடந்து, அதன்படி செய்தும் வந்தீர்கள். ஆனால் பெங்களூர் ஜாகீரைத் தங்களுக்குக் கொடுத்ததினால், குடும்பத்தையும் கொண்டுவந்து வைத்துக் கொண்டு, நம்மிடம் வராமல் தாங்கள் அவ்விடத்திலேயே தங்கி இருந்து விட்டீர்கள்.

"தாங்கள் நம்மிடத்திலேயே இருக்கவேண்டுமென்று உங்களை அழைத்துவரும்படி முஸ்தபகானை உங்களிடம் அனுப்பி வைத்தேன். அவர் வேறுவிதமாக உங்களை இவ்விடம் அனுப்பி வைத்திருக்கிறார். இருக்கட்டும் தற்சமயம் அந்த வருத்தத்தை மனதில் வைக்கவேண்டாம். நாம் இருவரும் ஒரு சமாதானத்திற்கு வரவேண்டும். அதாவது:—தங்களுடைய மகன் சிவாஜி ராஜா நம்முடைய சிம்ம கட்கோட்டையை பிடித்துக்கொண்டிருக்கிறார். அதை நம்மிடம் விட்டுவிடச்செய்யவேண்டும். உங்களுடைய மூத்த மகன் சம்பாஜி ராஜா பெங்களூரில் இருந்துகொண்டு முஸ்தபகானுடன் சண்டை செய்துகொண்டிருப்பதை நிறுத்தி விடும்படியும், தங்களுடைய குடும்பத்தினரை சாதாராவிற்குப் போகும்படியும், பெங்களூரை நம்மிடம் விட்டுவிடும்படியும் செய்யவேண்டும். மூன்றாவதாக சித்திர கல் துர்க்கத்தின் பரமா, பெரும் அட்டூழியங்களை புரிந்துவருவதைத்தடுத்து, அவரை நமக்குக்கீழ்ப்படியுமாறு செய்யவும்வேண்டும்" என்று சொன்னார். இம்மூன்று விஷயங்களையும் ஷாஹஜி ராஜா அங்கீகரித்து இரு புத்திரர்களுக்கும் கடிதம் எழுதியனுப்பி சிம்ம கட்கோட்டையை அவரிடம் ஒப்படைத்துவிட்டார். மேலும் சம்பாஜி ராஜா ஏகோஜி ராஜா ஆகிய இவ்விருவர்களையும் குடும்பத்துடன்

சாதாராவிற்குப் போய் வசித்துவரவேண்டும் என்று சொல்லி பெங்களூரையும் விடுவித்துக் கொடுத்துவிட்டார். தானும் ஒரு சேனையைத் தயார்செய்துகொண்டு பரமாவுடன் சண்டைசெய்யப் புறப்பட்டார்.

ஷாஹஜி ராஜா சித்திரகல்லை அடைந்தபொழுது பரமா என்பவர் நந்தவனத்தில் மீன் வேட்டையாடிக்கொண்டிருந்தார். அவருடைய ஆட்கள் அவரிடம் அல்லியதில்ஷா ஒரு படையுடன் வந்திருப்பதாகவும், அச்சேனையோடு ஷாஹஜி வருவதாகவும் சொன்னார்கள். அப்பொழுது பரமா என்பவர் தன் விருதுகளோடு கூடிய குதிரையைக் கொண்டுவந்து அதில் ஏறி உட்கார்ந்து தன் படைகளையும் தன்னுடன் அழைத்துக்கொண்டு யுத்தத்திற்கு வந்தார். ஷாஹஜி ராஜா அவருடன் பெரும் யுத்தஞ்செய்து, தன் கையினாலேயே அவரைக் கொன்று அவருடைய தலையை வெட்டி அங்கவஸ்திரத்தில் முடிந்துகொண்டு அவருடைய குதிரையின் மூன்று விருதுகளையும் எடுத்துக்கொண்டு, அவருடைய சேனைகளில் உள்ள சிலரையும் சிறைபிடித்துக்கொண்டு, விஜாபுரத்தையடைந்து அல்லியதில்ஷாவின் முன்பு பரமாவின் தலையையும் அவருடைய குதிரையின் மூன்று விருதுகளையும் வைத்து வணங்கினார். அப்பொழுது அல்லியதில்ஷா மிக்க சந்தோஷம் அடைந்து, அவர் கொண்டுவந்த விருதுகளை அவருக்கே கொடுத்து, ஒரு தர்பார் கூட்டித் தன்னுடைய எல்லா விருதுகளையும் ஷாஹஜி ராஜாவிற்கு இனாமாகவும் கொடுத்தார். இதைத்தவிர அவர் மேலும் தம்முடைய விசேஷ விருதுகளான பச்சை நிறமுள்ள வெல்வெட்டுக் கூடாரத்தையும், நகரா என்னும் மெய்க்காப்பாளர் முரசையும், பச்சை வில்வெட்டினால் செய்யப்பட்ட விதானம் கூடியதும், தங்கம் வெள்ளி இவைகளினாற் செய்யப்பட்டதுமான அம்பாரியையும், யானையையும், பாதுஷாவினுடைய உருவிய கத்தியோடுகூடிய காவலாளர்களையும், விச்சசித்தி பரமாவின் குதிரை விருதுகளையும், நவதாம் என்ற பெயருடைய பாதுஷாவின் குதிரை லாயத்திலுள்ள குதிரைகளிற் சிலவற்றையும், அவற்றின் விருதுகளையும், சில அடையாளச் சின்னங்களையும் 'சந்திர' 'சூரிய' என்னும் வாத்தியங்களையும்,

தங்கம் வெள்ளி இவைகளினுல் செய்யப்பட்ட இரகசியக் கூடாரத்தையும், உலோகத் தகடு கொடுத்த பச்சை வெல்வெட்டுத் திரைகளையும், மெத்தை போன்ற அதன் உரைகளையும், பட்டு ஜாலர்களையும், அக்கூடாரத்தின் கால்கள், படிகள், நடைபாதை இவைகளின்மேல் போடும் பல வர்ண வெல்வெட்டு உறைகளையும், நவரெத்தினங்கள் வைத்திழைத்த கலசத்தையும், பட்டு விரிப்புகளையும், வெல்வெட்டு திண்டுகளையும், அடிமணைமெத்தையையும், டேராவின் கீழ் உள்ள பீரங்கி சுமக்கும் ஒட்டகத்தையும், பச்சை நிறமுள்ள அகன்ற துணியில் யானை உருவம் பொறிக்கப்பட்ட கொடிகளையும், தங்கம் வெள்ளி முலாம் பூசப்பட்ட பக்ஷிகளையும், பூ வேலைப்பாடு செய்யப்பட்ட தந்தப்பிடியுள்ள சனியன் என்ற குத்தாயுதத்தையும், மீன் உருவங்களுடன் வெல்வெட்டினுல் மூடப்பட்ட ரஸமணி யானையையும், இவைகள் அனைத்தையும் ஷாஹஜி ராஜாவுக்குச் சன்மானமாக அளித்தார். இவைகள் எல்லாவற்றையும் பெற்றுக்கொண்டு அல்லியதில்ஷாவிடம் விடை பெற்றுக்கொண்டு, சாதாராவிற்குச் சென்று, தன் குடும்பத்துடன் சுகமாகக் காலங்கழித்துவந்தார்.

இனிமேல் சிவாஜி ராஜரின் புகழ் பரவியதை விவரிக்கிறேன். தன் தந்தை ஷாஹஜி ராஜா, அல்லியதில்ஷாவிடமிருந்து விடுதலையடையும்பொருட்டுத் தனக்குக் கிடைத்த இராஜ்யத்தைக்கூட விட்டுவிட்டு சாதாராவிற்கு வந்து தங்கியபிறகு, சிவாஜி ராஜா புரந்தர்கோட்டையில் இருந்தார். அவர் தன் மந்திரி சுவர்ணர் என்ற சோனுஜிபந்த் என்பவரை அழைத்துத் தனிமையில் சொல்லியதாவது :—

“நம் தந்தை ஒரு சூரராகவும் நல்லயோகமுடையவராகவும் இருக்கிறுர். அவர் செய்த வேலைகளும் மாசற்ற மனதுடன் செய்துவந்திருக்கிறுர். ஆனுல் அதில் சில அனுசிதம் இருப்பதாகத் தோன்றுகிறது. அது யாதெனில், முதன்முதலாக அவர் நிஜாம்ஷாவோடு கூடியிருந்தார். பிறகு அல்லியதில்ஷாவின் போதனையால் அவரிடம் வந்துசேர்ந்தார். திரும்ப, நிஜாம்ஷாவின் அழைப்பிற்கிணங்க அவரிடம் சென்றுர். பிறகும் அல்லியதில்ஷா

விடமே வந்திருக்கிறார். இவ்விதமாக இரண்டு மூன்று தடவைகளாகப் போவதும் வருவதுமாக ஏற்பட்ட அவ்விதமான சேர்க்கையினால், ஒவ்வொருவரிடமும் சேர்ந்திருந்தவரையிலும், அவரவர்களுடைய வேலைகளை வஞ்சனையின்றியும் மனப்பூர்வமாகவும் செய்து வந்திருந்தும், ஒவ்வொருவருக்கும் இவர் கபடத்துடன் நடக்கிறார் என்று தோன்றும்படி ஆகிவிட்டது. அதனால் நம்மவர் என்று விசுவசிக்க ஒரு இடமும் இல்லாமற் போய் விட்டது.

"அவரவர்கள் தங்கள் காரியங்களைத் தாங்களே செய்து கொள்ள முடியாத சமயத்தில் இவரைத் தனதாக்கொண்டு, காரியங்களை முடித்துக்கொண்டு அதற்குத்தகுந்தவாறு மரியாதைகளையும், வெகுமானங்களையும் வழங்குவதோடு நின்றுவிட்டார்கள். அவ்விதமே அவரும் மனப்பூர்வமாகத் தம்முடைய காரியமாகக் கருதி ஒன்றையும் செய்யவில்லை. பெரிய மனிதராக இருப்பவர் ஒருவருடன் சிநேகம் செய்தால், அவரிடம் மனமாறுதலுக்கு இடங்கொடுக்கக்கூடாது. அவ்விதம் ஒருக்கால் மனமாற்றம் ஏற்பட்டுவிட்டால், மீண்டும் அவருடன் சேரக் கூடாது. இஃது ஓர் பிரசித்திபெற்ற நீதியாயிருக்க, நம் தந்தை அழைப்பு அனுப்பியவர்களோடெல்லாம் பழகி வந்திருக்கிறார். அப்படி இருந்தும், அவரது வலிமையாலும், சூரத்தனத்தாலும், வஞ்சனையின்றிக் காரியங்களைச்செய்ததினால் ஏற்பட்ட கடவுள் கிருபையாலும் நம் தந்தையானவர், கபடமான முகம்மதியர்களிடமிருந்து காப்பாற்றப்பட்டார். நாம் மிக்கப் பிரயாசையின்பேரில் கைப்பற்றிய சிம்ம கட்கோட்டையையும், அவரால் மிகப்பிரயாசையுடன் சம்பாதிக்கப்பட்ட பெங்களூரையும், முகம்மதியர்களிடம் ஒப்படைத்துவிட்டு, சதாராவில் வந்து தங்கி இருக்கிறார். இனிமேல் நம் அறிவிற்குத் தோன்றியபடி நடக்கவேண்டும். அல்லிய தில்ஷாவுக்காக நம் தந்தை மிக்க பிரயாசைப்பட்டிருக்கிறார். அவ்வாறிருந்தும் அவர் மனதுக்கு நாம் இப்போது ஒரு பாரமாகத் தோன்றுகிறோம். நம்மை வீழ்த்திவிடவேண்டும் என்று நினைக்கிறார்.

"அதுபோலவே நிஜாம்ஷாவின் இராஜ்யத்தைப் பிடித்துக் கொண்டு, தேவகிரி துர்க்கத்தில் இருக்கும் ஔரங்கசீப்பிற்கும் நாம் ஒரு முள்ளைப் போல் தோன்றுகிறோம். அவரும் அவ் விதமே நம்மை வீழ்த்திவிடவேண்டுமென்று நினைக்கிறார். இந்த இரண்டு பெரிய சத்துருக்களிடையே நாம் புரந்தர் கட்டில் இருந்துகொண்டு இராஜ்யத்தைப் பரிபாலிப்ப தென்பது ஒரு முடியாத காரியம். என்றைக்காவது ஒரு நாள் நம்மை ஏமாற்றி மூழ்கடித்து விடுவார்கள். இதன் பொருட்டு நாம் வெளியில் போய் இவ்விருவர்களையும் எதிர்த்தால்தான் நமது வாழ்வு நிலை பெற முடியும். இந்த ஏற்பாடு உங்களுக்குப் பிடித்தமாக இருக் கிறதா?" என்று கேட்டார். அதற்கு அவர், "மகராஜா! தாங்கள் சொல்லிய விஷயங்கள் அத்தனையும் செய்தே தீரவேண் டும். கடவுள் நமக்கு உதவியும் அருளும் புரிவாராக!" என்று பதிலளித்தார்.

அதன் பிறகு மகாராஜா சிவாஜி, தன் படைகளின் அணி வகுப்புக்களுடன் எதிரிகளின்மீது படை எடுக்க முயன்றார். இவ்விதமாக முதன் முதலில் இவ்விருவர்களும் பிரயாசைப்பட் டும், அவர்களுடைய காரியம் உடனே கைகூடக்கூடியதாக இல்லை. ஆகையால் ஒரு பலமான இடத்தில் இருந்துகொண்டு பிறகு மேற் கொண்டு செய்யவேண்டிய ஏற்பாட்டிற்குப் பிரவேசிக்க வேண்டி இருந்தது. அதற்காக அந்த இடத்திலேயே இருந்துகொண்டு, மேல் நடத்தவேண்டிய ஏற்பாடுகளுக்காகச் சரியான இடத்தைப் பற்றி யோசித்தார். மேற்குப் பிரதேசமாகிய விராட தேசத்தில் சாக பர்வத்தின் தாழ்வரையில் மேற்கு சமுத்திர தீரத்திற்கு அரு கில் லோஹபர்வத பிராந்தியத்து பிரதாபகட்டிற்கு சமீபமாக, ஜெயவல்லி என்ற நகரம் இருக்கிறது. அது மிகவும் பலம் பொருந்திய இடம். ஒருவரும் எளிதில் நெருங்க முடியாத மிக்க உயரத்திலும், பாதைகள் மிக்க பள்ளத்தாக்குகளுடனும் இருந்த தால், அதன் வழியாக எந்தக் கட்சி எதிரிகளாலும் கடந்து வர முடியாத பாதையாக இருந்தது. தவிர இடையில் இருக்கும் பெரும் மலைக்கணவாய்களைத் தாண்டிப் போவதென்றால் வழியில்

இருக்கும் அநேக அரசர்கள் அல்லியதில்ஷாவிற்குக் குண்டுகளின் மரியாதையைக் கொடுப்பார்களாகையால், அவர்கள் எல்லோரையும் கொன்றுதான் அவ்விடங்களைப் பிடிக்கவேண்டும். இந்தக் காரணங்களைக்கொண்டு ஜெயவல்லி நகரத்தை நிச்சயித்து, இதற்காக முதலில் தாம் பிடித்த சிம்மகட் கோட்டையை அல்லிய தில்ஷாவிடம் ஷாஹஜி ராஜாவின் விடுதலைக்காக விடப்பட்டதை, மறுப்டியும் பிடித்துக்கொண்டு, கோட்டையில் வேண்டிய எல்லாப் பொருள்களையும் சேகரித்து நிரப்பி, வேண்டிய சேனைகளைச் சேர்த்து, காவல் காப்பதற்காகவும் கண்காணிப்பிற்காகவும் வீரர்களை நியமித்துத் தன்னுடன் கொண்டுபோவதற்காகச் சேனைகளையும், கத்திப் படைகளையும், குதிரைப் படைகளையும் பொறுக்கி எடுத்துத், தன் பல்லக்கிற்கு வேண்டிய பாதசாரி சேனைகளையும் தேர்ந்தெடுத்துப் பிரயாணத்தின்போது, தனக்குப் பின்னால் உணவு முதலிய பொருள்கள் அனுப்பவேண்டிய அவசியமில்லாமல் இருப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளையும் செய்து, அநேக திரவிய தக்ஷிணைகளுடன் யாத்ரா தானம் செய்து, தேவதைகளுக்குப் பிரார்த்தனையும், குல தேவதைக்கு ஆராதனையும் செய்தார். பிரயாணத்திற்கு முன் அவருடைய கனவில் குலதெய்வம் பிரத்தியக்ஷமாகி, அவர் ஜெயம் அடைவதற்கான அறிகுறிகளைக் காட்டி மறைந்தது. அவரும் ஜெயபேரிகை அடித்து நல்ல சுப முகூர்த்த தினமாகிய விஜயதசமி தினத்தில் யுத்த சன்னத்தராகப் புறப்பட்டார். ஏனெனில், போன்சலே வம்சத்தில் விஜயதசமியே ஜெயம் கொடுக்கும் தினம் என்ற பரம்பரை வழக்கம் இருந்து வருகிறது. அப்பொழுது நல்ல சகுனங்களும் தோன்றின. அந்த நல்ல சகுனத்தில் சுபமுகூர்த்தத்தில் படைகளை அணிவகுத்துப் புறப்பட்டுப் போகும் பொழுது மலைநெருக்கமுள்ள பாதைகளையும், அடர்ந்த காடுகளையும், இடையிடையே மலைகளுக்கு இடையில் உள்ள காடுகளையும், தேசாதிபதிகளையும், கோட்டை யதிபதிகளையும், பாளையக்காரர்களையும், ஜமேதார்களையும், புறப்பட்டதிலிருந்து ஜெயவல்லி நகரத்தை அடையும் வரையில் வென்றும், சென்ற இடத்தை விட்டு ஓடிப்போனவர்களைத் தவிர, மற்றவர்களைப் பிடித்தும், சிலரை சிக்ஷித்தும்,

சிலரை விடுதலையாக்கியும், சிறையிலடைக்க வேண்டியவர்களை அவரவர்களுடைய தகுதிக்கேற்ற இடங்களில் வைத்தும் வந்தார். இவர்களில் பெரும் அரசர்களான பாஜி ராஜா, கிருஷ்ண ராஜா, ஜனக ராஜா, சந்திர ராஜா, இந்நான்கு பேரையும் ஜெயித்து, ஜெயிக்கப்பட்ட இராஜ்யத்தில் மிக்க தேர்ச்சியும் விசுவாசமும் உள்ள தன் பிரபுக்களில் சிலரை நியமித்துவிட்டுத் தான் ஜெயவல்லி நகரை யடைந்தார். அந்நகரத்தின் பெருமையைப்பற்றிச் சிறிது அறிந்துகொள்ளுவோம்.

சிம்ம பர்வதத்தின் உச்சியினின்றும் இறங்குகிற மலைச் சரிவிற்கு ரணதோண்டி காட் என்று பெயர். இந்தக் கணவாயின் பலம் பிரசித்தி பெற்றது. இதிலிருந்து இறங்கி ஒத்தையடிப் பதை வழியாக வெகு தூரம் சென்று லோஹபர்வதக் குன்றின் மேல் ஏறிக் கீழே பார்த்தால் முழுவதும் அடர்ந்த காடுகள். அவ்வனத்தில் சூரிய கிரணம் பூமியில் விழுந்து இருப்பதைத் தேடிப் பார்த்தாலும் மாட்டின் குளம்பு அளவுகூடப் பார்க்கக் கிடைக்காது. காரிருள் படர்ந்த அடர்ந்த காடுகளால் நாலு பக்கமும் சூழப்பட்டு ஜெயவல்லி நகரம் தோன்றுகிறது. அந்நகரத்தின் சமீபத்தில் பிரதாபகிரி துர்க்கமும் இருக்கிறது. அதை ராமச்சந்திர ராஜா என்பவர் ஜெயித்து ஆண்டு வந்தார். அவ்வரசனையும் இவர் துரத்தியடித்து விட்டு அதைக் கைப்பற்றி அவ்விடத்திலும், பிரதாப துர்க்கத்திலும் பலமான சைன்னியங்களை வைத்தார். அப்பால் சென்று மேற்குச் சமுத்திரத் தீரத்தில் இறங்கிச் சமுத்திரத்தில் கொஞ்ச தூரத்திற்கப்பால் ஒரு கோட்டையை உறுதியாகக் கட்டி அதற்கு சிவ லங்கா என்று பெயர் வைத்தும், அந்தச் சிவ லங்கா கோட்டையில் ஜனங்கள் குடியேற வசதிகளை ஏற்படுத்தியும், இரத்தினக் கற்களால் இழைக்கப்பட்ட சிம்மாசனம் ஒன்றைச் செய்து அதில் தான் அமர்ந்தும், சிவ சகம் என்ற ஒரு சகாப்தத்தை ஏற்படுத்தி, கணக்குகளில் எல்லாவற்றிலும் சிவசகத்தை எழுதும்படி தன் தேச முழுவதும் கட்டளை இட்டுத் தானும் அவ்விடத்திலேயே தங்கி இருந்தார். ஜெயவல்லி நகரத்தின் அரசனான சந்திர ராஜா ஓடிப்போய் விட்டார்.

அவர் அல்லியதில்ஷாவிடம் சென்று சிவாஜி ராஜாவின் சௌகர்யத்தையும், கியாதியையும், வீரத்தையும் பற்றிய எல்லா விஷயங்களையும் அறிவித்தார். அதைக்கேட்டு அல்லியதில்ஷா மிகவும் ஆச்சரியம் அடைந்தார். இதுவரையில் சிவாஜி ராஜா எந்த இடத்தில் இருந்தார் என்பதுகூடத் தெரியாமலிருந்தது. இப்போது அவர் இத்தனை பிரபலமடைந்ததைக் கேள்விப்பட்டு, எவ்விதமாவது சிவாஜி ராஜாவைத்தொலைத்துவிடவேண்டும் என்று நினைத்தார். அவ்விதம் செய்யாவிடில் தன்னுடைய ஆதிபத்தியம் நிலைப்பது கடினம் என்று திடமான யோசனை செய்தார். அவர் தன்னுடைய பனிரெண்டு மந்திரிகளில் ஒருவராகிய அப்சல்கான் என்னும் • முக்கியமான மந்திரியை வரவழைத்தார். அவரை அப்துல்கான் என்றும் அழைப்பதுண்டு. அவர் வந்ததும் அவரிடம் அறிவித்ததாவது :— தாங்கள் பாதுஷாவுக்கு மிகவும் வேண்டியவர். அவர் ஆளுகையில் அநேக வேலைகளைச்செய்திருக்கிறீர்கள். அநேக இடங்களையும் பிடித்துக் கொடுத்திருக்கிறீர்கள், "தங்களால் பாதுஷாவிற்கு நல்ல கியாதியும் ஏற்பட்டிருக்கிறது இப்பொழுது ஷாஹஜியின் மகனான சிவாஜி மிகவும் உன்மத்தனாகி தன் தந்தையின் வார்த்தையையும் கேளாது, தானாக அதிகாரத்தை மீறி, பாதுஷாவின் இடங்களைப் பிடித்துக் கொண்டும், பாதுஷாவின் கஜானாவைக் கொள்ளையடித்த திரவியத்தைக்கொண்டு பாஜி ராஜா, கிருஷ்ண ராஜா, ஜனக ராஜா முதலான எல்லோருடைய இடங்களையும் பிடித்து அவைகளைப் பலப்படுத்திக்கொண்டும், அதற்கப்பால் உள்ள சந்திர ராஜாவின் கோட்டையாகிய ஜெயவல்லி என்ற ஜாவலிக்கோட்டையை ஆக்ரமித்துக்கொண்டும், சமுத்திர தீரத்தில் கோட்டையைக் கட்டிக்கொண்டும், அதற்கு சிவலங்கா என்று பெயரிட்டும், இரத்தினங்களால் இழைக்கப்பட்ட சிம்மாசனம் செய்து, தான் அதில் உட்கார்ந்தும், தன் சகம் என்ற வருஷத்தை ஆரம்பித்தும் இருக்கிறான். மேலும் அவன் எதுவும் செய்யத்துணிந்தவன். இதற்காகத் தாங்கள் வேண்டிய படைகளையும் பொருள்களையும் உங்களுக்கு சமானமான பதினொரு மந்திரிகளையும் தங்களுடன் அழைத்துச்சென்று புத்திசாலித்தனமாக சிவாஜி ராஜாவை உயிருடன் பிடித்தாவது அல்லது கொன்றாவது வரவேண்டும்.

அவ்விதம் நாம் செய்யாவிடில் நாம் நிலைத்துநிற்க முடியாது,'' என்று சொல்லியதும் அப்சல்கான் அதனை ஏற்றுக்கொண்டு, எல்லாச் சைனியங்களையும் பதினொரு மந்திரிகளையும் கிருஷ்ணஜி பந்த் என்ற வக்கீலையும் தன்னுடன் அழைத்துப்போக ஆயத்த மானார்.

இதற்குள்ளாக சிவாஜி ராஜா புனவிற்கு வந்துசேர்ந்திருக் கிறார் என்ற செய்தி எட்டியது. அப்பொழுது சந்திர ராஜா அப்சல்கானிடம் தெரிவித்ததாவது:—“சிவாஜி ராஜா அங்கிருந்து புறப்பட்டுப் புனவிற்கு வந்தது ஒரு காரியத்திற்கு சௌகரியமாகி விட்டது. அது என்னவெனில், ஜாவலி கோட்டையில் அவர் இருந்தால் அவரைத் தேடிப்பிடிப்பது என்பது மிக்க கடினமான காரியமாகும். அவர் புனவிற்கு வந்திருப் பதனால், அவர் திரும்பி வருவதற்குள்ளாக நாம் பண்டராபுரத் தின் வழியாக யாதொரு தடையுமின்றி ஜாவலிக் கோட்டைக்குச் சென்று ஜாவலியையும் பிரதாப கோட்டையையும் பிடித்து விட்டால், அப்போது சிவாஜி தனிமையாகிவிடுவார். அதன் பிறகு அவரை நம் வசப்படுத்துவது சுலபமாக இருக்கும்'' என்று தன் யோசனையைத் தெரிவித்தார். சந்திர ராஜாவின் யோசனையும் யுக்தமானதுதான் என்று கருதி அப்சல்கான் சகல ஏற்பாடு களுடன் புறப்பட்டார். அப்பொழுது பலவிதமான அபசகுனங் களும் தோன்றின. பத்தேலஷ்கர் என்னும் பாதுஷா உட்காரும் பட்டத்து யானை அப்போது இறந்தது; முதல் அபசகுனம். அத னையும் அலக்ஷியம் செய்துவிட்டு அப்சல்கான் பண்டராபுரத்தின் மார்க்கமாக முதலில் ஜாவலிக் கோட்டை, பிரதாபக்கோட்டை இவ்விரண்டையும் பிடித்துக்கொண்டு, பிறகு சிவாஜி ராஜாவிடம் போகவேண்டும் என்ற யோசனையுடன் புறப்பட்டுச் சென்றார்.

அப்பொழுது சிவாஜி ராஜாவின் குல தெய்வமாகிய ஸ்ரீ ஜகதம்பிகை துளஜா பவானி, சிவாஜி ராஜாவிற்கு அன்று இர வில் பிரத்தியக்ஷமாகி, “அல்லியதில்ஷாவினால் விடப்பட்ட உத் திரவுகளின் பேரில் அப்சல்கான் உன்னை நயவஞ்சகமாகவும், கபடத்தனமாகவும், சிநேக பாவமாகச் சந்திப்பான். அதை

நம்பி ஏமாறாமல் இருக்கவேண்டும். இப்பொழுதே புனாவை விட்டு ஜாவலிக் கோட்டையை அடையவேண்டும். அவ்விடத்திலேயே அப்சல் கானின் சம்ஹாரத்திற்கு, நடக்கவேண்டிய காரியத்தை உன்னைக்கொண்டே செய்து கொள்ளுகிறேன்" என்று வாக்குக் கொடுத்தார். உடனே அரசர் எழுந்திருந்து தேவியை வணங்கினார். தேவி மறைந்த பிறகு, தாம் விழித்திருந்து, கனவைப் போன்று ஏற்பட்டிருக்கிறதே என்றும் மனதில் நினைத்தவாறு, குலதேவதை பிரத்தியக்ஷமாகி வருங்காலத்தைப் பற்றிய விஷயத்தை அறிவித்ததையும், நினைத்து, சந்தோஷம் அடைந்தார்.

அவர் உடனே புனா, பிராந்தியத்துக் கோட்டைகளையும், துர்க்கங்களையும் பலப்படுத்திவிட்டு தான் ஜாவலிக் கோட்டைக்குப் பிரயாணமானார். அப்பொழுது வழியில் ஆங்காங்குள்ள கோட்டைகளில் இருந்த சர்தார் (பிரபு)களுக்கு இரகசியமாய் எச்சரிக்கை செய்து அவர்களிடம் உத்திரவு அளித்ததாவது:—

"அப்சல்கான் ஏராளமான சைன்னியங்களுடன் ஜாவலிக் கோட்டைக்கு பண்டராபுர மார்க்கமாகப் போய்க் கொண்டிருக்கிறார். அதற்குள்ளாக நாமும் போய்ச் சேர்ந்துவிடுவோம், அவர் நம்மை பேட்டிகாணச் சந்திக்கும்படி அழைப்பார். நாமும் அதன் பிரகாரமே ஏற்றுக்கொள்ளுவோம். நீங்களும் தங்கள் தங்களுடைய கோட்டைகளைச் சீர்ப்படுத்தியும், பலமுள்ளதாகச் செய்தும், சைன்னியங்களை மட்டும் காட்டிக் கொடுக்காமல் காடுகளில் பதுங்கி இருக்கும்படி செய்தும், வந்துகொண்டிருக்கும் அப்சல்கானையும் அவர் சைன்னியத்தையும் தாராளமாகப் போக விட்டுவிடவும். அதன் பிறகு ஜாவலியின் மைதானத்தில், நம் இருவர்களுடைய பேட்டி ஏற்படும் இடத்தில், உடன்படிக்கை ஏற்பட்டுப் பிறகு முறிவு ஏற்படும்போல் தோன்றிய அத்தருணத்திலேயே, ஓர் அடையாள நகாரா (முரசை) அடிப்போம். அந்தச் சத்தங் கேட்டவுடனே எல்லா சைன்னியங்களுடனும் வெளியில் புறப்பட்டு எல்லா மலைப்பாதைகளிலும், வளைத்துக் கொண்டு அவருடைய சைன்னியங்களில் ஒரு ஆள்கூட உள்ளே

வராமல் தடுத்தும், உள்ளே இருப்பவர்களை வெளியில் விடாம லும், எதிரி ஆள் எவனை எங்கு காண்கிறீர்களோ அவ்விடத்தி லேயே கொன்றுவிட வேண்டியது. ஒருவனைக்கூட விடவேண் டியதில்லை,'' என்று சொல்லி, அச்சமயத்தில் இரகசியமாய் வாத்தியம் வாசிக்கும் முறையை அவர்களுக்குக் காண்பித்துத், தான் ஜாவலி போய்ச் சேர்ந்தார்.

பிறகு அப்சல்கான் ஆலோசனை செய்ததில், சிவாஜி ராஜா, ஜாவலியை அடைந்து விட்டார் என்ற செய்தியைத் தெரிந்து, பண்டரீபுரத்தின் மார்க்கமாகச் செல்லும் அவர் திரும்பிப் பக் கத்திலுள்ள ஸ்ரீ விட்டோபாவின் விக்கிரகத்தை உபத்திரவஞ் செய்யவேண்டுமென்று எண்ணினார். அவருடைய கண்ணிற்கு ஸ்ரீ விட்டோபாவின் விக்கிரஹம் அந்தர்த் தானமாகிக் கண் ணிற்குப் புலப்படாமல் இருந்தது. அதன் பிறகு துளஜா புரத் திற்குச் சென்று துளஜா பவானியின் விக்கிரகத்தையும் உபத் திரவஞ் செய்ய எண்ணினார். அங்கும் அவ்விதமே விக்கிரஹம் அந்தர்த் தானமாகிவிட்டது. அங்கிருந்து புறப்பட்டு ஸ்ரீ சம்புவிலுள்ள சம்பு மகாதேவரையும் உபத்திரவம் செய்ய ஆரம் பித்தார். அவருடன் கூட ஆறு மராட்டிய மந்திரிகள் இருந் தார்கள். அவர்கள் வந்து மறுத்தார்கள். அதன் காரணமாக அங்கிருந்து புறப்பட்டுப் பல்லிவனம் என்ற பெயருடைய பாலிக் கோட்டைக்கு வந்தார். அவ்விடத்திலும் சில விசேஷ திருஷ் டாந்தங்களைக் காட்டியதினால் உபத்திரவஞ் செய்யாமல் அவ்வி டத்திலேயே தங்கி யிருந்துவிட்டார்.

அப்சல்கான் அங்கிருந்தபடியே சிவாஜி ராஜாவின் பேருக்கு ஒரு கடிதம் எழுதி அதில் அவரைப் பேட்டிகாண வரும்படியாக கிஷ்ணாஜிபந்த் வக்கீலிடம் சொல்லியனுப்பினார். அக்கடிதத்தில் எழுதி இருந்ததாவது :—

"தாங்கள் எப்பேர்ப்பட்டவர்களாக இருந்தாலும், அல்லிய தில்ஷா பாதுஷாவிற்கு விரோதத்தைச் செய்திருக்கிறீர்கள். தங்களுடைய உறவினர்கள் அவ்விதமில்லை. தங்களுடைய

தந்தை ஷாஹஜி ராஜா செய்த காரியங்களையும் தாங்கள் கேள்விப் பட்டிருப்பீர்கள். இப்பொழுது தாங்கள் பாதுஷாவின் கோட்டைகள் எல்லாவற்றையும் பிடித்துக் கொண்டீர்கள். மேலும் பாதுஷாவின் சுபேதார்களையும் கொன்று விட்டீர்கள். பாதுஷாவின் கஜானாவைக் கொள்ளையடித்தீர்கள். ரத்தினங்களால் இழைக்கப்பட்ட சிம்மாசனம் ஒன்று செய்து, அதன்மேல் பாதுஷாவாகி உட்காருகிறீர்கள் இதைத் தவிர முகம்மதிய மதத்தைப் பற்றி நிந்திக்கிறீர்கள். ஆங்காங்குள்ள மசூதிகளை இடிக்கிறீர்கள். இவ்விதமான பலவித துவேஷங்களை எழுப்புகிறீர்கள். ஆகையினால் தாங்கள் பாதுஷாவால் குற்றவாளியாகக் கருதப்படுகிறீர்கள். அல்லியதில்ஷாவின் மனதில் உங்களைப் பல விதங்களிலும், கஷ்டப்படுத்த வேண்டுமென்று தோன்றுகிறது. ஆனால் ஷாஹஜி ராஜாவின் சிநேகத்திற்காக பாதுஷாவிடம் அநேக விதமாகச் சொல்லித் தாங்கள் பிடித்த கோட்டைகளாகிய சிம்மகட் கோட்டை, பீமரதி, புரந்தர் கோட்டை, ஜெயவல்லி, இவைகளை எல்லாம் விட்டுவிட வேண்டியது என்றும், முன்போல் தாங்கள் தங்கள் தேசத்தில் சுகமாக இருக்கவேண்டியது என்றும், தீர்மானம் செய்துகொண்டு வந்திருக்கிறோம். அதற்காகத் தங்களுக்கும் எனக்கும் பேட்டி ஏற்பட்ட பிறகு பாதுஷாவிற்கும் தெரிவிக்கப்படும்" என்று கடிதம் எழுதி, கிஷ்ணாஜி பந்தின் மூலமாக அனுப்பி, கபட யுத்தியையும் தெரிவித்து சிவாஜி ராஜாவிடம் அனுப்பினார்.

கிஷ்ணாஜி பந்த் சிவாஜி ராஜாவிடம் வந்து ஆப்தனைப் போன்று பேசி பேட்டியின் விவரத்தையும் சொன்னார். அதை சிவாஜி ராஜா அங்கீகரித்தும் "நான் இச்சித்த காரியத்தைத் தான் அப்சல்கானும் சொல்லியனுப்பி இருக்கிறார். அது மிக உத்தமமாகி விட்டது. கான் சாஹேப் இந்த ஜெயவல்லி நகரம், ஜாவலிக் கோட்டை இவைகளிலுள்ள பரந்த இடங்களையும், அங்குள்ள காடுகளில் உள்ள கோட்டை முதலியவைகளையும் பார்த்திருக்க மாட்டார். அதனால் அவர் இங்கேயே வந்தால் பேட்டியும், பேச்சு வார்த்தைகளும் முடித்துக்கொள்ளலாம்" என்று சொல்லியனுப்பினார். இச்செய்தியை கிஷ்ணாஜி பந்த் வக்கீல்,

வந்து தெரிவித்தவுடன், கான் சாஹேப் மிக்க சந்தோஷம் அடைந்து சேனைகளுடன் புறப்பட்டார். அப்பொழுது இவருடன் இருந்த மந்திரிகள், அந்த இடத்திற்குப் போகக் கூடாதென்றும், சிவாஜி மஹாராஜா சாமான்யமானவர் அல்ல என்பதையும் கபடமாகக் காரியங்களைச் செய்வார் என்றும், பலவிதமாகச் சொன்னார்கள். மேலும் பல அபசகுணங்களும் தோன்றின. எதையும் மதியாது லோஹ பர்வதத்தின் அடிவாரத்தில் உள்ள ஜாவலியின் வனக்கோட்டையின் வெளிப் புறத்தில் இறங்கி, சிவாஜி ராஜாவிற்கும் சொல்லியனுப்பினர். அப்பொழுது சிவாஜி ராஜா மலைப்பாதைகளனைத்தையும் அடைத்தும், அப்பாலுள்ள மலைப்பாதைகளில் மனிதர்களை வரவொட்டாதபடி தடுப்பதற்காக எல்லா விடங்களிலும் மரங்களை வெட்டிக் குறுக்கே போட்டும், அப்சல்கானின் ஆட்களுக்குத் தாங்கள் வந்த வழிகளைத் தெரிந்து கொள்ளாதபடி செய்தும், தன் கோட்டைகள் எல்லாவற்றையும் பலமுள்ளதாகச் செய்தும், புனா பிராந்தியங்களில் சம்பாதிக்கப் பட்ட புதிய இடங்களிலுள்ள தன் பிரதிநிதிகளுக்குத் தன் அறிவிப்பு டமாரத்தை அடித்தவுடனேயே தாமதியாது நாலா பக்கங்களிலும் உள்ள படைகளெல்லாம் ஒன்று சேர்ந்து புறப்பட்டு அப்சல்கானின் ஆட்களை ஒருவர்கூட விடாமல் கொன்றுவிட வேண்டுமென்று உத்திரவிட்டும், தான் வனதுர்க்கத்தின் உட்பிரதேசத்திலுள்ள பரந்த இடத்தில் கூடி அப்சல்கானைப் பேட்டி காண அழைப்பு அனுப்பினர்.

இச்சமயத்தில் சிவாஜி ராஜாவிற்கு ஒரு செய்தி கிடைத்தது. அது யாதெனில், அப்சல்கான் விஜாபுரத்தைவிட்டுப் புறப்பட்டு வரும் வழியில், சிவாஜியின் புதிய தேசங்களைப் பிடித்துக் கொள்ளையடித்து வந்ததாயும், தன்னுடைய மூத்த சகோதரர் சாம்பாஜி ராஜா சில படைகளைக்கொண்டு யுத்தத்திற்குப் போனதாயும், அவரைச் சுற்றி வளைத்துக்கொண்டு நேர்மையற்ற வழியில் அவரைச் சகம் 1580 விகாரி வருடத்தில் கொன்றுவிட்டதாகவும் இச்செய்தி ஷாஹஜி ராஜாவிற்குத் தெரியவந்ததென்றும், தன் மகனுடைய ஈமச்சடங்குகளை எல்லாம் செய்து முடித்துப் பிறகு அதே வியாகூலத்தினால் மனமொடிந்து, ஷாஹஜிராஜாவும்

அடுத்த இரண்டு மாதங்களுக்குள் தெய்வகதி அடைந்தார் என்றும், அவருடைய உத்தரகிரியைகளை எகோஜி ராஜா செய்தார் என்றும், மாதுஸ்ரீ ஜிஜாயி ஆவு சாஹேப் (சிவாஜியின் தாயார்) சிவாஜியை பேட்டி காண வந்திருப்பதாகவும் தெரிய வந்தது. அப்பொழுது சிவாஜி ராஜா மிகவும் துக்கம் நிறைந்தவராய் ஜிஜாயி ஆவு சாஹேபை வரவேற்று, பேட்டிகண்டு, அவருக்கு ஆறுதல் மொழிகளைச் சொல்லி, ஆவு சாஹேபைப் பிரதாப கட் கோட்டையில் வைத்துவிட்டு, சம்பாஜி ராஜாவைக் கொன்ற பழிக்குப் பழி வாங்குவதாக மிக்க கோபத்துடனிருக்கும் பொழுது, அப்சல்கானும் ஒரு பல்லக்கில் உட்கார்ந்து, கூட கிஷ்ணஜி பந்த் ஹேஜீவே, மற்றும் நாலைந்து மெய்க்காவலர்கள், இவர்களுடன் சந்திக்கு மிடத்திற்கு வந்து சேர்ந்தார். சிவாஜி ராஜாவும் அவ்விதமே இரண்டு மூன்று ஆட்களுடன் பேட்டி காண வந்தார். இருவரும் சந்தித்துப் பேசிக்கொண்டிருக்கும் போது, அப்சல்கான் சிவாஜி ராஜாவைத் தழுவிப் பிடித்துத் தன் இடுப்பிலுள்ள பிச்சுவாவை எடுத்து, சிவாஜியின் வயிற்றில் இரண்டு மூன்று தடவை குத்தினர். ஆனல், சிவாஜி ராஜா, தன் உடுப்புகளுக்குள் மெல்லிய இரும்பு கவசம் தரித்திருந்தார். அதன் காரணமாக அவருடைய வயிற்றில் செலுத்திய பிச்சுவா வீணாயிற்று. இதற்குள்ளாக அரசர் தன் கைலாகவத்தைக் காட்டி, இடது கையிலிருந்த புலி நகத்தினல் அப்சல் கானின் வயிற்றில் குத்தினர். அதனல் வயிறு கிழிக்கப்பட்டுக் குடல் வெளியில் சரிந்து, அப்சல்கான் கெதி கலங்கியவனகிக் காயத்தைத் தன் மேலுள்ள போர்வையினல் இறுகக் கட்டிக்கொண்டு அவர் மீது போர் தொடுத்தார். அரசர் தன் கையிலிருந்த *பட்டாக் கத்தியினல் அப்சல்கானின் அடிகளை எல்லாம் தடுத்து அவரைத் தாக்கினர். அவர் கத்தியின் வெட்டு அப்சல்கானின் இடது புஜத்தின் மேலிருந்து வலது புஜத்தின் கீழ்வரையில் பட்டதினல் அவர் மூர்ச்சையடைந்து கீழே விழுந்தார். சாலிவாகன

*'பட்டா' என்னும் கத்தி நீண்டு, இருபுறமும் கூர் உள்ளதாய் முன்கை முழுவதும் மறைக்கும் பிடியுள்ளதாகவும் இருக்கும்.—'மோல்ஸ்வர்த்' மகாராஷ்டிர அகராதி.

சகாப்தம் 1581 விகாரி வருடம் மார்கழி மாதம் வளர்பிறை சப்தமி திதி, வியாழக்கிழமை பிற்பகல் அப்சல்கான் இறந்தார்.

அப்சல்கான் இறந்த பிறகு, அப்சல் கானின் கையிலிருந்த பட்டாக் கத்தியை வக்கீல் கிஷ்ணஜி பந்த் கையிலெடுத்துக் கொண்டு, சிவாஜியுடன் சண்டை செய்ய ஆரம்பித்தார். அப்பொழுது அரசர் சொல்லியதாவது:—"நீர் ஒரு பிராமணராக இருக்கிறீர். உம்மைக் கொல்லுவது நமக்கு தர்மமல்ல! நாம் பிராமணர்களைப் பூஜிக்கிறோம். நமக்கு குரு தேவருடைய ஸ்தானமும் பிராமணர்களாகையால், கையிலுள்ள கத்தியைப் போட்டு விட்டு உமக்குப் போவதற்கு இஷ்டமிருந்தால் சுகமாகப் போகலாம். உமக்காகப் பாதைகளைத் திறந்து விடுகிறேன். இல்லாவிடில், இவ்விடத்திலேயே தங்குவதாக இருந்தாலும் அன்ன வஸ்திரங்களைக் கொடுத்துக் காப்பாற்றுகிறேன்" என்றார். இவ்வாறு அரசர் அவருக்குப் பலவிதத்திலும் சொல்லியும், அப்பிராமணர் கேளாதவராய் அவருடன் சண்டை செய்யும் நோக்கத்துடனேயே இருந்து மேலும் மேலும் தாக்கினர். அவைகளை எல்லாம் தாங்கிக் கொண்டு அரசர் திரும்பி நடக்கலானர். அப்பொழுது அரசரின் உண்மையான மெய்க் காவலனுகிய ஒருவன் அதனைப் பார்த்துச் சகியாதவனாய் இப்பிராமணர் அடங்கொண்டு அரசனை விடாது தொந்திரவு செய்கிறார்;—எதிர்பாராது அடி தவறி அரசர்மீது படுமேயாகில், கோடிக்கணக்கானவர்களை வைத்துப் போஷிக்கும் அரசர் இறந்துவிடுவார், என்று கருதியவனாய்த் தன் ஆயுதத்தை எடுத்துக்கொண்டு அடிக்கும் பிராமணரை யாதொரு தடையுமின்றி கொல்லலாம் என்று தீர்மானித்தவனாய்க் கிஷ்ணஜி பந்தை அடித்துக் கொன்றுவிட்டான். அந்த பிராமணர் இறந்தவுடன், சிவாஜி ராஜா முன்பு சொல்லி இருந்தபடி டமாரத்தை முழங்கும்படி செய்தார். அந்த நாதத்தைக் கேட்டவுடன் ஆங்காங்குள்ளவர்கள் ஆவேசங்கொண்டு, அப்சல் கானின் சேனைகள் எல்லாவற்றையும் கொன்றும், மந்திரிகளை எல்லாம் கைதி செய்தும், சேனையிலுள்ள யானைகள், குதிரைகள் எல்லாவற்றையும் கொள்ளையடித்தும், அரசரிடம் கொண்டுவந்து ஒப்படைத்தார்கள். சிவாஜி ராஜா, பிடிபட்ட மந்திரிகளை மரி

யாதையுடனும், கௌரவத்துடனும் அனுப்பி விட்டார். அம் மந்திரிகளுள் சிலர், அல்லியதில்ஷாவிடம் சென்று நடந்த விஷயங்கள் அனைத்தையும் முறையிட்டனர். அல்லியதில்ஷா, அப்ஸல்கானைப் பற்றிய சேதியைக் கேட்டு இரண்டு நாழிகைவரை, தன் இருப்பிடத்திலேயே வாடிய முகத்துடன் காணப்பட்டார்.

ஏராளமான சேனைகளும், பிரபுக்களும் அழிந்து விட்டார்களே என்ற விசனத்தில் மூழ்கி மறுபடியும் கோபங்கொண்டு சிவாஜி ராஜாவுடன் இரண்டாந் தடவையாகப் போர் செய்ய வேண்டுமென்று படைகளைச் சேகரிக்க ஆரம்பித்தார்.

சிவாஜி ராஜா, முன்பு அப்சல்கானைக் கொல்லும் பொருட்டு ஜாவலிக்குப் போகும்பொழுது, புனு பிராந்தியத்து இராஜ்யங்கள் எல்லாவற்றையும் நேதாஜி என்னும் சேனாதிபதியிடம் ஒப்படைத்து விட்டு, ஜாவல்லியில் அறிவிப்பு டமாரத்தை முழங்கிய சப்தத்தைக் கேட்டவுடனே நடைபெற வேண்டியதையும் சொல்லியிருந்தார். அந்த நேதாஜி என்னும் சேனாதிபதி அப்சல்கான் இறந்த செய்தி கேட்டு, அல்லியதில்ஷா மறுபடியும் யுத்தத்திற்குப் படைகளைச் சேர்த்துக் கொண்டிருப்பதையும் கேள்விப்பட்டுத் தன் கோட்டைகளை எல்லாம் பலப்படுத்திவிட்டுத் தானும் சிவாஜி ராஜாவிடம் ஜாவல்லிக்குப் போய்ச் சேர்ந்தார்.

அதன் பிறகு சிவாஜி ராஜா, சேனாதிபதி நேதாஜியைத் தன்னுடன் அழைத்துக்கொண்டு போய், அல்லியதில்ஷாவின் இடங்களை வளைத்துக்கொண்டார். மேற்கு நகரமாகிய சம்பகாவரசாவடு என்ற பட்டணத்தைக் கோட்டையுள்படக் கைப்பற்றியும், அதன் அதிகாரியாக இருந்தவரும் அல்லியதில்ஷாவின் பிரதிநிதியுமான ஹீலால்கானை வீழ்ச்சியடையும்படியும் செய்தார். அவரும் சுத்த மனதுடன் சிவாஜி ராஜாவிற்குக் கீழ்ப்படிந்து இருந்து வந்தார். சிவாஜி ராஜா அவரையும் தன்னுடன் அழைத்துக் கொண்டு, அல்லியதில்ஷாவின் இடங்களையும் டில்லி சக்ரவர்த்தியான ஔரங்கசீபின் இடங்களையும் பிடித்தார். அந்தக் கோட்டைகளின் பெயர்களாவன :— மாயாவணி, ராம்பூர், கல

தூதிகா, ஜயந்திகா, அஷ்டி, அஷ்டவட், வெல்லாப்பூர், உம்பர் காம், மஸூர், கரகாதாக், காவே, பல்லிகானே, ரலகன், நார் பட்டு, மூரன், கோக்பூர், கரவார் முதலான எல்லா ராச்சியங் களைக் கட்டியும், இதில் இருந்த பிரபுக்களில் சிலரை உடன் படிக்கையின் பேரில் விடுதலை செய்தும், சிலரைக் கொன்றும், சிலரைச் சிறையில் அடைத்தும், சில பெரும் அரசர்களை எல் லாம் பலப்படுத்திய இடங்களில் வைத்தும், தகுந்த ஏற்பாடு களைச் செய்தார். அதன் பிறகு சேனாபதி நேத்தாஜிவசம் சேனைகளைக் கொடுத்து, அல்லியதில்ஷாவின் இடங்களையும், டில்லி அரசனான ஔரங்கசீபுவின் இடங்களையும் பிடிக்கும்படி உத்தரவு கொடுத்து அனுப்பிவிட்டுத் தான் 'பனால் கட்' என்ற கோட்டையைப் பிடித்துக்கொள்ளும் பொருட்டுப் பனாலாவிற்கு வந்து போர் புரியலானார்.

இச்சண்டையில் கோட்டையில் உள்ளவர்கள் வெடிகுண்டு களால் தாக்கியும், ஈயத்தைக் காய்ச்சி ஊற்றியும், பல இடையூறு களைச் செய்தார்கள். சிவாஜி ராஜா இவைகள் ஒன்றையும் பொருட்படுத்தாது கோட்டைமீது ஏறிச் சண்டை செய்து, கோட்டையையும் பிடித்து உள்ளே இருந்த பிரபுக்களைக் கொன் றும், மீதி உள்ளவர்களை விரட்டி விட்டும், பனால் கட் கோட்டை யைக் கைப்பற்றிக்கொண்டு அங்கேயே தங்கி இருந்தார். இதைப் பற்றி முன்பே அல்லியதில்ஷா முடிவு செய்திருந்ததாவது :— "சிவாஜி ராஜா ஒரு சூரராக விளங்குகிறார். தற்சமயம் அவர் 'பிரதாப கட்' என்ற கோட்டையிலும் ஜயவல்லி பிரதேசத்திலும் இருந்து வருகிறார். அவை பூனா, 'பன்னால் கட்'டிற்குச் சமீப மாக இருப்பதால் அங்கும் அவர் வருவார். இந்த இடம் நமக்குப் பிரியமுள்ள சொத்தாக இருக்கிறது. ஒருவேளை 'பன்னால் கட்' சிவாஜி ராஜாவின் கையில் சிக்கினால் பிறகு நமக்கு மிகவும் கஷ்ட மேற்படும். ஆகையினால் அதைப் பாதுகாக்க வேண்டும்" என்று நினைத்தவராய், 'ருஸ்தும்கான்' என்னும் பிரபுவிடம் ஒரு பல மான சேனையைப் பாதுகாக்கும்பொருட்டு அனுப்பினார். ருஸ் தும் கான் வந்து சேருவதற்குள்ளாக சிவாஜி பன்னாலைக் கைப் பற்றி விட்டார். இச்செய்தியை ருஸ்தும்கான், அல்லியதில்ஷா

விற்கு எழுதியதினுல், அல்லியதில்ஷா மிகவும் துக்கமும் விசன முமடைந்தார்.

"மேலும் சிவாஜி ராஜா பன்னுலேயும் கைப்பற்றிவிட்டபடியால், இனி சிவாஜியை நம்மால் ஜெயிக்க முடியாது. மேலும் பல இராஜ்யங்களேப் பிடித்தும், பெருஞ் சேனைகளேத் திரட்டியும் இருக்கிறுர். ஆகையால் நம் ஒருவனுல் அவரை ஜெயிக்க முடியாது, என்று நினைத்து டில்லியிலுள்ள ஔரங்கசீபிற்குக் கடிதம் எழுதினுர்.

அது யாதெனில்:— 'ஷாஹஜி ராஜாவின் மகன் சிவாஜி ராஜா கொழுத்து, பலமடைந்து தங்களுடையதும் நம்முடையதுமான இடங்களேப் பிடித்து இருக்கிறுர். அது மட்டுமல்ல, நம் முகம்மதிய மதத்தினர் எவரைக் கண்டாலும் துன்புறுத்துகிறுர். மசூதிகளே எல்லாம் இடித்தும் அதில் கிடைத்த நவரத்தினங்களேக் கொண்டு ஒரு சிம்மாசனம் செய்து, அதில் தான் உட்கார்ந்துகொண்டும் தாமே பாதுஷாவென்று சொல்லிக்கொள்ளுகிறுர். தன் பெயரால் சிவசகம் (வருடம்) என்ற சகத்தை ஏற்படுத்தியிருக்கிறுர். இவ்விதம் மிகவும் மதோன்மத்தனுகி இருக்கிறுர். நம்முடைய பிடியில் அகப்படுவதில்லே. நம்முடைய பன்னுல் கட் என்ற கோட்டையைக் கைப்பற்றி இருக்கிறுர். இதற்காகத் தங்களுடைய சேனையை அனுப்பினுல், நம்முடைய சேனையையும் அதனுடன் சேர்த்து அனுப்பி, சிவாஜி ராஜாவை வழிக்குக் கொண்டு வருகிறேன்," என்று எழுதி யனுப்பினுர்.

ஔரங்கசீப் இக்கடிதத்தைக் கண்டவுடன் ஏராளமான முகலாய சேனைகளே ஜுல்ப்கார்கான் என்னும் பிரபுவசம் கொடுத்து அனுப்பினுர். இச்சேனைகள் வருவதற்கு முன்பே அல்லியதில்ஷா, பன்னுல் கோட்டையைக் காக்கும்பொருட்டு ருஸ்தும்கானே அனுப்பி இருந்தார். ஔரங்கசீபின் சேனைகளும் வந்து சேர்ந்தன. இச்செய்தியை அறிந்த சிவாஜி ராஜா, தன் சைன்னியத்துடன் வெளியில் புறப்பட்டுப் புனு பிராந்தியத்திற்கு வந்து, ஜுல்ப்கார் கான், ருஸ்தும்கான் இவ்விருவர்களுடைய படைகள்

எல்லாவற்றையும் திடீரெனத் தாக்கி சேனைகளை எல்லாம் அழித்து ஜுல்ப்கார் கானின் கொடியைப் பறித்துக்கொண்டார். இதனால் இவ்விருவர்களுடைய சைன்னியங்கள் முழுவதும் சின்னா பின்னமாக்கப்பட்டு ஜுல்ப்கார் கான் அபஜெயமடைந்து திரும்பிச் சென்றார்.

இரண்டாம் முறையாக ஜுல்ப்கார் கான் தன்னோடு தரியா கான், பத்தே கான், மூஸே கான் என்ற பெரிய பிரபுக்களையும் சேர்த்துக்கொண்டு பெரும் சைனியத்துடன் வந்தார். அவ்விதமே அல்லியதில்ஷா அனுப்பி இருந்த சேனையையும் தன்னுடன் கூட அழைத்து வந்திருந்தார். மறு முறையும் முன் போலவே சிவாஜி ராஜா வெளியில் புறப்பட்டுப் போர் புரிந்து சைனியங்களைச் சின்னா பின்னமாக்கிவிட்டார். அப்படியிருந்தும் ஜுல்ப்கார் கான் சேனைகளை நிறுத்திப் போர்புரிந்து வந்தார். இவ்விதமாக அவர் தன் சேனையுடனும் அல்லியதில்ஷாவின் சேனையுடனும் பதினாறு (16) தடவை யுத்தத்திற்கு வந்தார்.

இந்தப் பதினாறு தடவைகளிலும் சிவாஜி ராஜாவினால் எதிரியின் சேனைகளனைத்தும் அழிந்தன. இச்செய்தியை எஞ்சியிருந்த சேனைகளின் மூலமாகவும், அல்லியதில்ஷாவின் கடிதத்தின் மூலமாகவும் ஔரங்கசீப் அறிந்து, ஆத்திரமடைந்து, தற்சமயம் சிவாஜி ராஜா எங்கிருக்கிறார் என்று வினவினார். அப்பொழுது அவர் அருகில் இருந்தவர்கள் சொல்லியதாவது:—

"சிவாஜி ராஜா ஜெயவல்லி, சக்ராவதி இப்பிராந்தியங்களுடன் அநேக பாதுஷாவின் கோட்டைகள், நாடுகள் முதலானவைகளையும் பிடித்துக்கொண்டு பன்னால் கோட்டையையும் கைப்பற்றித் தானும் அவ்விடத்திலேயே வாசம் செய்து வருகிறார். அவருடைய சேனாபதியான நேதாஜி என்பவர் பாதுஷாவின் இடங்களாகிய (1) கபித்த காம், (2) பந்தர் காம், (3) மல்காம், (4) கெடல், (5) கோகார், (6) துத்தவாட், (7) சூரவட், (8) தாராவட், (9) போர்காம், (10) மதபல், (11) பாணுத், (12) கதம்வட், (13) ஹேறன்வட், (14) ராய்பாக், (15) துமைரிகா,

(16) காட்கிராம், (17) கமலாப்பூர், ((18) சித்ரகூட், (19) காராள் (20) காரயாவ், (21) சாம்காம், (22) சதமிரகட், (23) ஹரித்ரா, (24) க்ஷாஹிவட், (25) ஈவல், (26) கூனிகா, (27) மிரஜே, (28) ஹனுவல்லி, (29) மாதோல், (30) குணிக முதலிய இராஜ்யங்களையும் இன்னும் பல இடங்களையும் பிடித்திருக்கிறார். தவிர, அந்த நேதாஜி பாதுஷாவின் தேசங்களைக் கொள்ளையடித்தும், தீக்கிரையாக்கியும் மிகப் பிரபல மடைந்திருக்கிறார்" என்று அறிவித்தனர்.

இதனை அவர்கள் ஔரங்கசீபிடம் அறிவித்தவுடன், அவர் தன் பிரபுவான சாஸ்தா கானுடன் தன் உயர் குடும்பத்தைச் சேர்ந்த கினரியின் பிரபுவான சர்தார் மூஸேகான் பட்டாணியையும், கோட விட்டல்தாஸ் மராட்டா, பாட்டரு, கிர்ஜாஸல்தான், அமரசிம்ம மராட்டா, கோகாடே, ஷாதிவதிகான், சர்ஜேராவ் மராட்டா, ராஜேபகான், பதல்கான்பட்டான், ராமஸரு மராட்டா, காரதகப் கான், ஜெயமாத, கிருஷ்ண ராஜே, முதலியவர்களையும் அனுப்பினார். அவர்களுக்குக் கொடுத்த உத்திரவு யாதெனில்:—

"சிவாஜி ராஜாவினிடத்தில் நேதாஜி என்பவன், பாதுஷாவின் இடங்களில் செய்யும் தொந்தரவுகள் பதின்மடங்கு அதிகமாகி நமது பிராந்தியங்களில் தீ வைப்பதும், சூரையாடுவதுமாக இருந்து வருகிறது. அதனால் நீங்களும் புனா முதலிய இடங்களில் அவ்விதமே செய்து ஜயவல்லி, சக்ராவதி முதலிய பிராந்தியங்கள் எல்லாவற்றையும் கைப்பற்றி, பன்னாலிக்குச் சென்று சிவாஜி ராஜாவைத் தண்டிக்கவேண்டும்," என்று உத்திரவு கொடுக்கப்பட்டது. அவர்களும் அவ்வாறே தங்களுக்கு இடப்பட்ட உத்திரவிற்கு அதிகமாகவே அநேக இடங்களைக் கொளுத்தியும், கைப்பற்றிக்கொண்டும், சக்ராவதிப் பிராந்தியத்திற்குச் சென்றார்கள். இவ்விதமாக உத்திரவு இடப்பட்டு, பாதுஷாவின் மாமாவாகிய சாஸ்தாகான் புறப்படுகிறார் என்ற செய்தி அல்லியதில்ஷாவிற்குத் தெரிந்தவுடன் அவரும் ஒரு முடிவு செய்தார். அதாவது:—இப்பொழுது பன்னாலில் இருக்கும் சிவாஜிக்குத் தெரிந்ததும், அவர் புறப்பட்டு வந்து சாஸ்தாகானை வரமுடியா

மல் தடுத்து நிறுத்தி விடுவாராகையால் அவரைப் பன்னுலி லிருந்து வெளிக் கிளம்பாதபடி செய்யவேண்டும்" என்று முடிவு செய்து கன்னேலின் ஜோகர்கானுக்குக் கடிதம் எழுதியனுப்பிய தாவது :—"தாங்களும், வல்லிக்கான், பாட்ஷாயிகான், கோர் படே முதலிய பிரபுக்களும், பெரும் படை ஒன்றைக்கொண்டு பன்னுலிற்குச் சென்று போர் செய்து பன்னுலேயும் சிவாஜியை யும் கைப்பற்றி வரவேண்டியது" என்று எழுதியனுப்பினுர்.

அக்கடிதம் ஜோகர் கானுக்குக் கிடைத்தவுடன் மிக்க விரை வில் ஒரு சேனையையும், பிரபுக்களேயும் சேர்த்துக்கொண்டு பன் னுலில் இறங்கி, அக்கோட்டையை ஐந்து மாதங்கள் வரை முற் றுகை இட்டிருந்தார். அவ்விதமிருந்தும் சிவாஜி ராஜா எதிர்த் துச் சண்டை செய்துகொண்டிருந்தார். சாஸ்தாகான், ஔரங்க சீபிடமிருந்து கிளம்பியவர், சக்கராவதி பிராந்தியத்தில் சங்காம துர்க்கத்தைச் சுற்றி வளேத்துக்கொண்டு சண்டை செய்து கொண்டிருந்தார். அங்குள்ள சிவாஜியின் பிரதிநிதி சஸ்தா காணேக் கொல்லாமலேயே பெருந் சண்டை செய்து வந்தார். இவ்விதம் சிவாஜி ராஜா ஐந்து மாதங்களாகப் பன்னுலில் ஜோகர் கானின் முற்றுகையில் அகப்பட்டு யுத்தஞ் செய்துவரும் பொழுது, ராஜ மாதா ஜிஜாயி ஆவு சாஹேபும், அரசரும் தனித் தனியாக முற்றுகையிலேயே அகப்பட்டுக்கொண்டார்கள். மேலும் சாஸ்தாகான் சங்ராம்கட் கோட்டையையும் சக்ராவதி யையும் முற்றுகை செய்திருந்தார், அப்பொழுது ஜிஜாயி ஆவு சாஹேபுக்கு சிவாஜி ஒரே மகனுக இருப்பதால் அவரைப் பார்க்க வேண்டுமென்ற ஆவல் ஏற்பட்டது. எவ்வகையிலாவது அவரைப் பார்ப்பது என்று திடம் செய்துகொண்டனர்.

ஜிஜாயி ஆவுசாஹேபு சில சேனேகளேக்கொண்டு சிவாஜி ராஜா வை விடுவிக்கவேண்டும் என்ற எண்ணத்தின்பேரில் பன்னுலிற்குப் போவதற்கு ஆயத்தமானுர். ஆவுசாஹேபு செய்த தீர்மானம் என்னவெனில் :—"சங்ராம் கட், சக்ராவதி துர்க்கம் இரண்டும் சாஸ்தர்கானின் கையில் சிக்கியிருக்கின்றன. மேலும் புனு பிராந்தியத்தைச் சேர்ந்த ஸரல்லி, ஸூப்காம் இவைகளும் முகம்

மதியர்கள் கைவசமாகி யிருக்கிறது. சிவாஜி ராஜாவும் பன்னுல் கோட்டையின் முற்றுகையிலிருக்கிறபடியால் நான் போய்த்தான் அவனை விடுவிக்கவேண்டும்" என்று நிச்சயித்தார். அந்தச் சமயத்தில் சேனுதிபதியான நேதாஜி என்பவர் ஹிலால்கானுடன் வந்து மிக்க விநயத்துடன் நமஸ்கரித்தார். மாதுஸ்ரீ அவ்விருவர்களையும் ஆசீர்வதித்துச் சொல்லியதாவது:— "என் மகனும் உங்கள் எஜமானனுமாகிய சிவாஜி ராஜா பன்னுல் கோட்டையில் சத்துருக்களுடன் போர் புரிந்துகொண்டிருக்கிருர். நீங்கள் இருவரும் வெட்கமின்றி பயந்து, உங்களுடைய உயிரே பெரிதென்று கருதி ஓடி வந்திருக்கிறீர்கள். ஆகையால் நானே சென்று என் மகனை விடுவிக்கப் போகிறேன்," என்று சொன்ன மாத்திரத்தில், சேனுதிபதி நேதாஜி பதில் அளித்ததாவது: "மாதுஸ்ரீயின் புத்திரரும் அரசரிற் சிறந்தவருமான சிவாஜி ராஜா மிக்க சூராக இருக்கிருர். அவருடைய உத்திரவின்பேரில் விஜயகட் கோட்டையை வென்று, இப்பிரதேசத்தில் உள்ள சத்துருக்களுடன் யுத்தஞ் செய்ய வந்திருக்கிறோம். நம் சைனியங்கள் இந்த நிலையில் சத்துருவோடு யுத்தம் செய்து, வென்று கோட்டைகளைப் பிடிக்க மாட்டார்கள். மேலும் பன்னுலுக்குப் போகாவிட்டாலும் தங்களுடைய சம்ரக்ஷணையின் பொருட்டு இவ்விடத்திலேயே இருக்கும்படியாக உத்திரவு கொடுத்திருக்கிருர். அவ்விதமிருந்த போதிலும், நாமே நம் எஜமான் அவர்களிடம் போகிறோம்" என்று ராஜ மாதாவிடம் அறிவித்துவிட்டுத் தாமதியாது உடனே பன்னுல் கோட்டைக்குப் புறப்பட்டார்கள்.

அப்பொழுது சேனுதிபதியுடன் சைனியங்கள் வருவதைக் கேள்வியுற்ற ஜோஹர்கான், அவற்றை எதிர்க்கச் சில சைனியங்களை அனுப்பினுர். அவ்விரண்டு சேனைகளும் வழியில் சந்தித்தன. பெரும் யுத்தம் ஒன்று நிகழ்ந்தது. இந்த யுத்தத்தில் ஹிலால்கானின் மகன் மிக்க பராக்கிரமத்துடன் யுத்தம் செய்து, கடைசியில் காயமடைந்து பயமடைந்தான். அவனை எதிரிகள் பிடித்துச் சென்றனர். இச்செய்தியை அரசரும் கேள்விப்பட்டு மிகவும் விசனமடைந்தார். அவர் இரவில் தூங்கிக்

கொண்டிருக்கும்பொழுது, ஸ்ரீ துளஜா பவானி கனவில் தோன்றி "மகனே! உன் தாய் ராஜ்கட் கோட்டையில் உன்னைப் பார்க்க வேண்டுமென்ற ஆவலினால் மிக்கக் கஷ்டப்பட்டுக்கொண்டு இருக்கிறாள். இப்பொழுதே மாதுஸ்ரீயின் பேட்டியைக் காண ஒரு சிறு படையுடன் போ. சத்துருக்களை நான் மோகிக்கும்படி செய்கிறேன்" என்று சொன்னார். மேலும் "ஜோகர் கானும் எக்காரணத்தைக் கொண்டும் நாசமடைவான்" என்றும் சொல்லி மறைந்தார். இவ்விதம் அறிவித்தவுடன் சிவாஜி ராஜா விழித்துக் கொண்டு ஸ்ரீ தேவியை சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தார். புனா பிராந்தியம் தற்சமயம் எதிரிகளால் கைப்பற்றப்பட்டிருக்குமாகையால், நாம் இங்கு இருப்பதில் பயனில்லை என்று அறிந்து, திரியம்பக் பாஸ்கர் என்பவரைப் பன்னாலில் வைத்துவிட்டு ஸ்ரீ தேவியின் உத்திரவின்படி ராஜகட் கோட்டை போக நிச்சயித்தார். போகும் பொழுது ஜோஹர்கானுக்கு அறிவித்ததாவது:- "நாம் ராஜகட் கோட்டைக்குப் போவதால் இங்குள்ள நம் சைன்னியங்கள் உங்களுடன் போர் புரியும். ஒருக்கால் சண்டை செய்ய சம்மதமில்லாதிருப்பீர்களாகில் மற்றொரு பெரும் படையுடன் வந்து இருவரும் ஒருவர்க்கொருவர் சண்டை செய்ய நேரிடும்" என்று சிவாஜி ராஜா சொல்லியனுப்பினார். இச் செய்தியைக் கேட்டும், ஜோஹர்கான் கேளாதவர்போல் இருந்தார்.

அதன் பிறகு அரசர் இரவு நேரத்தில் அறுநூறு காலாட் படையுடன் தேரி என்ற வாத்தியத்தை முழங்கிக்கொண்டு, சத்துருக்களுக்குச் சமீபமுள்ள மார்க்கத்தின் வழியாகப் புறப்பட்டுச்சென்றார். அப்பொழுது அந்த சத்தத்தை மேககர்ச்சனை என்று சத்துருக்கள் நினைத்திருந்தார்கள். அரசர் மிகவும் பயங்கரமான காடுகளின் வழியாக ஐந்து ஊர்களை மிக்க கஷ்டத்துடன் கடந்து விசால்கட் என்ற கோட்டையை வந்தடைந்தார். அதன் பிறகு இச்செய்தியை ஜோஹர்கான் கேள்வியுற்று, தாம் முற்றுகை யிட்டிருந்தும் நம்மை எவ்விதமோ ஏமாற்றிவிட்டுப்போய்விட்டார் என்று திடுக்கிட்டவராய் மஹசூத் என்னும் சேனாதிபதியுடன் சில சேனைகளைக் கொடுத்து அரசரைப் பிடித்துவரும்படியாக

அனுப்பினர். மஹருத் அங்கிருந்து போகும்பொழுது வழியி லுள்ள சேற்றில் சில சைனியங்கள் புதைந்துவிட்டன. மீதியுள்ள சேனைகளுடன் கோட்டைக்குச் சமீபம் போய்ச் சேர்ந்தார். இவர் விசால் கோட்டையை வந்து அடைவதற்கு முன்பே பள்ளி வனத்தின் அரசராகிய ஜஸ்வந்த்சிங், சிருங்கார்பூரின் அரசராகிய சூர்ய ராஜா, இவ்விருவரும் ஜோஹர் சொல்லியனுப்பியபடி விசால் கட்கோட்டைக்குச் சமீபத்தில் யுத்தம்செய்து தோல்வி யடைந்தார்கள்.

அவர்கள் மஹருதும் வந்த செய்தியை அறிந்து, அவரோடு சேர்ந்துகொண்டு மூவரும் விசால்கட் கோட்டையை முற்றுகை யிட்டனர். சிவாஜி ராஜா பெரும் போர்புரிந்து விரோதிகளை வென்றார். அங்கிருந்து புறப்பட்டு ராஜகட்டிற்கு வந்து சேர்ந்து, அங்கு தன் அன்னையை சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து நடந்த வரலாற்றை யெல்லாம் அறிவித்து அங்கேயே ஒரு நாள் தங்கி யிருந்தார். மஹருத் மிக்க அவமானம் அடைந்தவராய் உயிருடன் ஜோகர்கானைப்போய் அடைந்தார்.

இச்செய்தியை டில்லியதிபதியின் மாமனாகிய சாஸ்தாகான் முதலியவர்கள் கேள்வியுற்றுத் தங்கள் எண்ணம் நிறைவேறுவதில் சந்தேகங்கொண்டார்கள். இவ்விதமிருக்க, சிவாஜி ராஜா யோசனை செய்து திரியம்பக் பாஸ்கரருக்கு உத்திரவிட்டதாவது: "பன்ஹல் கோட்டையை முகம்மதியரிடம் ஒப்படைத்துவிட்டுத் தாங்கள் இவ்விடம் வந்துசேரவேண்டியது. அதற்குப் பதிலாக அலியதில்ஷாவிடமிருந்து வேறு கோட்டைகளை அடையலாம். தற்சமயம் நாம் இரு இடங்களிலும் யுத்தம் செய்வதென்பது முடியாத காரியமாதலால் உடனே புறப்பட்டு வந்துசேர வேண்டியது" என்ற உத்திரவின்பேரில் கோட்டையை ஜோகர் கானிடம் ஒப்படைத்துவிட்டு, அவருடைய பேட்டி கண்டு, அவ ரிடமிருந்து பல சன்மானங்களைப் பெற்று, அரசரிடம் வந்து சேர்ந்தார்.

இதைக் கேள்வியுற்ற அலியதில்ஷா, ஜோகர்கான் சிவாஜி ராஜாவிடமிருந்து லஞ்சம் வாங்கிக்கொண்டிருப்பதாக அனுமா

னித்து, ஜோகர்கானுக்கு "சிவாஜி ராஜாவிடமிருந்து பெற்ற லஞ்சத் திரவியத்தை அனுப்பிவிடு. இல்லாவிடில் நீ தண்டனைக்குள்ளாக்கப்படுவாய்" என்று கடிதம் எழுதியனுப்பினர்.

இக்கடிதத்தைப் பார்த்த ஜோஹர்கான் மன வருத்தங்கொண்டவராய் தன் சைனியத்தை அழைத்துக்கொண்டு கர்ணபுரத்திற்குப் புறப்பட்டுப் போய்விட்டார். இவ்விதம் அவர் சென்றதை அறிந்த அல்லியதில்ஷா, தன்னிடத்தில் அவருக்குச் சிறிதுகூடப் பயமில்லாதுபோனதைப்பற்றி த்வேஷம்கொண்டவராய் அவரிடம் தன்னுடைய சில வீரர்களை அனுப்பினர். அவர்கள் ஜோஹர்கானுக்கு விஷத்தைக்கொடுத்துக் கொன்றுவிட்டார்கள்.

சிவாஜி ராஜா ராஜகட் கோட்டையில் இருக்கும்பொழுது, முகம்மதியர், சக்ராவதி, கங்கராமதுர்க்கம் முதலிய இடங்களில் சண்டைசெய்து அவைகளைக் கைப்பற்றிவிட்டார்கள் என்ற சமாசாரத்தைக் கேள்விப்பட்டுத் தன் மந்திரியை அழைத்து, "இப்பொழுது முகம்மதியரிடம் யுத்தத்திற்குப் போவதாய் இருந்தால் மிக்கத் திரவியம் வேண்டும். அதற்காக இன்னும் பல இராஜ்யங்களை ஜெயித்துவரவேண்டும்" என்று அறிவித்தார். அப்பொழுது அவருடைய மந்திரி "மஹாராஜ்! தாங்கள் சொல்லும் ஏற்பாடு முற்றிலும் சரி. போருக்குப் புறப்படவேண்டியதே. ஆனால் டில்லி அதிபதியின் மாமன் தற்பொழுது புனாவில் இருக்கிறார். தாங்கள் ராஜகட் கோட்டைக்கு வந்த செய்தியை அறிநதவுடன் நம் இராஜ்யமாகிய சிம்மபர்வத பிரதேசத்தை ஆக்ரமிக்கும்பொருட்டு காரதலப் என்பவருடன் சில சைனியங்களைக்கொடுத்து அனுப்புவதாக நிச்சயித்திருக்கிறார். ஆகையால் அம்மார்க்கத்தைத் தடுக்கவேண்டும்," என்று அறிவித்தார். அதை அரசர் அங்கீகரித்துத் தன் சைனியங்களுடன், புறப்பட்டு முதன்முதலாக ஜயவல்லிப் பிரதேசத்திற்குச் சென்று, அதன் கீழ்ப்பாகத்திலும் உட்புறத்திலும் உள்ள சாடுகளில் ஆட்களை ஒளித்துவைத்தார். அதன் பிறகு காரதலப்கான், அமரசிம்மன், ராஜா வியாக்கிரி, ஜஸ்வந்த், சூர்ய ராஜா, கோகாடே, மித்ரஸ்

நேஹறன், முதலியவர்கள் தங்களுடைய பூரா சைனியங்களுடன் பீமபூர், கல்யாணபுரம், பனவல்லிபுரம், கச்சபதேசம் முதலான இடங்களை அடைந்து அவைகளைத் தங்கள்வசமாக்கிக்கொண்டும், லோஹாதி என்ற காட்டின் மார்க்கமாக சிம்மபர்வதத்திலிருந்து இறங்கி அதன்கீழ் உள்ள காட்டில் சத்துரு சேனைகளால் சூழப் பட்டிருப்பதை அறியாமல் இரண்டு மூன்று நாட்கள்வரை வாசம் செய்துவிட்டு, அப்பாலுள்ள இடங்களையும் பிடித்துக்கொள்ளும் பொருட்டுப் புறப்பட்டார்கள் புறப்பட்டதும் அவர்கள் சிவரஜி ராஜாவால் தகையப்பட்டார்கள். இரண்டு பக்கங்களிலும் இருந்த இராஜ சைனியங்களும் அவர்களைச்சுற்றி வளைத்துக்கொண் டனர் உம்பர்காம் காட்டில் ஒரு பெரும் யுத்தம் நிகழ்ந்தது. இருதிறத்தாரும் யுத்தம் செய்யும்போது யவனர்களின் சைனி யம் யுத்த சக்தியை இழந்துகொண்டே வந்தது. அப்பொழுது ராஜா வியாக்ரி என்னும் பிரபு, காரதலப்கானைப் பார்த்து, "இக் காட்டில் டில்லி அதிபதியின் சைனியங்கள் முழுவதையும் அதம் செய்ய நினைக்கிறீர். சிவாஜி ராஜா உம்மை உயிருடன் விடப்போவதில்லை, ஆகையால் அவரிடம் சென்று சரண்புகுந்து இங்கிருந்து நழுவிப்போவதே மேல்" என்று சொல்லியவுடன், அந்தான் யுக்தம் எனக் கருதிய கார்தலப்கான் தனக்குக்கீழிருந்த சிப்பந்தியொருவனை சிவாஜி ராஜாவிடம் அனுப்பி நம்பிக்கை பெற்று அவ்விடம் வந்துள்ள அரசர்கள் எல்லோரும் தங்களிடத் திலுள்ள எல்லாவற்றையும் சிவாஜி ராஜாவுக்குக் கொடுத்துவிட்டு, சாஸ்தாகானிடம் புறப்பட்டுச் சென்றார்கள்.

அதன்மேல் சிவாஜி ராஜா மிகவும் சந்தோஷமடைந்து, எதிரிகளால் கொடுக்கப்பட்ட சகல சைனியங்கள், பொருள்கள் எல்லாவற்றையும் பெற்றுத் தன் மந்திரி நேதாஜியுடன் ஆலோ சனை செய்து மறுபடியும் முகம்மதியர் வசமுள்ள ராஜ்யத்தைக் கைப்பற்றும்பொருட்டு, தாளியபுரத்திற்குச் சென்று அத்தேசத் தைக் கைப்பற்றிக்கொண்டு, பல்லிவனப் பிராந்தியத்தியத்திற்குச் சென்றார். ஜஸ்வந்த் என்பவர் அத்தேசத்தின் அரசர். முன்பு சிவாஜி ராஜாவுக்கு பயந்து சிருங்கார்ப்பூர், பிரபாவளி பட்டி னத்து பிரபுவான சூர்ய ராஜாவிடம் ஓடிப்போய் இருந்தார்.

அந்த அரசரும் இவரைக் காப்பாற்றி வந்தார். அவர் முன்பு அபராதியாக இருந்தும், பராதீனராய் இருந்தமையால், அவர்மீது உள்ள குற்றத்தை சிவாஜி ராஜா பாராட்டவில்லை. சித்திரபுளினம் என்னும் கோட்டைக்குச் சென்று, அங்குள்ள பாசுராம சுவாமியை தரிசித்து அவரை நன்கு பூஜித்து அவருடைய அருளையும் பெற்று அப்பிராந்தியங்களில் வரவேண்டிய கப்பங்களைப் பெற்று, பிராமணர்களுக்கு அநேக தான தர்மங்களைச் செய்துவிட்டு சங்கமேஸ்வரம் என்னும் கோட்டையை வந்தடைந்தார். அங்குள்ள முகம்மதியர்கள் முன்னடியே சிவாஜி ராஜாவுக்கு பயந்து ஓடிப்போய்விட்டார்கள். அத்தேசத்தையும் கைப்பற்றிக்கொண்டு அவ்விடத்திலேயே ஜஸ்வந்த் என்பவருடனும், பிராமண மலசூர் என்ற வம்சத்தைச் சேர்ந்த நீலகண்ட ராஜாவின் மகனுடனும், ஜெயிக்கப்பட்ட மற்றவர்களுடனும், சங்கமேசுவரம் என்னும் இடத்திற்கு வந்துசேர்ந்தார். அதன் பிறகு சிவாஜி ராஜா சூர்ய ராஜாமீது தயைகூர்ந்து சங்கமேஸ்வரத்தில் இருக்கும் தன் சைனியத்தை தன்னுடையதாகவே கருதலாமென்றும், எக்காரணத்தைக்கொண்டும் நேர்மையைத் தவறாது நடந்து வரவேண்டியது என்றும், தனக்கு சமயத்தில் உதவிசெய்யும்படியாகவும் அறிவித்தார். மேலும் அங்குள்ள அரசர்களுக்கெல்லாம் அபயமளித்தும், ராஜபுரத்திற்குச் சேனையை அனுப்பி அங்கிருந்துகொண்டே சமுத்திரதீரத்திலும் தீவுகளிலும் வசித்துக்கொண்டு கப்பல் வியாபாரம் செய்துவருகிற ஐரோப்பியர்களையும், மற்ற அரசர்களையும் தன் வசப்படுத்திக் கொண்டு, அவர்களிடமிருந்து அநேக கப்பத் தொகைகளையும் பெற்றார். மேலும் ராஜபுரியில் இருக்கும்பொழுது, மை போட்டுப் பார்க்காமலே அவருக்கு மோஹராக்கள் நிறைந்த பாத்திரங்கள் புதையலாகக் கிடைத்தன. இன்னும் அந்த தேசாதிபதிகளிடமிருந்து அநேகவிதமான பொருள்களையுங் கப்பமாகப் பெற்றார்.

அப்படிப்பெற்ற பொருள்களின் விபரம்:—தங்கம், வெள்ளி, எஃகு, ஈயம், செப்பு, இரும்பு, காரீயம், வெண்கலம், மேற்கு சமுத்திரத்தில் கிடைத்த தங்க மணல், முத்துக்கள், மரகதம், பத்மராகம், வைரம், பவழம், அரக்கு, கை ஆபரணங்கள்;

வெண்சாமரம், மயில் தோகை, தூரதிருஷ்டிக் கண்ணுடிகள், இன்னும், மருந்துச்சரக்குகளும், வாசனைத்திரவியங்களுமாகிய ஓமம், வெட்டிவேர், சவ்வியம், சிவப்பு லோத்திரம், குங்கிலியம், குந்துருக்கம்பிசின், மஞ்சிட்டி, சிந்தூரம், பாதரஸம், அரிதாரம், வேறு சில வாசனை சாமான்கள், வாண கந்தகம், கோரோசனை, அபிரேகம், பச்சைநாபி, இன்னும் வேறு சில விஷ வஸ்துக்களும், விஷ பரிகாரமான வஸ்துக்களும், ஜரிகை வஸ்திரங்களும், சால்வைகளும், பட்டு வஸ்திரங்களும் இவற்றைத் தவிர அநேக அழகிய நுட்பமான சாமான்களும், அவர்களிடம் பெற்று அவை களைத் தன் பாதுகாப்பின்கீழ் வைத்தார். அதன் பிறகு, சட வல்லி, சமதள், ஹரிச்சரி, வைகநாத், குதவட்கேலா, வல்லீகம், சாணவல்லிகா, நாதவாட் இந்தப் பிரதேசங்களிலிருந்தும், தாவே, சாம்வாலா, வடசார்பட்டணம் இந்த ராஜ்யங்களின் அரசர்களிட மிருந்தும் கப்பத் தொகையைப் பெற்று, எல்லாத் தேசத்தையும், தன் வசப்படுத்திக்கொண்டு ராஜபுரத்திலேயே இருந்தார்.

இவ்விதமிருக்கும்பொழுது, அல்லியதில்ஷா சிவாஜி ராஜா வைத் துன்புறுத்த எண்ணி சூர்ய ராஜாவிற்கு எழுதியனுப்பிய தின்பேரில் அவர் சங்கமேசுவரத்தில் அவரை இரவில் வழி மறித்தார். அவரை மல்லசூர், தன் சாமர்த்தியத்தைக்கொண்டு ஒரு பெருஞ் சண்டை செய்து துரத்தியடித்தார். உடனே சிவாஜி ராஜா ராஜகட்டிலிருந்து சங்கமேசுவரத்திற்கு வருகிறுர் என்ற செய்தியைக் கேள்விப்பட்டு மல்லசூர் என்பவர் இராஜ சமுகத் திற்கு வந்துசேர்ந்தார். அப்பொழுது நீலகண்ட ராஜாவின் மகன் தாஜுஜியின் சாமர்த்தியத்தைப்பற்றி அரசரிடம் தெரிவித்தார். இதைக் கேள்வியுற்று அவருக்கும் மற்றவர்க ளுக்கும் ஏராளமான சன்மானங்களையும் வழங்கியதோடு சூர்ய ராஜாவின்மீதுள்ள குற்றத்தையும் மன்னித்துவிட்டார். மறுபடி யும் பெரும்பலத்துடன் பல்லிவனத்தை கைப்பற்றும்பொருட்டு போவதாக சூர்ய ராஜாவுக்கு தெரிவித்து மேலும் அறிவித்த தாவது:—“நீர் ஒரு குற்றவாளியாக இருக்கிறீர், உம்மை மன்னித்தும் உமக்கு உயிர்ப்பிச்சை அளித்தும் இருக்கிறேன். ஆகையினல் நீர் எந்த சமயத்திலும் முன்ஜாக்கிரதையாக இருக்க

வேண்டும்" என்று சொல்லியனுப்பினர். அதைக் கேட்டுக் கொண்டு, தானும் வருவதாகச் சொல்லியனுப்பினர். ஆனால் சொன்னபடி அவ்விடம் போகவில்லை. அரசர் பல்லிவனத்திற்குச் சென்று அந்த இராஜ்யத்தையும் கோட்டைகள் எல்லாவற்றையும் தன் ஸ்வாதீனப்படுத்திக்கொண்டு அங்குள்ளவர்களுக்கு அபய மளித்து, முன்னைவிட இப்பொழுது அதிக ஜனங்கள் வந்து குடியேறும்படி வசதிகள் உண்டாக்கினர். அங்கு சிரதுர்க்கம் என்ற ஒரு மலை இருந்தது. அதன்மேல் ஒரு நூதனமான கட்டிடத்தைக்கட்டி அதற்கு மண்டத்கட் என்று பெயர் வைத்து, அங்கு சாமர்த்தியசாலியான ஒரு அதிகாரியை நியமித்து, சில சைன்னியங்களையும் அப்பிரதேசத்தைக் காப்பாற் றும்பொருட்டு வைத்துவிட்டு, சிருங்கார்பூரைக் கைப்பற்ற வேண்டும் என்று மிக்க கோபத்துடன் பதினையாயிரம் சைனி யங்களுடன் புறப்பட்டார். முன்னடியே சிருங்கார்பூரைக் கைப் பற்றுமல் தற்காலம் கோபம்கொண்டதற்கு காரணம் என்ன வென்றால், சிவாஜி ராஜா ஜயவல்லி என்ற ஊரை ஆளுவதற்காகப் பிறந்த கடவுளின் அவதாரம் என நம்பி சூர்ய ராஜா தன்னை மஹாராஜாவின் கிரய புத்திரன் என்று சொல்லி சரணடைந் திருந்தார். அநேக அரிய சேவைகளையும் புரிந்துவந்தார். பிறகு விதிவசத்தின் காரணமாக எதிரிகளின் துர்ப்புத்தியைக் கேட்டுப் பகைமையைச் செய்ய ஆரம்பித்தார். அப்பொழுதுங்கூடக் குற்றத்தை மன்னித்து அழைப்பு அனுப்பியும் வருவதாகச் சொல்லி, வராமல் இருந்ததால், சிவாஜி ராஜாவிற்கு மிக்க கோபம் ஏற்பட்டது. அவர் சிருங்கார்வனத்தின் சமீபம் வந்துசேர்ந்தார். இச்செய்தியை சூர்ய ராஜா கேள்விப்பட்டு முதலில் தன்னுடன் ஒரு சைனியத்தை அழைத்துக்கொண்டு வந்தவர், பிறகு சிவாஜி ராஜா தற்சமயம் நேரே பல்லிவனத்திற்குப் போய்விட்டபடியால் இனிமேல் நம்மீது யுத்தத்திற்கு வரமாட்டார் என்று நினைத்து எல்லோருக்கும் அனுமதி அளித்து அனுப்பிவிட்டார்.

பிறகு தன் சிநேகிதர்களிடம் ஆலோசனை செய்து சிவாஜி ராஜா இனி இவ்விடம் வரமாட்டார், என்று சொல்லிவிட்டுப் பல படைகளுடனும் ஓடிப்போய்விட்டார். அப்போது கடினமான

காட்டுப்பாதையில் வந்துகொண்டிருந்த் சிவாஜி ராஜா இந்தச் செய்தியைக் கேள்விப்பட்டு மிக்க விரசமடைந்தவராய் சிருங்கார்ப் பூரைக் கைப்பற்றி அங்குள்ளவர்களுக்கு நம்பிக்கை ஏற்படும்படி செய்து அநேக பிரபல பிரஜைகளாகிய சகல ஜாதியினரையும் எல்லா வேலைகளிலும் அமர்த்தி, திரயம்பக் பாஸ்கர ராயருக்கு பிரபாவளி என்ற இராஜ்யத்தைக் கொடுத்தார். இதற்குள்ளாக, வேனிற் காலமும் வந்ததால் சிவாஜி மகாராஜா நானாவித சீத உப சாரங்களை அனுபவித்தவராய் மிக்க மகிழ்ச்சியுடன் சிருங்கார்ப் பூரில் வசித்தார். அதன் பிறகு அவர் திரும்ப பன்னலிற்கு வந்து, அதைக் கைப்பற்றிக்கொண்டு, அங்கிருந்து மேலும் தக்ஷிண பிராந்தியத்தில் உள்ள பெங்களூரையும், சந்தி பிராந்தி யத்தையும் கி. பி. 1677-ம் வருடத்தில் கைப்பற்றினர். அந்த சந்தியரசனின் ஆளுகையின்கீழ் பிரபலமடைந்த பந்தர்பூர் என்ற பட்டணம் பிரஞ்சுக்காரர்கள் பழக்கத்தில் இருந்தது. 1680-ம் வருடத்தில் அந்தப் பிரஞ்சுக்காரர்களிடம் சிவாஜி ராஜா ஒரு உடன்படிக்கை செய்துகொண்டு, அங்கிருந்து மேலும் பல இராஜ் யங்களைக் கைப்பற்றிக்கொண்டு புனு பிராந்தியத்திற்குச் சென்றார்.

அங்கு சில நாடோடி ஜனங்கள் இருந்தார்கள். அவர்களைக் தண்டித்தும் சரணடைந்தவர்களை அங்கீகரித்தும், அவர்களில் இருப்பமுள்ளவர்களை வேலையில் அமர்த்திக்கொண்டும் அங்குள்ள இடங்களை எல்லாம் பந்தோபஸ்து செய்துகொண்டார்.

அதன் பிறகு சக்ராவதி சங்கராமதுர்க்கம் என்ற இடங் களிலும் படையை வைத்தார். இவ்விதம் எல்லா இடங்களையும் ஒருவித தொந்தரவுகளின்றிச்செய்துவிட்டு புனு பிராந்தியத்தில் வந்து தங்கியிருந்தார். அப்போது டில்லியதிபதியும், அல்லிய தில்ஷாவும் சிவாஜி ராஜாவைப்பற்றிப் புகழ்ந்து பேசிக்கொண்ட தாவது :—

சிவாஜி ராஜா இயற்கையிலேயே ஒரு சூரனுகவும் ஈட்டி, கேடயம், பட்டாக்கத்தி முதலியவைகளை எல்லாம் சண்டைகளில் உபயோகிப்பதில் வல்லவனுகவும் இருக்கிறார். கம்பியைக்கொண்டு

செய்த ஈட்டியைப்போன்ற ஒரு நூதனமான ஆயுதத்தைக் கண்டுபிடித்தும் இருக்கிறார். இரண்டாவதாக, அவர் மிகுந்த செல்வத்தையும் சேர்த்துவிட்டார். ஒவ்வொரு வேலையையும் தானே நின்று மிக்க பிரயாஸையுடன் செய்பவராகவும் இருக்கிறார். இதைத்தவிர எல்லோராலும் நன்கு மதிக்கப்பட்டும், பெரும் புத்திமானுகவும் தைரியசாலியாகவும் இருக்கிறார். இராஜ்யத்தை வகித்து நடத்தும் விஷயத்தில் சாம, தான, பேத, தண்டம் என்ற நான்கு உபாயங்களையும் சமயமறிந்து செய்பவராகவும், சாதாரணமாக எப்பேர்ப்பட்ட பெரிய காரியங்களையும் மிக்க சிரமத்துடனும் முயற்சியுடனும் முற்றிலும் ஆராய்ந்து அறிந்து செய்பவராகவும், பெரும் நீதிமானுகவும், தயாள குணமுள்ளவராகவும், தன்னை அண்டினவர்களைக் காப்பாற்றும் காருண்யமுள்ளவராகவும், இருக்கிறார். மேலும் அழகிலும் அழகிற்கேற்ற குணத்திலும் பரிபூரணமாயிருக்கிறார். அதுமட்டுமல்லாமல் கடவுளின் வரப்பிரசாதம் பெற்றவராகவும் இருக்கிறார். அதன் காரணமாக எதிர்பாராத இடங்களில் அவருக்கு அநேகப் புதையல் முதலிய பொருள்கள் கிடைக்கின்றன. சத்துருக்களின் இலக்ஷக்கணக்கான சேனையின் நடுவில் சிவாஜியின் குறைந்த சைனியம் ஹரஹரமகாதேவ் என்று சப்தம் செய்து தாக்கியவுடன் எதிரி சைனியங்கள் எல்லாம் சின்னுபின்னமாகி விடுகின்றன. இவ்விதமான அரசனை வெல்லுவது முடியாத காரியம். மேற்கொண்டு சிநேகத்தினுல் தனதாகச்செய்ய முயற்சித்தால் அது நமக்குத் தாழ்மையைத் தரும். அப்படியின்றி சிவாஜி ராஜாவின் எதிராகச் சென்று யுத்தம் செய்யப் பிரயாஸைப்பட்டால் நம்முடைய சேனையின் அழிவும், பொருள் சேதமும் அடைவோம். அதைவிட நம்மிடத்தில் நாமிருப்பது மேல்" என்று அலியதில்ஷாவும் ஔரங்கசீப்பும் அவரவர்கள் இடங்களில் இருந்துவிட்டார்கள்.

ஒருசமயம் டில்லி அதிபதி ஔரங்கசீப் தன் சேனையுடன் புறப்பட்டுத்தானே சிவாஜியுடன் யுத்தஞ்செய்ய எத்தனிக்கையில், அவர் சேனைகள் எல்லாம் சிவாஜி ராஜாவின் பராக்கிரமத்தை நினைத்து பயந்தார்கள். இதைப்பார்த்து மன வருத்தமடைந்து

அவர் படைகளின்மேல் மிகவும் கோபித்துக்கொண்டு போகும் பொழுது, ஒரு பிரதேசத்தில் உள்ள நதியில், தான் சவாரி செய்த குதிரைக்குத் தானே தண்ணீர் அருந்தவைத்தார். அப்பொழுது அந்தக் குதிரை ஓர் தடவை நன்றாகத் தண்ணீர் அருந்திவிட்டுத் திரும்பத் தண்ணீர் குடிப்பதற்காகத் தலையைக் குனிந்து வாயைத் தண்ணீரின் அருகில் கொண்டுபோகும்போது மிரண்டு தண்ணீருக்கப்பால் துள்ளிக் குதித்து ஆற்றின் கரைக்கு வந்தது. பிறகு தண்ணீரைக்குடிக்க மறுபடியும் அணுகும்போது தண்ணீர் குடிக்கவில்லை. அப்பொழுது பாதுஷா குதிரையின்மீது உட்கார்ந்திருந்தார். அவர் மிக்க ஜாக்கிரதையுடன் இருந்து கொண்டு தன் குதிரையைப்பார்த்து "இங்கும் சிவாஜி வந்திருக்கிறான் என்று பயப்படுகிறாயா?" என்று சொல்லிக்கொண்டே தன் படைகளை நோக்கினார். அவர் படைகளின் நோக்கத்தை யறிந்து அவ்விடத்திலேயே முகாம் செய்து சிவாஜி ராஜாவை உயிருடன் பிடித்துவிடவேண்டும் என்று மிக்கப் பிரயத்தனப் பட்டார். அது தன்னால் சாத்தியப்படாததினால் அவருடைய முகத்தை எழுதிக்கொண்டு வந்தாகிலும் பார்க்கவேண்டும் என்று அதற்குத் தகுந்த சித்திரக்காரனை அனுப்பிவிட்டுத் தான் அங்கிருந்து மனமுடைந்து தன் இருப்பிடத்தை அடைந்தார். அவ்வாறே ஒரு சித்திரக்காரன் அங்கு வந்து அநேக நாட்கள் வரை சமயம் வாய்க்கும் என்று எதிர்பார்த்துத் தங்கியிருந்தான்.

ஆனால் அரசரின் நடவடிக்கை, அவரிருக்குமிடம் முதலியவைகளைப்பற்றி ஒன்றும் சரிவரத் தகவல் கிடைக்காததினால் இருந்த இடத்திலேயே கொஞ்சகாலம்வரை தங்கும்படி ஏற்பட்டது. ஒரு சமயம் அரசர் ஒரு தேசத்திற்குப் போவதாகக் கேள்விப்பட்டுக் காத்திருந்தகாலத்தில் அப்பாலுள்ள ஒரு பிரதேசத்தில், இருபது முப்பது ஊர்கள் பல்லக்கைகொண்டு கடந்து அதற்கப்பால் இருப்பதாகக் கேள்விப்பட்டான். உடனே அவன் அவ்விடத்திற்குச் சென்று விசாரித்ததில் "சிவாஜி ராஜா இந்த தேசத்தைப் பிடித்தார். அந்த ராஜ்யத்தை கைப்பற்றினார். இந்த இடத்தை முற்றுகை இட்டிருக்கிறார். அப்பாலுள்ள பிரதேசத்தின் மீது படை எடுத்திருக்கிறார்," என்று இவ்விஷயங்களைக்

கேள்வியுற்றதைத் தவிர அரசன் அவனுடைய கண்ணில் தென்படவே இல்லை. இவ்விதம் அநேக நாட்கள் சுற்றிக்கொண்டிருக்கும்பொழுது, ஒரு நாள் பெருங்காவலுடனும் மூன்று லக்ஷம் படைகளுடனும் நடு நிசியில் சிவாஜி ராஜா ஏதோ ஒரு இராஜ்யத்தைப் பிடிக்கும் உத்தேசத்துடன் மிக்க விரைவாகப் போகும்பொழுது அந்த சித்திரக்காரன் பார்த்தான். அவன் பார்த்தபொழுது உள்ள நிலை என்னவெனில், சிவாஜி ராஜா குதிரையில் சவாரி செய்துகொண்டிருந்தார். தலையில் ஜரிகைக் குல்லாயும், இடுப்பில் பாதிக்கால் சட்டையும், செருப்பும் குடையும், மெத்தையினால் தைக்கப்பட்ட அங்கியும், அணிந்திருந்தார். அப்போது காக்காய்ச் சோள வயலில் போய்க்கொண்டிருந்தார். கை ஈட்டியைத் தோளில் வைத்து அதைத் தலையால் அழுத்திக் கொண்டு, காக்காய்ச் சோளத்தின் கதிர்களைப் பிடுங்கி அவற்றைத் தேய்த்துத் தின்றும், அதன் தட்டைகளைக் குதிரையின் வாயில் கொடுத்துக்கொண்டும் இருந்த சந்தர்ப்பம். அதை அந்த சித்திரக்காரன் பார்த்து அதே நிலையில் அவருடைய உருவத்தை எழுதி ஔரங்கசீபிடம் கொடுத்தான். அவர் அதைப் பார்த்து மிக்க ஆச்சரியமடைந்தார். சிவாஜி ராஜா, நீதியுடையவராயும் லக்ஷம் போர் வீரர்களுடன் கூடிய பிரபுவாகவும், திரண்ட செல்வத்தையுடையவராகவும் இருந்தும், இராஜ்ய விவகாரங்களைச் சாதிப்பதின் பொருட்டு ஒரு இடத்தில் இறங்கி, சிற்றுண்டி அருந்துவதற்குள் காரியங்கள் கெட்டுவிடும் என்றும், அருகில் இருந்த பிரபுக்கள் காரியங்களைச் செய்யத் தடுமாறுவார்கள் என்றும் நினைத்துச் சோளத்தின் கதிர்களைத் தேய்த்துத் தின்று அதன் சக்கையைக் குதிரைக்குக் கொடுக்கிறார். இப்படிப்பட்ட அரசன் கைதேர்ந்தவராகவும், மிக்க புத்திசாலியாகவும், முயற்சியுடன் பிரயாசைப்படுபவராகவும், இருப்பார் என்றும் எண்ணினார். இவருடைய விஷயத்தில் எதிலும் பிரயாசையுடன் தலையிடுவதென்பது வீண்தான் என்று நிச்சயித்து சும்மாயிருந்து விட்டார். சிவாஜி ராஜரோ அநேக இராஜ்யங்களைப்பிடித்து, ஏராளமான பொருள்களைச் சம்பாதித்து, கடவுளின் வரப்பிரசாதத்தினால் பெரும் நிதிகளைத் திரட்டிப் பெருமிதமான பொருள்களை ஒன்று திரட்டிய பிறகு தன் பெயரை இன்னும் எம்முறையில் பிரசித்தி

செய்வதென்று யோசித்துத் தனக்கு உகந்த இடங்களில் மலைகளின்மீது சிவகட், மண்டனகட் முதலிய முன்னூற்றறுபது கோட்டைகளும் கட்டினர்.

அதன் பிறகு சிவாஜி ராஜா, தன் மூத்த சகோதரர் சம்பாஜி ராஜாவின் மகன் உமாஜி ராஜாவையும், சம்பாஜி ராஜாவின மனைவிகளான ஜெயந்திபாயி, கௌரிபாயி, பார்வதிபாயி இவர்களையும் உமாஜி ராஜாவினுடைய மனைவி சௌ. சகுபாயி சாயேபையும் ராஜபூர் என்ற ராஜ்யத்தில் வைத்தார். பிறகு உமாஜி ராஜாவின் மனைவி சக்குபாயிக்கு பர்சோஜி ராஜா பிறந்தார். அதன் பிறகு சிவாஜி ராஜாவின் மூத்த மாற்றாந்தாய் மாதுஸ்ரீ துகாயிஆவு சாயேபிற்குப் பிறந்தவராகிய ஏகோஜி மகாராஜா அவர்களுக்கு, ஷாஹஜி ராஜாவின் மூத்த மனைவியின் சந்ததியானதால் தன் குலதெய்வத்தையும் தன்னுடைய சொந்த முதல் விருதுகளையும் அல்லியதில்ஷாவினால் ஷாஹஜி ராஜாவுக்குக் கொடுக்கப்பட்ட வெகுமதிகளில் உள்ள விருதுகள் எல்லாவற்றையும் கொடுத்து குதிரையின்மீது வைக்கும் அம்பாரி என்ற ஆசனத்தையும் கொடுத்து அவருடைய மனைவிகளான உங்கதீபாபாயி ஆவு சாயேபு, சௌபாக்கியவதி மாதுஸ்ரீ சயீபாயி சாயேபு சௌ. மாதுஸ்ரீ அனுபாயி சாயேபு இம்மூவர்களுடன் சில படைகளும் கொடுத்துப் பெங்களூருக்கு அனுப்பினர்.

அவர் பெங்களூரிலேயே ராஜ்யபாரம் நிர்வகிக்கும்பொழுது சாலிவாகன சகம் 1593 பரிதாபி வருடம் ஏகோஜி ராஜாவின் மனைவி சௌபாக்கியவதி தீபாபாயி சாயேபிற்கு முதன்முதலாக மூன்றாவது ஷாஹஜி ராஜா பிறந்தார். இச்சந்தர்ப்பத்தில் அல்லியதில்ஷா எண்ணியதாவது :— "சிவாஜி ராஜா பிரபலமடைந்து இராஜ்யங்கள் எல்லாவற்றையும் பிடித்து முடித்து விட்டார். அவரை அழித்துவிடவேண்டுமென்று நானும் ஔரங்கஜேப் பாதுஷாவும் பல சண்டைகள் செய்தும் அநேக பகீரதப் பிரயத்தனங்களைச் செய்தும் அவர் அடங்காமலிருந்து வருகிறார். இப்பொழுது சிவாஜி ராஜாவின் சகோதரனாகிய ஏகோஜி ராஜாவும் பெங்களூரில் இருப்பதால் அவருடைய

நட்பைப் பெற்றும், ஆலோசனை செய்தும், என் பக்கத்தில் சேர்த்துக்கொண்டு தக்ஷிண பிராந்தியத்தின்மீதாவது என் அதிகாரத்தை நிலைக்கும்படி செய்யவேண்டும். இல்லாவிட்டால் சிவாஜி ராஜா தன் பலத்தைக்கொண்டு அதையும் ஆக்கிரமிப்பார். இப்பொழுதே நாம் ஏகோஜி ராஜாவை நம்முடன் சேர்த்துக் கொண்டால் சிவாஜி ராஜா, தன் சகோதரன் தன்னைச் சேர்ந்தவனுகையால் அவருடைய வழிக்குப் போகமாட்டார்" என்று ஆலோசனை செய்து அவ்வாறே ஏகோஜி ராஜாவுக்கு ஒரு கடிதத்தை அனுப்பினுர்.

அக்கடிதத்தில் அவர் தந்தை ஷாஹஜி ராஜா தன் அனுமதியின்பேரில் எவ்விதமிருந்தாரோ அவ்விதமே அவரும் தம்முடன் எல்லா வகைகளிலும் இருக்கவேண்டுமென்று எழுதியனுப்பினுர். ஏகோஜி ராஜா ஆலோசனை செய்து, இது யுக்தமென்று நினைத்து அல்லியதில்ஷாவின் சொல்லை யனுசரித்து நடந்து வந்தார். ஏகோஜி ராஜா பெங்களூரில் இராஜ்யத்தை நடத்தி வரும் பொழுது, தஞ்சாவூர் இராஜ்யத்தை ஆண்டுவந்த நாயுடு கக்ஷிக்கும் திருச்சினுப்பள்ளியை ஆண்டுவந்த நாயுடு கக்ஷிக்கும் விரோதம் ஏற்பட்டது. திருச்சினுப்பள்ளியில் ஆண்ட நாயுடு மிகவும் பலாட்டியராக இருந்தபடியால், தஞ்சாவூர் நாயுடு தன் இராஜ்யம் அவரால் ஜெயிக்கப்பட்டு விடும் என்று திட்டமாக எண்ணினுர். இருவருக்கும் சண்டை நடந்துகொண்டிருந்தது. அப்பொழுது தஞ்சாவூர் நாயுடு யுத்தத்தை நிர்வகிக்க முடியாமல், விஜாபுரத்திலிருந்த அல்லியதில்ஷா பாதுஷாவிடம் தனக்குட்பட்ட அதிகாரி ஒருவனை அனுப்பினுர். அவன் அங்கு சென்று, காதர் என்பவனையும், கலாஸ்கான், அப்துல்ஹலீம் என்ற இரு மந்திரிகளையும் அனுசரித்து, அவர்களுடைய சொல்படி, பாதுஷாவையும் கண்டு தன் எஜமானனுடைய இராஜ்யத்தின் தற்சமய நிலைமையைப் பற்றி அறிவித்தான். அப்பொழுது அல்லியதில்ஷா, கலாஸ்கானையும், காதரையும், அப்துல் ஹலீமையும் உதவிக்குச் செல்லும்படி உத்தரவு செய்தார். அவர்கள், தங்களிடம் போதுமான சேனைகள் இல்லாமலிருந்ததால், அதிகப்படியான சேனைகள் தேவையாக இருக்கிறதென்று அல்லியதில்ஷாவிடம் தெரிவித்

தார்கள். அதற்குள் அவர் அந்தச் சமயம் பெங்களூரில் இருந்த ஏகோஜி ராஜாவிற்குக் கடிதம் ஒன்று கொடுத்து, அவரையும் அவரது சேனையுடன் சென்று உதவி செய்யும்படி ஏற்பாடு செய்தார். அவ்விதமே அவ்விருவரும் பெங்களூருக்கு வந்து ஏகோஜி ராஜாவைக் கண்டு அக்கடிதத்தை அவரிடம் கொடுத்தார்கள். அரசரும் அதை ஏற்றுக்கொண்டு, இவ்விரு மந்திரிகளேயும் தன்னுடன் அழைத்துக்கொண்டு புறப்பட்டார்.

ஏகோஜி ராஜா எல்லா சைனியங்களேயும் ஒன்று திரட்டி வரும்பொழுதே, வழியில் ஆரணி என்ற இடத்தைக் கைப்பற்றி, வேதாஜி பாஸ்கர் என்பவரை அந்த ஆரணிக் கோட்டையில் வைத்துவிட்டுத் தஞ்சாவூருக்கு வந்து, திருச்சினுப்பள்ளி நாயக்கருடன் போர் புரிந்து, அவரைத் துரத்தியடித்துத் தஞ்சாவூர் நாயக்கரை ஆபத்தினின்றும் விடுவித்துவிட்டு, பெங்களூருக்குப் பிரயாணமானர். போகும்பொழுது திருமலவாடியில் தங்கி இருந்தார். அப்பொழுது அவருடைய மனேவி தீபாபாயி சாயேபு பூரண கர்ப்பவதியாக இருந்தார். திருமலவாடியிலேயே தீபாபாயி சாயேபிற்கு பிரசவகாலமாகி அவருக்கு இரண்டாவது புத்திரன் சகம் 1596 ராக்ஷச வருடத்தில் மூன்ருவது சரபோஜி ராஜா பிறந்தார். அப்பொழுது ஏகோஜி ராஜாவின் கனவில், இஷ்ட தெய்வம் தோன்றி, "நீ தஞ்சாவூர் ராஜ்யத்தை விட்டுப் போக வேண்டாம்; உன்னுடைய வம்ச பரம்பரையினுல் இந்த இராஜ்யம் ஆளப்படவேண்டி இருக்கிறது. நாளே காலேயில் உனக்கு அழைப்பு வரும்" என்று அறிவித்தது.

அவ்விதமே மறுநாள் தஞ்சாவூரில் நாயுடு கக்ஷியினருக்குள்ளாக விரோத மனப்பான்மையினுல் சச்சரவு ஏற்பட்டு ஒருவர்க்கொருவர் மனவேறுபாடுகள் உண்டாகி, மந்திரியும் விரோதமாகி, திருமலவாடியில் இருந்த ஏகோஜி ராஜாவிடம் வந்தார்கள். அவர்கள் அவரிடம் "இந்த தஞ்சாவூர் இராஜ்யத்தைத் தாங்களே பரிபாலனம் செய்ய வேண்டும்" என்று வேண்டினர்கள். கடவுளின் உத்திரவை மீறக்கூடாது என்று அதனே ஏற்றுக்கொண்டு ஏகோஜி ராஜா தஞ்சாவூர் கோட்டைக்குள் பிரவேசித்தார்.

இது முதற்கொண்டு தஞ்சாவூரில் இருந்த மகாராஷ்டிர ராஜ வம்சம் விஸ்தாரமடைந்தது. இவர்களின் விவரங்கள் எழுது முன் அடியிற்கண்ட புனாவைப் பற்றிய விஷயங்கள் கூறப்படு கின்றன.

புனா பிராந்தியத்தில் திக்விஜயம் செய்துவந்த சிவாஜி ராஜா வுக்கு எட்டு மனைவிமார்கள் இருந்தார்கள். இவர்களுடைய பெயர்களாவன:—(1) நிம்பால்கர் வம்சத்தைச் சேர்ந்த செள. சயிபாயி, (2) ஜாதவராவ் வம்சத்தைச் சேர்ந்த செள. காசிபாயி ஜாதவ், (3) காயக்வாட் வம்சத்தைச் சேர்ந்த செள. சக்வார் பாயி, (4) பால்கர் வம்சத்தைச் சேர்ந்த செள. புதலா பாயி, (5) சிர்கே வம்சத்தைச் சேர்ந்த செள. சகுணா பாயி, (6) மொஹிதே வம்சத்தைச் சேர்ந்த செள. சோயரி பாயி, (7) மாலஹோ வம்சத்தைச் சேர்ந்த கன்னிகை, (8) விசான்யா வம்சத்தைச் சேர்ந்த கன்னிகை. இந்த எட்டு மனைவிமார்களுடன் இருந்து வரும்பொழுது மூத்த மனைவியான செள. சயிபாயிக்கு மூன்று பெண் குழந்தைகளும் ஒரு ஆண் குழந்தையும் பிறந்தன. ஆண் குழந்தைக்கு சம்பாஜி என்ற பெயர் இடப்பட்டது. அவர் ஜனன காலம் சகம் 1598, பிங்கள வருடம். மூன்று பெண்களில் முதல் கன்னிகையான சக்வார் பாயியை நிம்பால்கர் குடும்பத்தி லும், இரண்டாவது கன்னிகையான ராணு பாயியை ஜாதவ் என் பவரது குடும்பத்திலும், மூன்றுவது கன்னிகையான அமணிகா பாயியை மஹடீக் என்பவரது குடும்பத்திலும் விவாஹம் செய்து கொடுத்தார். அந்த மஹாடிக்கிற்கு சந்தி பிராந்தியத்தில் சில ஜாகீர்களை அளித்தார். இரண்டாவது மனைவி செள. காசிபாயி சாயேபுக்கு சந்ததி இல்லை. மூன்றுவது மனைவி செள. சக்குவார் பாயி சாயேபுக்கு கமலா பாயி என்ற ஒரு மகள் பிறந்தாள். அவளை நேதாஜி பாஸ்கரருக்கு விவாஹம் செய்து கொடுத்தார். நான்காவது மனைவி செள. புதலா பாயிக்கு சந்ததி இல்லை. ஐந்தாவது மனைவி செள. சகுணா பாயிக்கு ராஜகுமரி பாயி என்ற மகள் பிறந்தாள். அவளை கனோஜி சிர்கே என்பவருக்கு விவா ஹம் செய்து கொடுத்தார். ஆறுவது மனைவி செள. சோயரி பாயி என்பவருக்கு ஒரு மகன் பிறந்தான். அவனுக்கு ராஜாராம்

ராஜா என்று பெயர் வைத்தார். இரண்டாவதாக மகள் பிறந்தாள். அவளுக்கு தாது பாயி என்று பெயர் வைத்தார். அதன் பிறகு சிவாஜி ராஜா தன் புத்திரர்களில் மூத்த மகனாகிய சம்பாஜி ராஜா என்பவருக்கு சகம் 1603 துர்துமி வருடம் தன் சுயராஜ்யமாகிய புனா பிராந்தியத்திற்குப் பட்டத்தைக் கட்டி, இரண்டாவது மகனாகிய ராஜாராமிற்கு சந்தியின் இராஜ்யத்தையும் கொடுத்தார். சிறிது நாட்கழித்து புனா பிராந்தியம் முழுவதிலும் பெரும் கலவரம் ஏற்பட்டு, முகம்மதியரிடம் சிக்கி இருந்தது. அப்பொழுது ராஜாராம், சந்தியிலிருந்து புறப்பட்டுத் தஞ்சாவூர் கோட்டையில் தன் சகோதரரிடம் சிறிது நாட்கள் வரை இருந்து வந்தார். சிவாஜி ராஜா அவருக்கு அழைப்பு அனுப்பியதின்பேரில் அவர் தன் தந்தையிடம் போய்ச்சேர்ந்தார். அவரிடம் பன்னால் கோட்டையைப் பார்த்துக்கொள்ளும்படி சொல்லிவிட்டுத் தான் சேது யாத்திரையின் பொருட்டு இரகசிய மார்க்கமாகச் சென்று யாத்திரையை முடித்துக்கொண்டு திரும்பும்பொழுது ஒரு சமயம் (ஏகோஜி ராஜா பட்டத்திற்கு வந்த பொழுது) சிவாஜி ராஜா இரகசியமாகத் தஞ்சாவூர் கோட்டையில் வந்து, கோட்டை முழுவதும் சுற்றிப் பார்த்துவிட்டு வெளியில் சென்று ஏகோஜி ராஜாவிற்குச் சொல்லியனுப்பியதாவது, "நீங்கள் சம்பாதித்த இராஜ்யங்கள் எல்லாவற்றையும் நான் சுற்றிப் பார்த்தேன். உங்களுடைய கோட்டை கருடனைப் போன்ற உருவத்தோடு காணப்படுகிறது. பெருங்கோட்டையின் நான்கு புறங்களிலும் காவலுக்காக சிறு கோட்டைகள் இருக்கின்றன. ஆனால் முன்பக்கத்தில் மட்டும் கோட்டையைக் காப்பாற்றுவதில் கஷ்டமேற்படும். அதற்குத் தென்பாகத்தில் உள்ள சிறு கோட்டை தண்ணீருக்குச் சமீபமா யிருக்கிறது. அதை மட்டும் வைத்துக்கொண்டு மற்றவைகளை இடித்து விடவும். நான் கோட்டைக்கு வந்திருந்தபொழுது, ஒரு கடையில், நம்முடைய தலையணியைக் கொடுத்து சாமான்கள் வாங்கப்பட்டது. அதை என்னிடம் திரும்ப அனுப்பவும்" என்று சொல்லிக் கடையின் அடையாளத்தையும் தெரிவித்திருந்தார்.

அதன் பிரகாரமே தஞ்சாவூரில் இருக்கும் கடைக்காரன் சிவாஜி ராஜாவுக்கு சாமான் விற்றிருந்தான். அதன் பிறகு மறு முறையும் சேது யாத்திரையை செய்து தன் சொந்த இடத்தை அடைந்தார். பிறகு தன் இரு புத்திரர்களையும் இராஜ்யத்தில் நியமித்து, எல்லா விடங்களிலும் பெரிய பிரக்கியாதியைப் பெற்று, எல்லா எதிரிகளையும் தோற்கடித்து, எதிரியே யில்லை என்னும்படி செய்து, தான் பிறவி எடுத்ததற்குச் செய்யவேண்டியதை யெல்லாம் செய்தோம் என்று நினைத்து, பிரபஞ்சத்தையும் இராஜ்ய பதவியையும் விட்டுவிடாமலே பரமார்த்திக மார்க்கமாகிய நிவ்ருத்தி மார்க்கத்தில் மனதைச் செலுத்தி, அதையே திடமாக அப்யாஸம் செய்து ஸ்ரீ குருதேவரின் வாக்கியத்தை மனனம் செய்து பகவத் ஸமாதியில் அநேக நாட்களிருந்து சாசுவதமாயுள்ள தன் நிஜமான ஸ்தானத்தை, ஆனந்தமயமாகி, அடைந்தார்.

அதன் பிறகு சம்பாஜி ராஜா தன் தந்தையின் கீர்த்தியை விஸ்தாரஞ் செய்து இராஜ்ய பரிபாலனம் செய்து வரும்பொழுது, டில்லி அதிபதி ஔரங்கசீப் தன் சொந்த பலத்தைக்கொண்டு, ஐம்பத்திரண்டு மலைக்கோட்டைகளைப் பிடித்து, சக்ரவர்த்திப் பதவி அடைந்து, எல்லா தேசத்து அரசர்களுக்கும் தன்னை பேட்டி காணும்படி அழைப்பு அனுப்பினர். அப்பொழுது, அகம்மதாபாத் என்னும் இடமும், ஔரங்கசீபினால் ஜெயிக்கப்பட்டிருந்தது. அந்த இடத்திற்கு எல்லா தேசத்து அரசர்களையும் வரவழைத்தார். சம்பாஜி ராஜாவும் அவர்களுடன் போய்ச் சேர்ந்தார். எல்லோரும் பாதுஷாவின் பேட்டியைக் காணச் சென்றார்கள். அப்பொழுது எல்லோரும் குனிந்து வணங்கினார்கள். சம்பாஜி ராஜாமட்டும் குனிந்து வணங்கவில்லை. அதனால் பாதுஷாவிற்குக் கோபம் எழுந்து சம்பாஜி ராஜாவைக் கைதுசெய்வித்தார். அவருடைய கைதியாக நாலாறு மாதங்கள் இருந்து, மிட்டாய்ப் பெட்டியில் உட்கார்ந்து வெளியில் வந்து, தன் ராஜ்யத்தை அடைந்து இராஜ்ய பரிபாலனம் செய்து வந்தார். அவர் கைதியினின்றும் தப்பிவிட்ட செய்தி ஔரங்கசீபிற்குத் தெரிந்து,

சைனியத்தை அனுப்பி, சம்பாஜி ராஜாவைப் பிடித்து வரும்படி உத்திரவிட்டார். அப்படைகள் சம்பாஜி ராஜாவுடன் யுத்தத்திற்கு வந்தது. அப்பொழுது சம்பாஜி ராஜா அவர்களுடன் யுத்தம் செய்து, வந்த சேனைகளையும் சேனைத் தலைவர்களையும் தோற்கடித்து விரட்டினார். கொல்லப்பட்டவர்களைத் தவிர எஞ்சி நின்றவர்கள் பாதுஷாவிடம் போய் இதை அறிவித்தனர். பாதுஷா மறுபடியும் சேனைகளுடன், சேனா நாயக்கரையும், மந்திரியையும் அனுப்பினார். அவர்கள் சம்பாஜி ராஜாவுடன் யுத்தம் செய்தும், தந்திரங்களைக் கையாண்டும் சம்பாஜி ராஜாவைப் பிடித்துக்கொண்டு போய் பாதுஷாவிடம் ஒப்படைத்தார்கள். பாதுஷா, சம்பாஜி ராஜாவைப் பார்த்து நீர் குனிந்து வணங்கினால் உம்மை விட்டுவிடுகிறோம் என்றார். அப்பொழுது சம்பாஜி ராஜா பதில் அளித்ததாவது:—"நான் தற்சமயம் உம்முடைய கையில் அகப்பட்டிருப்பதைப் போன்று தாங்கள் நம்மிடம் அகப்பட்டிருந்தால் அப்பொழுது தெரியும்" என்றார். ஔரங்கசீபிற்கு கோபம் எழுந்து மறுபடியும் கைது செய்து வைத்தார். சில நாட்கள் சென்ற பிறகு, சம்பாஜி ராஜா தனக்குத் தலை வணங்க வேண்டுமென்று ஔரங்கசீப் நினைத்து, ஒரு சிறிய நிலையையுடைய வாசற்படியைச் செய்து சம்பாஜி ராஜாவை அவ்வழியாக பேட்டி காண வரும்படி அழைத்தார். அப்பொழுது சம்பாஜி ராஜா, முதலில் கால்களை உள்ளே விட்டு வெளியில் வந்தார். இதைப் பார்த்து பாதுஷா மிக்க சந்தோஷமடைந்து, இவர் ஒரு வீரனாக இருக்கிறபடியால் இவரைக் கொல்லக்கூடாது, என்று நினைத்து, "நீர் முகமதியனாக மாறினால் உம்மை விட்டுவிடுகிறோம்" என்றார். அப்பொழுது சம்பாஜி ராஜா "உங்களுடைய மகளை எனக்குக் கொடுங்கள். நான் முகமதியனாகிவிடுகிறேன்" என்றார். அவ்வார்த்தை கடூரமாகத் தோன்றி, பாதுஷா அவரைக் கொன்றுவிடும்படி உத்திரவு கொடுத்தார். அதன் பிரகாரம் அவரைக் கொன்று விட்டார்கள். அப்பொழுது சகம் 1618, ஈசுவர வருடம். அப்பொழுது பாதுஷாவின் மகள் ருதுவாகியிருந்தாள். இவ்விஷயம் அவளுக்குத் தெரிந்து, இப்பேர்ப்பட்ட பெருந்தன்மையும், சம அந்தஸ்துமுடைய அரசன் (தன் நிலைமை

யை உத்தேசித்து) பயங்கொள்ளாது என்னை அடைய வேண்டும் என்று கேட்டு அதற்காக உயிரை இழந்துவிட்டார். நான் அப்பேர்ப்பட்ட வீரனுக்கே மனைவி. அவனைத் தவிர மற்ற எல்லா ஆடவர்களும் என்னுடைய புத்திரர்கள், பிதாக்கள், சகோதரர்கள், என்று நிச்சயித்து முகமதிய வழக்கப்படி தாக்ஷணப்பொடியைத் தடவிக்கொண்டாள். முகமதிய மார்க்கப்படி கன்னியாக இருப்பவர்கள் தாக்ஷணப் பொடியை உபயோகிப்பதில்லை. விவாகம் செய்த பிறகுதான் உபயோகிப்பார்கள். தன் மகள் தாக்ஷணப் பொடியை உபயோகித்த செய்தியை பாதுஷா அறிந்து மகளைப் பார்த்து, "இது என்ன இப்படிச் செய்தாய்?" என்று கேட்டதற்கு அவள், "நான் உத்தமமானதைத்தான் செய்தேன்; ஆனால், தாங்கள் இரண்டு விஷயங்களை மறந்துவிட்டீர்கள். முதலாவது, உங்களைப் போன்றவர்களுடைய வயிற்றில் ஜன்மம் எடுத்த பிறகு, தாங்கள் என்னை உங்களுக்குக் கீழ்உள்ள ஒருவனுக்குத்தான் கொடுக்கவேண்டி வரும். சம்பாஜி ராஜா அப்படிப்பட்டவரல்ல. உங்களுடன் சரிசமமாகப் போராடி, உங்களை வணங்க முடியாது என்று சொல்லி, தன் வீரத்தைக் காப்பாற்றிக்கொண்டார். மேலும், என்னை மணந்துகொள்ள ஆசைப்பட்டுக் கேட்ட அநேக தேசத்து அரசர்களில், இவரைக் காட்டிலும் பெரிய வீரர் வேறு யாரையாவது தாங்கள் பார்த்து இருக்கிறீர்களா? இதைத் தவிர, நம்முடைய மதத்தின் கோட்பாடுகளின்படி, ஒருவன் முகமதியனாக மாறுவதாக ஒப்புக்கொண்டால், அவன் எதை வேண்டுமென்று கேட்டாலும், அதனைக் கொடுத்து அவனை முகமதியனாக்கவேண்டும் என்பது முறை. அதையும் தாங்கள் செய்யத் தவறிவிட்டீர்கள். இனிமேல், நான் வேறு எவரையாவது விவாகம் செய்துகொண்டு, எத்தனை நாட்கள் ஜீவித்திருக்கக் கூடும். முக்கியமாக, கீர்த்தியைத்தான் காப்பாற்றவேண்டும். அதற்காக, எவர் என்மீது மோகங்கொண்டு, உயிரையே திரணமாக நினைத்தாரோ, அவர் பொருட்டு நான் விதவையாக வாழ்வதுதான் எனக்கு சுவதர்மம். ஆனால், சம்பாஜி ராஜாவைத் தவிர இதர ஆடவர்களுடன் பேசுவதுதான் விபசாரம் என்று நினைக்கிறேன்." என்று பரிசுத்தமான மனதுடன் பதில் சொன்னாள்.

"பாதுஷா விசனமடைந்து, கடவுள் என் வயிற்றில் மூன்று புத்திரர்களுக்குப் பிறகு ஒரே ஒரு மகளைக் கொடுத்தார்; அவளுடைய இல்வாழ்க்கை சாரமில்லாமல் போய்விட்டது. மேலும், அவள் இரண்டு சரியான காரணங்களைச் சொல்லித், தன் நிச்சயத்தையும் தெரிவித்து விட்டாள். அவள் கூறியது இகபர வாழ்க்கைக்கு யுக்தமான வார்த்தையாக இருக்கிறது. ஆனால், நான் குரோதத்தினால் வஞ்சிக்கப்பட்டேன். ஆனதுபற்றியே, பொறுமையைத் தவிர பெரிய காரியம் வேறொன்றும் கிடையாது என்று இதர கிரந்தங்களும் சொல்லுகின்றன. அது உண்மையே" என்று தன்னைத் தானே நொந்துகொண்டு இனிமேல் இக்குழந்தையின் மனதிற்கு எந்த முறையில் சௌக்கியத்தைக் கொடுத்துப் பார்க்கப் போகிறோம் என்ற விசனத்தினால், சம்பாஜி ராஜாவின் ராஜ்யம் முதலிய சொத்துக்களுக்கு உரிமையுள்ள அரசர் யாராவது இருக்கிறார்களா என்று கண்டுபிடிக்கும்படிக்கும், அவ்விதமிருப்பவரை அழைத்து வரும்படிக்கும் உத்திரவு கொடுத்தார்.

அது சம்பந்தமாக, சாதாரா, புனா பிராந்தியங்களில் பாதுஷாவின் ஆட்களால் விசாரிக்கப்பட்டது. முன்பு சம்பாஜி ராஜாவைப் பிடித்துக்கொண்டு போகும்பொழுது அவருக்கு குமாரத்தினமும், குலதீபகனுமான ஷாஹூ ராஜா சகம் 1615, பவ வருடத்தில் பிறந்து, மூன்று வயதுடையவராக இருந்தார் என்று தெரிய வந்தது. ஆனால் அவரைச் சேர்ந்தவர்கள் அவரைக் கண்காணாதபடி பாதுஷாவின் பயத்திற்காக ஒளித்து வைத்து இருந்தார்கள். அதனால் பாதுஷா பிரமாண பூர்வமாக அபயமளித்திருப்பதைத் தெரிவித்து, சோதனை செய்து அவரைக் கண்டு பிடிப்பதற்காக ஆட்கள் அனுப்பப்பட்டார்கள். அதற்காக வந்தவர்கள் குழந்தையாகிய ஷாஹூ ராஜாவை டில்லிக்கு அழைத்துக் கொண்டு போய் ஔரங்கசீப் பாதுஷாவினிடம் சேர்ப்பித்தார்கள்.

அப்பொழுது பாதுஷா ஆனந்தத்தையும், வருத்தத்தையும் ஒருங்கே அடைந்தவராய், ஷாஹூ ராஜாவைத் தன் இடுப்பில்

எடுத்து வைத்துக்கொண்டு, தன் மகளுடைய அந்தப்புரத்திற்குச் சென்று, "அம்மா! உன்னுடைய குழந்தையை வாங்கிக்கொள்" என்று குழந்தையை அவள் கையில் கொடுத்தார். அப்பொழுது அவள் மிக்க சந்தோஷமடைந்து, தன்னுடைய எல்லா சௌக்கியத்திற்கும் காரணம் இக்குழந்தைதான் என்று நிச்சயித்து, அக்குழந்தைக்கு, அவனுடைய இந்து தர்மத்திற்கு எள்ளளவும் கெடுதல் ஏற்படாதபடி எல்லாவித சம்ரக்ஷணைகளுடன், கல்வியையும் கற்றுக் கொடுக்கும்படி ஏற்பாடு செய்தாள். ஷாஹூ ராஜா வளர்பிறைச் சந்திரன்போல் வளர்ந்து, கல்வி கற்று முடிந்த பொழுது பன்னிரண்டு வயதாகியிருந்தது. அப்பொழுது அந்தப் பெண்மணி தன் மகனின் அழகு, வயது, கல்வி, எவரிடமும் அன்பு முதலிய நற்குணங்களைப் பார்த்து அவருடைய விவாகத்திற்கு வேண்டிய ஏற்பாடு செய்ய நினைத்து பாதுஷாவிடம் தெரிவித்தாள்.

அப்பொழுது பாதுஷா விவாகத்திற்காகச் செலவுகளுக்கு வேண்டிய திரவியத்தைக் கொடுத்து, அவருடைய விவாகத்தை நடத்தித் தம்பதிகளையும் அழைத்துவரும்படி உத்திரவிட்டார்.

அதன் பிரகாரமே ஷாஹூ ராஜாவிற்கு ஜாதவின் மகள் சக்குவார்பாயி சாகேபை விவாகம் செய்து கொடுக்கப்பட்டது. பிறகு மணமான தம்பதிகளைப் பாதுஷாவிடம் அனுப்பும்பொழுது, உறவினர் முதலியோர்கள் பாதுஷா பெரியவராக இருந்தாலும், ஜாதியில் முகமதியர் ஆயிற்றே என்று மனதில் எண்ணி, அந்த சக்வார்பாயி சாயேபாவை அனுப்பாமல், அவ்விடத்திற்கு, வீரு என்ற வேலைக்காரியை அனுப்புவதாக நிச்சயித்து அவ்வாறே அவளை உருமாற்றி அனுப்பினார்கள். அப்பொழுது பாதுஷா இவ்விருவர்களையும் இருதுடைகளின் மீதும் உட்கார வைத்துப் பார்க்கும்பொழுது மணமகளின் இடத்தில் மாறுபாடு இருப்பதாகத் தோன்றினபோதிலும் தன் மடியின்மீது உட்கார வைத்தபடியால் இம்மனைவிதான் இந்த ஷாஹூ ராஜாவின் சகல பாக்கியமும் அனுபவிப்பாள் என்று சொல்லி, இருவ

ருடைய சிரசைத் தடவிக் கொடுத்து இருவரையும் எல்லா ஆபரணங்களால் அலங்கரித்து ஷாஹூ ராஜாவின் தந்தையும், பாட்டனாரும் சம்பாதித்திருந்த இராஜ்யங்கள் எல்லாவற்றையும் அவருக்குக் கொடுத்து, அவருடைய சொந்த ஊருக்கு விடை கொடுத்து அனுப்பினார். அப்பொழுது பாதுஷாவின் மகள், பாதுஷாவைப் பார்த்துச் சொன்னதாவது, "எல்லாவற்றையும் ஷாஹூவின் மனைவிக்குக் கொடுத்துவிட்டீர்களே! என் மகன் ஷாஹூவுக்கு என் பாகம் ஒன்றுமே சேரவில்லையே!" என்று சொன்னாள்.

பாதுஷா அதைக் கேட்டு, சரிதான் என்று எண்ணி, என் ராஜ்யம் முதலியவைகளுக்கு என் மூன்று மகன்கள் எவ்விதம் பாகஸ்தர்களோ அதைப்போலவே நான்காவது, மகளானபடியால் அவளுடைய பாகம் அவளுடைய மகன்தான் அடையவேண்டுமென்று தீர்மானித்து, பாதுஷாவின் வருமானத்தில் ஷாஹூ ராஜாவிற்கு நான்கில் ஒரு பங்கு கிடைக்கவேண்டியது என்று வாக்குறுதி செய்து கொடுத்து, ஷாஹூ ராஜாவைப் புனபிராந்தியத்திற்கு அனுப்பினார். ஷாஹூ ராஜா சாதாராவிற்கு வந்து சகம் 1626 பார்த்திப வருடம் பட்டத்தில் அமர்ந்தார்.

அதன் பிறகு ஷாஹூ மகாராஜா தன் பங்காளிகளில் ஒரு பையனாகிய ரகோஜி என்பவனை வளர்த்து வந்தார். மேலும், ஒரு நாள் வெளியில் உலாவச் சென்ற இடத்தில் அழகிய குழந்தை ஒன்று விளையாடிக்கொண்டிருந்ததைப் பார்த்துத் தன் பல்லக்கில் ஏற்றி வைத்துக்கொண்டு அரண்மனைக்கு வந்தார். விசாரித்ததில் அக்குழந்தை, அரசருக்கு வேண்டியவரான லோகண்டே என்பவருடைய குழந்தை என்று தெரிந்தது. அக்குழந்தையைப் பிரியமாய் வளர்த்து, பத்தேசிங் என்று பெயர் வைத்து அவனுக்கு ஏராளமான சொத்துக்களையும் கொடுத்து, நல்ல குலத்தில் ஒரு பெண்ணை விவாகம் செய்து வைத்தும், அவனுக்கு அக்கல்கோட் கோட்டையையும் அதன் கீழ் உள்ள இராஜ்யத்தையும் அளித்தார். அது போலவே அவர் வளர்த்து

வந்த ரகோஜி போசலே என்ற பையனை வீரு பாயிக்கு சுவீகாரமாகக் கொடுத்து, அவனுடைய விவாகத்தையும் செய்து வைத்தார். வீரு பாயிக்கு சுவீகாரம் கொடுத்ததினால், ஏதாவது குறை சொல்லுவதற்கு இடமுண்டு என்று நினைத்து, அந்த ரகோஜி போஸலேயைத் தன் ராஜ்யத்தில் வைக்காமல், அந்த சுவீகாரத்தினால் தாழ்த்தப்பட்ட யோக்கியதைக்குத் தக்கபடி நாக்பூர் ராஜ்யத்தைக் கொடுத்தார்.

முன்பு அரச வம்ச சரித்திரத்தில் விவரிக்கப்பட்ட 13-வது அரசராகிய பாவாஜி ராஜாவின் குமாரர்களாகிய மாலோஜி, விட்டோஜி என்பவர்களில், விட்டோஜி ராஜாவின் குமாரர்கள் எட்டு பேர்களில் நிஜாம் ஷாவின் காலத்திய சம்பவங்களில் இரண்டொருவர் கியாதி விவரிக்கப்பட்டது. மற்றவர்களில், மாலோஜி என்பவருடைய வம்ச பரம்பரை அடியில்கண்டபடி விஸ்தாரம் அடைந்தது:— மாலோஜியின் குமாரர் மணகோஜி, மணகோஜியின் குமாரர் விட்டோஜி, விட்டோஜியின் மகன் பரசோஜி. இவருக்கு இரு புத்திரர்கள். மூத்தவர் சம்பாஜி. இளையவர் ராம ராஜா. அந்த ராம ராஜாவை ஷாஹூ ராஜா தன்னிடத்திலேயே வைத்துக்கொண்டு போஷித்து வந்தார்.

சில காலத்திற்குப் பிறகு ஷாஹூ ராஜாவிற்குப் பலவித உபத்திரவங்கள் ஏற்பட்டன. அப்பொழுது ஷாஹூ ராஜா புனாவிலிருந்து பேஷ்வாவை வரவழைத்து "தாங்கள் எவ்விதத்திலாவது நம்முடைய நல்ல பெயரைக் காப்பாற்ற வேண்டும்" என்று சொல்லிவிட்டுப் பரமபதத்தை அடைந்தார்.

அதன் பிறகு பேஷ்வா, ராஜாவினால் போஷிக்கப்பட்டு வந்த ராம ராஜாவை, சகம் 1674 ஸ்ரீமுக வருடத்தில் பட்டத்தில் வைத்தார். அவர் சில வருஷங்கள்வரை இராஜ்யத்தை அனுபவித்து இறந்தார். அப்போது விட்டோஜி ராஜாவினுடைய எட்டு புத்திரர்களில் ஒருவரான கேலோஜி ராஜாவின் பேரனை உமாஜி ராஜாவின் மகன் ஷாஹூ ராஜாவை, பேஷ்வா, சகம் 1695

ஜெய வருடத்தில் சாதாராவின் பட்டத்திற்கு முடிசூட்டினர். *இப்பொழுது அவரே அரசராக இருக்கிறார்.

சிவாஜி ராஜாவின் இரண்டாவது புத்திரர் ராஜாராமிற்கு பனலாவின் இராஜ்யத்தைக் கொடுக்கப்பட்டிருந்தது. அவர் இறந்த பிறகு அவருடைய குலதீபகனையும் சொந்த புத்திரனுமான சம்பாஜி ராஜே என்பவர் இராஜ்பத்தை நடத்தி வந்தார். அவருக்கு சந்ததி இல்லை. அவர் இறக்கும் தறுவாயில் தன் தாயாதி வகைகளில் உள்ள ஒரு பையனை எடுத்து அவனை சிவாஜி ராஜா என்று பெயரிட்டு பனலா ராஜ்பத்தில் முடிசூட்டினர்.

முன் சொல்லப்பட்டபடி சிவாஜி ராஜா ராஜ்யம் வகித்துக் கொண்டிருக்கும்பொழுது ஏகோஜி ராஜா தஞ்சாவூரைக் கைப்பற்றினர். அவருடைய வம்சத்தை இனி விஸ்தாரமாய் எழுதுகிறோம்.

போசலே வம்சத்தில் ஏகோஜி ராஜா என்பவர் பெயர்பெற்று விளங்கினர். நான்காம் ஏகோஜி ராஜாவாகிய அவர் இரண்டாம் தடவை பெங்களூரில் ஆண்டு வரும்பொழுது, விஜாபுரத்தின் பாதுஷா அல்லியதில்ஷாவிற்கு கடிதம் ஒன்று வந்தது. அதில் "தஞ்சாவூரின் ராஜா விஜயராகவ நாயுடு வகையராவின்மீது திருச்சினப்பள்ளியின் நாயுடு ராஜா படையெடுத்துக் கோட்டையையும் முற்றுகை செய்து இருப்பதாக தஞ்சாவூர் ராஜா தன் வக்கீல் மூலம் சொல்லி அனுப்பியிருப்பதால், காதர் என்பவரையும் கலாஸ்கான், அப்துல் ஹலீம் என்ற இரு மந்திரிகளையும் சிறு படை ஒன்றையும் கொடுத்து அனுப்பியிருக்கிறோம். தாங்களும் உங்களுடைய சேனைகளுடன் இவர்களோடு சென்று திருச்சினப்பள்ளி நாயுடுவின் சேனைகளை வென்று, தஞ்சாவூர் நாயுடு வகையராவுக்கு விடுதலை அளித்து, பாதுஷாவால் அனுப்

*அதாவது இந்த சிலா சாஸனம் எழுதிய காலமாகிய சாலிவாஹன சகம் 1725 ருத்ரோத்காரி௵ மார்கழி௴ (1803 டிஸம்பர்).

பப்பட்டவர்களுக்கும் மற்றுமுள்ள சேனைகளுக்கும் முன்பே கொடுக்கப்பட்டிருந்த செலவையும், கப்பத் துகையையும் அவரிடமிருந்து வாங்கி அனுப்பவும்" என்று எழுதியிருந்தது. அதை அனுசரித்து ஏகோஜி ராஜா பெங்களூரின் கோட்டையையும், இராஜ்யத்தையும் காகல்கர் காடே ஜுஜாகாவினிடம் ஒப்படைத்துவிட்டு, இவ்விரு மந்திரிகளுடனும் சேனைகளுடனும் புறப்பட்டார். வரும்பொழுது ஆரணி என்ற ராஜ்யத்தைக் கைப்பற்றி, அங்கிருந்து தஞ்சாவூர் பிராந்தியத்திற்கு வந்து, திருச்சினப்பள்ளி நாயுடுவின் சேனைகளை வென்று தஞ்சாவூர் நாயுடு வகையராவை விடுவித்து, பாதுஷாவின் படைக்குக் கொடுக்கவேண்டிய பணத்திற்காக திருமலவாடியில் இருந்துகொண்டு, தன்னுடன் வந்த காதர் என்பவரையும் இரு மந்திரிகளாகிய கலாஸ்கான், அப்துல் ஹலீம் இவர்களையும் கோட்டைக்கு வெளியில் தங்கி இருக்கும்படி செய்தார், அப்போது ஏகோஜிக்கு இரண்டாவது புத்திரர் சரபோஜி ராஜாவின் ஜன்ம காலமானபடியால் திருமலவாடியிலேயே தங்கியிருந்தார். அப்பொழுது, அதர்வது சகம் 1596 ராக்ஷஸ வருடம் சரபோஜி ராஜா என்று பெயர் வைக்கப்பட்ட மூன்றாவது சரபோஜி ராஜா பிறந்தார்.

இதன் பிறகு தஞ்சாவூர் ராஜாவான விஜயராகவ நாயுடு வகையராக்களுள் ஒருவருக்கொருவர் விவாதம் ஏற்பட்டு, ஒருவர் மற்றொருவருடைய நேர்மையைப்பற்றிக் குற்றஞ் சாட்டி, விஜாபுரத்திற்கு முந்தி அனுப்பிய வக்கீலுக்குச் சரியான அதிகாரமில்லை யென்று நிராகரித்துக் கோட்டைக்கு வெளியில் உள்ள விஜாப்பூர் மந்திரிகளிடம் செலுத்தவேண்டிய கப்பம், செலவு முதலிய துகையைக் கொடுக்காமல் ஏமாற்றிவிட வேண்டும் என்று யோசனை செய்தார்கள். இரண்டு தடவை கேட்டு அனுப்பியும் துகை வரவில்லை. இவ்விதமாகச் செலுத்தவேண்டிய துகை செலுத்தாததினால், நிர்வாகத்தை நடத்தும் மந்திரியும் வக்கீலும் நாயுடு வகையராக்களோடு விரோதமாகிக் கோட்டைக்கு வெளியில் உள்ள இரு பாதுஷா மந்திரிகளிடம் வந்து தெரிவித்ததாவது: "நாயுடு வகையராக்களின் போக்கு நேர்மை

யற்றதாக இருக்கிறது. ஒருவரோடொருவர் ஒற்றுமை இல்லாமல் இராஜ்யத்தை அழிக்கிறார்கள். அவர்களால் இந்த இராஜ்யத்தைக் காப்பாற்ற முடியாதாகையால் தாங்கள் இந்த இராஜ்யத்தை ஆக்கிரமிக்கவேண்டும்; வீணில் ஒருவர்க்கொருவர் சண்டை ஏற்பட்டு அதில் பதினைந்து இருபது பேர்கள் இறக்கப் போகிறார்கள். கோட்டையில் இருக்கும் படைகள் இந்த ராஜாவுக்கு அடங்கியிருக்கவில்லை. நாளை அல்லது நாளைய மறுநாள் கலகம் செய்து, அரசனைக் கொன்று, கொள்ளையடிப்பதாக யோசனை செய்திருக்கிறார்கள். ஆகையினால் தாங்களே இந்த ராஜ்யத்தை ஆளவேண்டும்" என்று சொன்னார்கள். அப்பொழுது அந்த காதர் என்பவரும், கலாஸ்கான், அப்துல் ஹலீம் என்ற இரு மந்திரிகளும் இரண்டொரு நாட்கள்வரை விசாரித்ததில், இவர்கள் சொல்லிய விஷயங்கள் அனைத்தும் உண்மையென்று தெரிந்தது. மேலும் இராஜ்யத்தில் உள்ள சேனைகளின் சர்தார்களும் இதே விதமாக அறிவிக்க ஆரம்பித்தார்கள். அப்பொழுது அந்த வக்கீலுக்கு இரு மந்திரிகளும் சொல்லியதாவது:—"எங்கள் சொந்தப் பொறுப்பில் ஒன்றும் செய்ய முடியாது. ஏகோஜி ராஜா திருமலவாடியில் இருக்கிறார். அவருக்கு நாங்கள் கடிதம் எழுதி விடுகிறோம். நீங்கள் இருவரும் சென்று அவரை அழைத்து வந்தால் காரியத்தை சாதிக்கலாம்" என்று வக்கீலிடம் சொல்லி, ஏகோஜி ராஜாவுக்குக் கடிதம் எழுதிக் கொடுத்தார்கள். அதைப் பெற்றுக்கொண்டு வக்கீல் திருமலவாடிக்கு ஏகோஜி ராஜாவிடம் சென்று கடிதத்தையும் கொடுத்துக் கோட்டையில் உள்ள ராஜாவைப்பற்றியும், படைகளைப்பற்றியும், பங்காளியைப் பற்றி சகல விருத்தாந்தங்களையும் எடுத்துரைத்து நிர்வாகத்தை ஏற்கும்படி வேண்டினார்.

அப்போது ஏகோஜீ ராஜா உடனே தன் படையோடு தஞ்சையை அடைந்து, அவ்விரு மந்திரிகளுடன் கலந்து பேசிக்கொண்டு அவர்களோடு சகம் 1596 ராக்ஷஸ வருஷம் மாக வளர்பிறை சப்தமி தினத்தன்று தஞ்சைக் கோட்டையைப் பிரவேசித்தார். அவர் கோட்டையின் வடக்கு வாயில் வழியாக உள்ளே

வந்ததினால், அவ்வடக்கு வாயிலுக்கு 'அல்லிவாயில்' எனப்பெயர் வந்தது. அவ்வாயில் வழியாகக் கொஞ்ச தூரம் தெற்கு நோக்கிச் சென்றபோது, அரண்மனையிலுள்ள நாயுடு அரசனும், அவருடைய அண்ணன் தம்பிமார்களும் மற்ற பங்காளிகளும் சிறியதோர் படையுடன் எதிர்நோக்கி வந்தனர். பிறகு அவர்கள் ஆயுதங்களைத் தாங்கிச் சண்டையிட்டதால், நாயுடு அரசனின் சேனைகளில் எட்டுப்பேர் உயிர் துறந்தனர். படையும் சின்னபின்னமாக்கப்பட்டது. எஞ்சியிருந்த எதிர்ப்புக்களையும் வென்று ஏகோஜி ராஜா கோட்டையை ஜயித்துக் கிழக்கு வாயில் வழியாக வெளியே வந்தார். ஜயித்த பிறகு கிழக்கு வாயில் வழியாக வெளி வந்ததனால் அவ்வாயிலுக்கு "பத்தே தரவாஜா" அதாவது "ஜயிக்கப்பட்ட வாயில்" எனப் பெயர் வழங்கலாயிற்று. முன்பு அமைச்சராக இருந்த மந்திரியையே திரும்பவும் வேலையில் அமர்த்திவிட்டு, ஏகோஜி ராஜா தன்னுடன் வந்த பாதுஷாவின் இரு மந்திரிகளிடம் தான் பெங்களூருக்குப் போகவேண்டுமென்று அனுமதி கேட்டார்.

அப்போது அவ்விரு மந்திரிமார்களும் தங்களுக்குள் ஒருவரோடொருவர் ராஜ்யத்திற்காகச் சண்டையிட்டுக் கொண்டிருப்பதால் அச்சண்டை தீரும்வரையில் அங்கேயே தங்கிவிட்டுப் பிறகு போகும்படி வேண்டினர். இவ்வாறு இரண்டு மாதங்கள் சென்றன. இதற்குள் ஔரங்கசீப் பாதுஷாவின் படையெடுப்பினால் முழு ராஜ்யமும் அவர் வசம் ஆயிற்று என்ற செய்தி வந்தது. பீஜாப்பூரும் சண்டை செய்யுமோ செய்யாதோ என்ற சந்தேகமும் உண்டாயிற்று. உடனே காதரும் மற்றுமுள்ள கலாஸ், அப்துல் ஹலீம் என்ற இரு மந்திரிகளும் ஒன்றுகூடி யோசனை செய்தார்கள். நம்மில் இருவரும் சண்டையிட்டுக் கொள்வதால் ஒருவர்தான் இங்கு இருப்போம். ஆனால், ஏகோஜி ராஜா இங்கிருந்து போய்விட்டால், நம்மால் பிறகு இக்கோட்டையை சமாளிக்க முடியாது. ஏனெனில், திருச்சினாப்பள்ளி நாயுடு நம்மினும் பலமுள்ளவன். இரண்டாவதாக, அல்லியதில்ஷாவும் இந்த ராஜ்யத்தை நம்மிடமே விட்டுவைக்க மாட்டார். ஏகோஜி ராஜா

சூராக இருக்கிறார். திருச்சினாப்பள்ளியிலுள்ள நாயுடுவுக்கும் பதில் சொல்லுவார். மேலும் இவருடைய சகோதரரான சிவாஜி ராஜா அந்தப் பிராந்தியத்தில் பிரபலமாய் விளங்குகிறாராதலால், அல்லியதில்ஷா இவரை ஒன்றும் செய்யமாட்டார். இக்காரணங்களைக் கொண்டு ஏகோஜி ராஜாதான் ராஜ்யத்தை நடத்த வேண்டும். அவர்கள் வம்ச பரம்பரையாய் நமக்கு மரியாதை நடத்த வேண்டும்" என்றிவ்வாறு ஏகோஜி ராஜாவிடம் பேசி முடித்துக் கொண்டு சகம் 1597 நள வருஷம் (1675) சைத்ர மாதத்தில் ஏகோஜி ராஜாவை தஞ்சை ராஜ்யத்தின் சிம்மாசனத்தில் அமர்த்தினார்கள்.

ஏகோஜி ராஜா சிம்மாசனத்தில் ஏறியவுடன் அல்லியதில்ஷாவுக்குத் தகுந்த காணிக்கைகளை அனுப்பி, ஒரு கடிதமும் வெகு சாதுர்யமாய் எழுதி, அக்கடிதத்தில் தான் நீண்ட காலம் அவருடைய மந்திரிகளைத் தன்னிடத்திலேயே வைத்துக்கொண்டதற்காக கோபித்துக்கொள்ளாம லிருக்கும்படிக்கும் எழுதியனுப்பினார். அக்கடிதத்தைக் கண்டு அல்லியதில்ஷா மிக்க சந்தோஷமடைந்து, ஏகோஜி ராஜாவுக்கு அநேக அலங்கார ஆடைகளை அனுப்பியதுமல்லாமல், ஏகோஜி ராஜாவின் வம்சத்தினர்கள் பரம்பரையாய் தஞ்சாவூர் ராஜ்யத்தை அனுபவிக்கும்படி ஒரு சாசுவத சாஸனமொன்றையு மெழுதியனுப்பினார். அதன் பிறகு திருச்சினாப்பள்ளியிலுள்ள நாயுடு தஞ்சாவூரை ரகசியமாய்த் த்தாக்க யோசனை செய்தபோது, ஏகோஜி ராஜா அதை யறிந்து அவருடன் சண்டையிட்டு அவனிடமிருந்து சந்தலி மஹாலை *'வெற்றிலை பாக்கிற்காக' என்று எழுதி வாங்கிக்கொண்டார். பிறகு காதருக்கும், கலாஸ் அப்துல் ஹலீம் என்ற இரு மந்திரிகளுக்கும் அவரவர்களுக்குத் தக்க மரியாதை செய்துவிட்டு, ராஜ்யத்தை நடத்தி வந்தார்.

சகம் 1598 பிங்கள வருஷம் (1676) ஏகோஜி ராஜாவுக்கு மூன்றாவது புத்திரரான துக்கோஜி ராஜா பிறந்தார். இம்மூன்று

* 'வெற்றிலைப் பாக்கிற்காக' — ஞாபகார்த்தமான ஒரு சிறிய வெகுமதியாக.

புத்திரர்களும் ஏகோஜி ராஜாவுக்கு, மூத்த மனைவியாகிய இங்களே வம்சத்தைச் சேர்ந்த தீபாபாயி சாயிபாவுக்குப் பிறந்தவர்கள். அவருடைய இளைய மனைவியாகிய மோஹிதே வம்சத்தைச் சேர்ந்த அண்ணுபாயி சாஹிபாவிடத்தில் அவருக்கு ஒரு மகள் பிறந்தாள். இதைத் தவிர இவருக்கு அபிமானத்தினால் சேர்த்துக்கொள்ளப்பட்ட மனைவிகள் ஒன்பது பேர். இவர்களிடத்தில் ராஜாவுக்கு (1) சந்திரபான், (2) சூரியபான், (3) மித்ரபான், (4) கலேபான், (5) கீர்த்திபான், (6) விஜயபான், (7) உதயபான் என ஏழு மக்கள் பிறந்தனர். இவர்களுள் மூத்தவனான சந்திரபான் மிகவும் சூரராய் விளங்கினார். ஆக ஏகோஜி ராஜாவுக்கு பத்து புத்திரர்கள் இருந்தார்கள். பிறகு கொஞ்ச காலம் நீதியுடன் ராஜ்ய பரிபாலனம் செய்து சகம் 1604 ருதிரோத்காரி வருஷத்தில் (1782) ஏகோஜி ராஜா தெய்வகதி யடைந்தார்.

உடனே மூத்த மகனான மூன்றாவது ஷஹாஜி ராஜா, பட்டத்தை அடைந்தார். அவர் சிமாபாயி சாஹிபா என்ற ஒரு மனைவியை விவாஹம் செய்துகொண்டார். அபிமானமாக எடுத்துக் கொள்ளப்பட்ட ஸ்திரீகளும் அநேகர் இருந்தனர். அந்த ஷஹாஜீ ராஜா இளம் பிராயத்திலேயே இராஜ்யத்தை யடைந்து, தம்முடைய புத்திசாலித்தனத்தினால் தமக்கும் தம்பிகளான, சரபோஜீ ராஜா, துக்கோஜீ ராஜா இவ்விருவருக்கும் சரியான காலத்தில் கலியாணம் செய்ய ஏற்பாடு செய்து, அப்படியே செய்வித்து, தன் தாயாரான தீபாபாயி ஆவூசாயேபாவின் அநுமதியின் பேரில் எல்லா பிரஜைகளின் நன்மையையே நாடித் தன் சேனையையும் பொக்கிஷத்தையும் விருத்தி செய்துகொண்டு ராஜ்யத்தை நடத்தி வந்தார்.

அந்த சமயத்தில் முல்லாய என்பவனால் கலகம் ஒன்றும், எஜாலீப்காரன் என்பவனால் மற்றொரு கலகமும் ஆக இரண்டு கலகங்கள் ஏற்பட்டன. அப்போது அவைகளைத் தன் ராஜ்யத்தின் எல்லைக்குள் வராமல் தடுத்து, பீஜாபுரத்து பாதுஷாவுடன் சிநேக பாவத்துடன் இருந்துகொண்டு, கப்பத்தையும் ஒருவாறு தீர்த்துக்கொண்டு, ராஜ்யபாரம் நடத்தி வந்தனர்.

அந்த சமயத்தில் ஷஹாஜி ராஜாவின் மூன்ருவது குமார ரான துகோஜி ராஜாவிற்கு சகம் 1617 தாது வருஷத்தில் (1695) ஐந்தாவது ஏகோஜி ராஜா பிறந்தார். அவருக்கு பாவா சாஹேப் ராஜா என்ற வேருெரு பெயரும் இருந்து வந்தது. இவ்வாறு ஷஹாஜி ராஜா நீதியுடன் அநேக நாட்கள் ராஜ்யபாரம் நடத்தி சகம் 1633 நந்தன வருஷத்தில் (1711) தெய்வகதி யடைந்தார்.

உடனே அவருடைய இரண்டாவது சகோதரரான மூன்ருவது சரபோஜி ராஜா பட்டம் பெற்ருர். அவருக்குப் பட்டத்து ராணிகள் காண்டகே வம்சத்தைச் சேர்ந்த சுலக்ஷணுபாயி சாஹிபா (1), அபரூபா பாயி சாஹிபா (2), சிர்கே வம்சத்தைச் சேர்ந்த ராஜஸபாயி சாஹிபா (3) ஆக மூவர். இவர்களுடன் நெறி தவருமல் அரசு செலுத்தி வந்தார். அச்சமயத்தில், ஔரங்கசீப் பீஜாபுரத்தைக் கைப்பற்றி, அல்லியதில்ஷாவை காவலில் வைத்ததினுல் ஏற்பட்ட குழப்பம், தன் ராஜ்யம்வரைக்கும் வராமலிருக்கும்பொருட்டு அங்கிருந்து வந்த பிரமுகர்களை ஆதரித்து ராஜ்யத்தை ஆண்டு வந்தார்.

அப்போது அவருடைய தம்பியான துக்கோஜி ராஜாவுக்கு விவாகங்கள் நடந்தன. அவர் மொஹிதே குலத்தின் பெண்ணுன அரணு பாயியையும் இங்களே வம்சத்து பெண்களான ராஜ்குமார் பாயி, லக்ஷ்மீ பாயி என்றவரையும், பிங்களே குலத்தின் பெண்களான மோஹினு பாயி, மனு பாயி என்ற இருவரையும், இவ்வாறு ஐந்து ஸ்திரீகளே மணந்தார். இதைத் தவிர, அபிமானத்தால் சேர்த்துக்கொள்ளப்பட்ட மனைவிகள் அறுவரில் மராட்டிய குலத்தைச் சேர்ந்த ஒரு பெண்ணைத் தவிர மற்றெல்லோரும் நாயுடு வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள். கத்தி வைத்து விவாஹம் செய்துகொண்ட அந்த மராட்டிய பெண்ணுன அன்னபூர்ணு பாயியிடம் சகம் 1664 சர்வதாரி வருஷத்தில் பிரதாபசிம்ம ராஜா பிறந்தார். அதன் பிறகு சாமா பாயி என்று ஒரு பெண்ணும் பிறந்தாள். மேற்கூறிய நாயுடு வர்க்கத்தில் சேர்த்துக்கொள்ளப்

பட்ட ஐந்து ஸ்திரீகளிடத்தில் உண்டான சந்ததிகள் ஐந்து ஆண் குழந்தைகளான மாலோஜி ராஜா, ஹரிச்சந்திர ராஜா என்ற அண்ணுசாஹேப் ராஜா, நாநாசாஹேப் ராஜா என மூவரும், இரு பெண் குழந்தைகளும் பிறந்தார்கள். சரபோஜி ராஜாவின் தம்பியான துக்கோஜி ராஜாவுக்கு விவாகம் செய்துகொண்ட ஸ்திரீயினிடத்தில் உண்டான புத்திரன், ஐந்தாவது ஏகோஜி ராஜா என்கிற பாவா சாஹேப். விவாகஞ் செய்துகொண்ட ஸ்திரீகளைப்பற்றிய விவரமாவது :—

முதன் முதலில் இங்களே வம்சத்துப் பெண்ணுன சுஜான் பாயியையும், இரண்டாவதாக ஜயந்தீ பாயி சாஹேபாவையும், மூன்றுவதாக சக்வார் பாயி சாஹேபாவையும், நான்காவதாக சுகுமார் பாயி சாஹேபாவையும், ஐந்தாவதாக கிரிஜா பாயி சாஹேபாவையும், ஆருவதாக பார்வதி பாயி சாஹேபாவையும் இவ்வாறு ஆறு ஸ்திரீகளை மணந்துகொண்டார். இந்த ஆறு ஸ்திரீகளில், பெற்ருேர்களால் கல்யாணஞ் செய்து வைக்கப்பட்ட ஒன்றிரண்டு ஸ்திரீகள் போக மற்ற ஸ்திரீகளை அவருடைய யௌவன தசையில் தானுகவே விவாகஞ் செய்துகொண்டார். தவிர, அவரால் சேர்த்துக்கொள்ளப்பட்ட ஸ்திரீகள் மூவர்.

துக்கோஜி ராஜாவினுல் சேர்த்துக்கொள்ளப்பட்ட ஸ்திரீகளில் மராட்டிய ஜாதி ஸ்திரீயினிடத்தில் பிறந்த இரண்டாவது குமாரனுன பிரதாபசிம்மராஜா விவாகஞ் செய்துகொண்ட மனைவிமார்கள் ஐவர். முதலாவதாக மோஹிதேவம்சத்துப் பெண்ணுன அஹல்யபாயிசாயேபாவையும், பிறகு மர்கோசி வம்சத்துப் பெண்ணுன யமராயியையும், மூன்றுவதாக மோஹிதேவம்சத்தைச்சேர்ந்த சக்வார்பாயிசாகேபாவையும், நான்காவதாக துநபோஜி வம்சத்தைச் சேர்ந்த துரௌபதிபாயிசாயேபாவையும், ஐந்தாவதாக மஹடிகி வம்சத்துப் பெண்ணுன, யச்வந்த்பாயி சாகேபாவையும், இவ்வாறு ஐந்து பெண்களில் பெற்ருேர்களால் விவாகம் செய்விக்கப்பட்ட ஒன்றிரண்டு பெண்களைத்தவிர மற்றவர்களை அவருடைய யௌவனம் முதிர்ந்த தசையில் விவாகஞ்

செய்துகொண்டார். இதைத்தவிர மராட்டிய ஜாதியிலிருந்தும் நாயுடு ஜாதியிலிருந்தும் சேர்த்துக்கொள்ளப்பட்ட ஸ்திரீகள் ஏழுபேர்கள். பிரதாபசிம்ம மகாராஜாவின் சகோதரி சாமாபாயி யென்பது முன்னேயே எழுதப்பட்டிருக்கிறது. அந்த சாமா பாயியை மல்லாரிகாடேராவ் அவர்களுக்கு விவாகஞ் செய்து கொடுக்கப்பட்டது. துக்கோஜி ராஜாவால் எடுத்துக்கொள்ளப் பட்ட நாயுடு ஜாதியின் ஐந்து பெண்களிடம் பிறந்த மூன்று புத் திரர்களும் துக்கோஜி ராஜாவின் ஜீவித காலத்திலேயே தெய்வ கதியடைந்தார்கள் அவர்களுள் நாநா சாகேப் என்றவருக்கு, விவாகஞ் செய்துகொண்ட ஸ்திரீயினிடத்தில் பிறந்த ஒரு புத் திரர் அப்பூ சாகேப் என்றிருந்தார். அந்த அப்பூ சாகேப்புக்கு விவாகஞ் செய்துகொண்ட பெண்களைத்தவிர்த்து, பலஜேவார் ஜாதியிலிருந்து எடுத்துக்கொள்ளப்பட்ட ஸ்திரீயினிடத்தில் நாநா சாகேப் என்றொரு புத்திரர் பிறந்தார். அவர் இன்னும் சுகமாக வசித்துவருகிறார். அந்த ஸ்திரீகளுக்குப் பிறந்த இரண்டு பெண்கள் காடே வம்சத்தில் கொடுக்கப்பட்டிருக்கிறார்கள்.

இவ்வாறு சரபோஜி ராஜா தன் தம்பியான துக்கோஜி ராஜா வுடன் ராஜ்யபாரம் நடத்தி வரும்போது, இவர்களுக்குள் குடும்ப மனஸ்தாபம் ஏற்பட்டது. உடனே துக்கோஜி ராஜா தன் மூத்த சகோதரரிடமிருந்து ராஜ்யத்தின் ஒரு பகுதியை யடைந்து, குடும்பத்தோடு மஹாதேவ பட்டணத்தில் இருந்து வந்தார். கோட்டையில் சரபோஜி ராஜா மட்டும் ராஜ்யத்தை நடத்திக் கொண்டு வந்தார். இந்த சமயத்தில், சரபோஜி ராஜாவின் பட் டத்து ஸ்திரீகளான மூன்று பேர்களில், இரண்டாவதான அபரூபா பாயிக்கு சில துஷ்ட ஸ்திரீகள் துர்ப்போதனை செய் தார்கள். இளைய சகோதரருக்கு சந்ததி விருத்தியடைந்திருக் கிறது. ராஜ்யத்தை நடத்துகிற மூத்த சகோதரருக்கு சந்ததி யில்லை யாதலால் ராஜ்யத்தின் பட்டம் இளையவருக்கேதான் சேரும் என்றார்கள். அந்தத் துர்ப்போதனை அபரூப பாயியின் மனதிற்பட்டு, அதையொட்டி பொய்யான கர்ப்பம் தரித்துப்

பிறகு புத்ரோத்ஸவமும் நடந்ததென்று சொன்னபோது, அரசரும் மற்றுமுள்ள சுற்றத்தார்களும் சந்தோஷமடைந்து, ராஜபுத்திரனுக்குச் செய்யவேண்டிய உத்ஸவங்களை வெகுவாய் நடத்தி வழக்கப்படி ஸவாயி ஷஹாஜி என்று பெயரும் சூட்டினார்கள். பிறகு சில நாட்களில் சரபோஜி, நடந்த தந்திரத்தை மஹாதேவ பட்டணத்திலிருந்த தன் தம்பி துக்கோஜி ராஜாவின் மூலமாய் அறிந்து, மிக்க ஆச்சரியமடைந்து அந்தப் புத்ரனை தகுந்தபடி பரிஹாரம் செய்துவிட்டார். இவ்வாறு நஷ்டமடைந்த புத்திரனைப்பற்றி எழுதவேண்டிய காரண மென்னவெனில், இதன் காரணம் பிறகு சொல்லப்படுகிறது. இந்தக் கொடுஞ்செயல் முழுவதும், மூன்று மனைவிகளுள் இரண்டாவது மனைவியான அபரூப பாயி சாஹேப் என்பவளால் ஒரு துஷ்ட ஸ்திரீயின் போதனையால் செய்யப்பட்டது. பிறகு சரபோஜி ராஜா கொஞ்ச காலம் ராஜ்யபாரம் செய்து சகம் 1649 கீலக வருஷத்தில் தெய்வகதி அடைந்தார். அவரோடு, அவருடைய மனைவிகளில் அபரூப பாயியைத் தவிர்த்து மற்ற இருவர்களான சுலக்ஷணாபாயி சாகேபும், ராஜஸ பாயி சாகேபும் உடன்கட்டை யேறினார்கள்.

உடனே அவர் தம்பியான துக்கோஜி ராஜா மஹாதேவ பட்டணத்திலிருந்து வந்து சிம்மாசனம் ஏறினார். இவர் ராஜ்யபாரம் நடத்தும் காலத்தில் இவரால் சேர்த்துக்கொள்ளப்பட்ட ஸ்திரீகளுக்குண்டான புத்திரர்கள் மூவரும் இவருடைய ஜீவதசையிலேயே தெய்வகதி அடைந்தார்கள். ஆனால், மேலே கூறப்பட்டபடி அம்மூவரில் ஒருவரான நானா சாகேப் என்பவருடைய சந்ததியில் உண்டான அப்பூ சாகேப் மாத்திரம் இருக்கிறார். இவர் காலத்தில் திருச்சினாப்பள்ளி ராஜ்யம் நாயுடு வகையராவைச் சேர்ந்த மீனாக்ஷி அம்மாள் என்பவரால் ஆளப்பட்டு வந்தது. அந்த அம்மாளுக்கு பாளையக்காரர் முதலியவர்களால் பல தீங்குகள் உண்டாயின. அப்போது துக்கோஜி ராஜா தன்னிடமிருந்த சேனையையும், சேனாதிபதியையு மனுப்பி எதிரிகளை வென்று மீனாக்ஷி அம்மாளுக்கு தொந்திரவு எதுவுமில்லாமல் செய்தார். பிறகு துக்கோஜி ராஜா நேர்மையுடன் அரசுசெலுத்தி சகம் 1657 நள வருஷத்தில் (1736) தெய்வகதி அடைந்தார்.

உடனே அவருடைய மூத்த பிள்ளையான ஐந்தாவது ஏகோஜி ராஜா என்று சொல்லப்பட்ட பாவா சாகேப் என்றவர் ஒரு வருஷம் அரசு புரிந்தார். அவர் அரசு செலுத்தும் நாளில் அவர் சமீபத்திலுள்ள ஒருவரிடமும் நம்பிக்கை வைப்பதில்லை. எவரொருவரிடமாவது அரிவாள், கத்தி முதலிய ஆயுதங்களிருந்தால் சந்தேகப்படுவார். தெருவில் போகிறவர், வருகிறவர்கள் கடவுளின் பெயரைச் சொன்னபோதிலும், உதட்டை அசைத்த போதிலும் ஒரு இடத்தில் இருவர் கூடிப் பேசிக்கொண்டிருந்த போதிலும், யாரிடமாவது ஜபமாலையைக் கண்டபோதிலும் அவர்கள் தன்னை வசப்படுத்தப் பார்க்கிறார்கள் என்றும், தன்னைக் கொல்ல மந்திரம் யந்திரப்பிரயோகம் செய்கிறார்களென்றும் நினைத்து அவர்களெல்லோரையும் தண்டித்து வந்தார். மற்றும் அரசனோடு சர்ச்சை செய்யும் பெரியோர்கள் எல்லோரையும் நம் குழந்தைகள் என்று எவர் சொல்லுகிறார்களோ அவர்களை நன்றாய் நடத்தி வந்தார். மற்றவர்களை தன்னிடம் அண்டவிடுவதில்லை.

இவ்விதம் இராஜ்யபாரத்தை நடத்திவரும்போது, ஆர்காடு பிராந்தியத்தின் தோஸ்தர்கானின் மாப்பிள்ளையான சந்தா சாஹேப் என்பவர் ஒரு பெரிய சேனையுடனும் பிரெஞ்சுக்காரர் காரர்களின் உதவியோடும் தஞ்சாவூரின்மேல் படையெடுத்து வந்தார். அப்போது பாவா சாஹேப் ஏதோ வியாதியால் அசக்தராக யிருந்தார். அப்படி யிருந்தபோதிலும் தன் கோட்டையையும், சேனையையும் நன்றாய் பந்தோபஸ்து செய்து தன் கோட்டையின் மதில் சுவரின்பேரில் நின்றுகொண்டு, கோட்டையின் மேலுள்ள பீரங்கிகளைப் பிரயோகம் செய்து தன் சேனையை எதிரியின் சேனையின்மேல் ஏவி தீவிரமாய் யுத்தம் செய்தார். அப்போது சந்தா சாகேப் கோட்டையைக் கைப்பற்ற முடியாமல் பணப் பேச்சுக்களைத் தீர்த்துக்கொண்டு திருச்சினப்பள்ளிக்குச் சென்றுவிட்டார். பிறகு பாவா சாஹேப் முன் இருந்த வியாதியால் பீடிக்கப்பட்டு சகம் 1658 பிங்கள வருஷம் (1736) தெய்வகதியடைந்தார்.

பிறகு அமைச்சர் பதவிக்கும் ராஜ்யபாரத்தை நிர்வஹிப்ப தற்கும் உறவினர்களுக்குள் தகுந்தவர் இல்லாததினால் அந்த பாவா சாஹேபின் மனைவியான சுஜான் பாய் சிம்மாசனமேறினாள். அப்போது சகம் 1658 பிங்கள வருஷத்தின் பின்பாதியும் காளயுக்தி வருஷமும் நடந்துகொண்டிருந்தது. சுஜான் பாயி ராஜ்யபாரம் நடத்தும்போது, உறவினர்களுக்குள் ஒருவரான கௌமாஜி காண்டகே என்பவர், காட்டுராஜா என்று பெயருள்ள ஒருவரை பட்டத்திற்குவர ஏற்பாடுசெய்தார். அக்காட்டு ராஜாவின் வரலாறு கீழ்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது. முன்பு சரபோஜி ராஜா ராஜ்யபாரம் செய்துகொண்டிருந்தபோது ஒரு துஷ்ட ஸ்திரீயின் துர்ப்போதனையினால், அரசரின் இரண்டாவது மனைவியான அபரூபபாயி சாஹேபாவுக்கு கர்ப்பம் ஏற்பட்டு புத்திரஸந்தானம் உண்டானதெனப் பொய் சொல்லி அந்த புத்திரனுக்கு சவாயி ஷஹாஜி எனப் பெயரிட்டு, வளர்த்து வரும்போது தந்திரம் வெளிப்பட்டு அப்புத்திரனைப் பரிஹாரம் செய்ததாகச் சொல்லப்பட்டது.

அதே சவாயி ஷாஹஜி ராஜா இப்பொழுது பிழைத்திருக் கிறானென்று ஒரு வதந்தி கிளப்பி, ரூபத்திலும், வயதிலும் அவனையே ஒத்திருந்த குப்பி என்னும் வேலைக்காரியின் மகனைத் தயார்செய்து, கௌமாஜி காண்டகே அவனை அழைத்துக் கொண்டு உடையார்பாளையம் காட்டுக்கு வந்து அங்கு பாளையக் காரர்களுக்கு அறிமுகப்படுத்தி அவர்களிடமிருந்து கொஞ்சம் திரவியமும், ஆட்களையும் சேகரித்துக்கொண்டார். பிறகு அங்கிருந்து தேவிபட்டணத்தையடைந்து அங்குள்ள ஆங்கிலேயர்களோடு பேச்சுவார்த்தை நடத்தி அவர்களிடமிருந்து உதவி சம்பாதித்துக்கொண்டு அங்கிருந்து நாகப்பட்டணம் முதலிய ஊர்களுக்குச் சென்று திரவியம் சேர்த்து படையைத் திரட்டி தஞ்சாவூரையடைந்தார். பிறகு தஞ்சாவூரிலுள்ள சேனைக்கும் கோட்டையிலுள்ளவர்களுக்கும் சந்தேகமூட்டி, ரகசியமாய் சிலபேர்களின் உதவியைக்கொண்டு சகம் 1660 காளயுக்தி வருஷத்தில் தஞ்சை கோட்டையில் பிரவேசித்து

சுஜான் பாயிவைப வீழ்த்தினன். பிறகு 'காட்டு ராஜா சிம்மாசன மேறினர். அந்தக் காட்டு ராஜா கொஞ்சகாலமே ராஜ்யபாரம் நடத்தினர். அவருடன் சம்பாஷணை செய்யும்போது கோட்டையி லுள்ளவர்களுக்கும், சேனையில் உள்ளவர்களுக்கும் ஏற்பட் டிருந்த சந்தேகம் நிச்சயமாகி, ராஜ்யத்தை அடைந்திருக்கும் அந்தக் காட்டு ராஜா குப்பி என்ற வேலைக்காரியின் மகனை சுபான்யாதான் என்று அறிந்து ராஜத் துரோகம் செய்து வேலைக் காரியின் மகனை சிம்ஹாசனத்தில் வைத்ததற்காக வருந்தினர்கள்.

பிறகு யோசித்து துக்கோஜி ராஜாவால் சேர்த்துக்கொள்ளப் பட்ட ஸ்திரீகளுள், பிரதாபசிம்ம ராஜாவின் தாயார்தான் ராஜாவின் சமமான ஜாதியைச்சேர்ந்தவராதலால், அக்குமாரன் தான் ராஜ்யத்துக்குரியவரென்று எல்லோரும் நிச்சயித்து சகம் 1660 சித்தார்த்தி வருஷம் பிரதாபசிம்ம ராஜாவுக்கு பட்டம் சூட்டினர்கள். அதே வருஷத்தில் பிரதாபசிம்ம ராஜாவின் பட்ட ஸ்திரீகளுள் இரண்டாவதான துக்கோஜியின் பெண்ணை துளெரபதி பாய் சாஹேப் துளஜா ராஜனென்று பெயருள்ள ஆண் மகவை ஈன்ருள்.

போன்ஸ்லே வம்சத்து அரசர்கள் ஆண்டுவந்த தஞ்சாவூர் ராஜ்யத்தில் குப்பி என்ற வேலைக்காரியின் மகனை சுபான்யா என்பவனை தந்திரத்தினல் சிம்மாசனமேற்றுவதற்கு உடந்தையாக இருந்த சையிந்து (அல்லது சைய்யிது என்ற முகம்மதிய கில்லேதார்), அதன் உண்மை வெளியாகி உறவினர்களுக்கும் பொதுஜனங்களுக்கும் தெரிந்ததும், தான் பரம்பரையாக ராஜ வம்சத்திற்கு சேவைசெய்திருந்தும் இந்த உலகப் பழி தனக்கு வந்ததே என்ற வெட்கத்தினலும், ஏகோஜி ராஜாவின் சேர்த்துக் கொள்ளப்பட்ட மனைவியின் குமாரரான சந்திரபான்ஜி போன்ஸ் லேயின் மகனும் சௌரியத்திலும் செல்வத்திலும் மிகுந்தவருமான நாயக்ஜி போன்ஸ்லே என்பவருக்கு பயந்தும், இந்த ராஜ வம்சத் தைச் சேர்ந்த பிரதாபசிம்ம ராஜா ரூபத்திலும், குணத்திலும், செயலிலும், புத்தியிலும், மற்ற எல்லாக் குணங்களிலும் தகுதி

யுள்ளவராக இருக்கிறார் என்ற காரணத்தினால் அவருக்கு முடிசூட்ட ஏற்பாடு செய்தார்.

ஆனால் பிரதாபசிம்ம ராஜா பட்டத்திற்கு வந்த பிறகுகூட அந்த சைந்தன் க்ருத்திரிம மார்க்கத்திலேயே ஈடுபட்டு, சில கெட்ட காரியங்களையும் செய்தான். அவைகள் கீழே விவரிக்கப்பட்டிருக்கின்றன. ஏகோஜி ராஜா இத்தஞ்சை ராஜ்யத்திற்கு அதிபதியானபொழுதும், அதற்கு முன்னும் அநேக தர்மங்கள் ஸ்தாபிக்கப்பட்டும், தஞ்சை ராஜ்யத்தில் அநேக கோயில்களும், காவேரி தீரத்தில் பிராம்மணர்கள் வசிப்பதற்கு யோக்யமான அநேக அக்ரஹாரங்களும், கோயில்களும் கட்டுவிக்கப்பட்டும் பிராம்மணர்களுக்கு சர்வமான்யம் கொடுக்கப்பட்டும், யக்ஞங்கள் செய்விக்கப்பட்டும், அன்ன சத்திரங்கள் ஏற்படுத்தப்பட்டும், இதுமுதலான அநேக தர்மங்கள் ஏகோஜி ராஜா காலம் முதல் பரம்பரையாய் செய்யப்பட்டு வந்தன. அதிலும் பிரதாபசிம்ம மஹாராஜா பட்டத்திற்கு வந்ததும் இன்னும் அதிகமான தர்மங்களை நடத்தி வந்தார். அந்த எல்லா தர்மங்களுக்கும் சையிந்து இடையூறுகள் செய்து வந்தான். இதைத் தவிர, தான் ஜாதியில் முகம்மதியனாயிருந்தும், கோயிலிலுள்ள கர்நாடக ஜாதி வேசி ஸ்திரீகளில் ஒருவளான மோஹனா என்பவளைக் கெடுத்துத் தன் வீட்டிலேயே வைத்துக்கொண்டான். இம்மாதிரி கெட்ட நடத்தைகள் ஒவ்வொன்றும், பிரதாபசிம்ம மகாராஜாவுக்குத் தெரிந்தபோதிலும், தாம் புதிதாக ராஜ்யத்திற்கு வந்திருந்ததினால், அந்த சையிந்தை தண்டிக்காமலிருந்ததுமன்னியில் அவன் தன்னிஷ்டப்படி அதிகாரத்தை செலுத்தவும் விட்டிருந்தார். ஸையிந்தும் தன்னிடத்தில் சேனையின் அதிகாரமும், கில்லேதாரின் அதிகாரமும் ராஜாவின் காரியதரிசி என்ற அதிகாரமும் இருந்ததினால், “வேலைக்காரியின் மகனான சுபான்யாவிற்கு ராஜ்யத்தைக் கொடுத்தோம். பிறகு அவனைக் கைது செய்து, பிரதாபசிம்ம ராஜாவிற்கு ராஜ்யம் வரும்படி செய்தோம், முன்பு பாவா சாஹேப் ராஜாவினால் அமர்த்தப்பட்ட சர்க்கில் சித்தோஜி முதலானவர்களைக் காட்டு ராஜாவைக்கொண்டு சித்திரவதை செய்

வித்தோம். இன்னும் நினைத்தவைகளை செய்து முடிக்க வல்லோம்'' என்ற இறுமாப்புக் கொண்டிருந்தான். இவைகளெல்லாமல் தன் மகளை சந்தா சாகேபின் மகனுக்குக் கொடுத்து, அச்சந்தா சாகேபின் மகனை ராஜ்யத்தில் வைத்துத் தான் எல்லாவித ஐசுவரியங்களையும் அனுபவிக்கவேண்டுமென்று யோசனைசெய்து அதற்குச் சகாயமாக தன் சகோதரனான காசீம் என்பவன் உதவியை நாடினான்.

ஆனால் காசிம் என்பவன் போசல வம்சத்து புண்யப்ரபாவத்தினாலும், பிரதாப சிம்ம மகாராஜாவின் அதிர்ஷ்டத்தாலும், தன் சகோதரனான சையிந்தின்யஜமானத் துரோகம் ராஜத்துரோஹம், நம்பிக்கைமோசம், முதலான நடத்தைகளை சகியாமல் எல்லாவற்றையும் பிரதாபசிம்ம மகாராஜாவிடம் தெரிவித்தான். அப்போது பிரதாபசிம்ம மகாராஜாவும் திடீரென்று ஒன்றும் செய்யாமல், தீர்க்கமாயாலோசித்து காசீம் சொல்லிய வார்த்தைகளில் உண்மை ஏதாவதிருக்கிறதா என்று விசாரித்தார். அதற்கு காசீமும், சில நாட்களில் எல்லா சமாசாரங்களும் வெளியாகுமென்று பதிலளித்துத் தன்னிருப்பிடம் சென்றான். உடனே நாலைந்து நாட்கள் சென்றபிறகு சையிந்த செய்யவேண்டிய ஏற்பாடுகளைச் செய்துவிட்டு மகாராஜாவிடம் போய் தன் மகளை சந்தா சாயேபுவின் மகனுக்கு கொடுப்பதாகவும், அதனால் சமஸ்தானத்துக்கு அதிக பலமேற்படுமென்றும் சொல்லி அனுமதி வேண்டினான். அப்போது மகாராஜாவும் தன் ராஜ்யத்துக்கு பலம் ஏற்படுவதற்காகத் தன் மகளை நவாபிற்கு கொடுக்கிறானென்று மெச்சி, கல்யாணச் செலவுகளுக்கு வேண்டிய பொருள்களைக் கொடுத்துக் கல்யாணம் மட்டிலும் கோட்டையில் நடத்தாமல், மத்யார்ஜுனத்தில் நடத்துமாறு சைந்துக்குச் சொன்னார். சையிந்தும் அதற்கு ஒப்புக்கொண்டு அவ்வாறே மத்யார்ஜுனம் சென்று வெகு சிறப்புடன் கல்யாணத்தை முடித்துக்கொண்டு தஞ்சைக்கு வந்துசேர்ந்தான். வந்ததும் சையிந்தும் தன் கெட்ட யோசனையை நடத்துவதற்கு முடிவுசெய்து செய்தியனுப்ப யத்தனித்தான். சந்தா சாஹேப் முதலானவர்களை இராத்திரியே

கிளம்பி விடியற்காலையில் தஞ்சைக் கோட்டை வந்துசேர்ந்து கோட்டைவாயிற் கதவுகள் திறக்கும்போது சைன்யத்துடன் கோட்டையிற் பிரவேசித்து, ஆண்மனை நோக்கி வந்து உள்ளே புகுந்து ராஜ்யத்தை ஸ்வாதீனம் செய்துகொள்ளும்படிக்கும், சேனையும் கோட்டையும் தன்வசமிருப்பதால் ஒருவரும் எதிர்க்க மாட்டார்களென்று கடிதம் எழுதி தனக்கு அந்தரங்கமான மனிதனிடம் ரகசியமாய்க் கொடுத்தனுப்பினான். இந்த ரகசியமான சமாசாரம் காசீமுக்குத்தெரிந்திருந்தபடியால் அவன் ராஜாவுக்குத் தெரிவித்தான். அதுவுமல்லாமல் மகாராஜாவின் அந்தரங்கமான மனிதனைக் கூட்டிக்கொண்டு அவனிடம் அந்த அந்தரங்கமான மனிதனையும் அவன் கொண்டுபோகும் கடிதத்தையும் மகாராஜாவிடம் கொண்டுபோய்ச் சேர்க்கும்படி ஒப்புவித்தான்.

இவ்விதமாய் மிக்கப்பிரபல சாக்ஷி மகாராஜாவுக்குக் கிடைத்த பிறகு மகாராஜா ஆச்சரியமும் கோபமும் கொண்டு தனக்கு ஆப்த பரிவாரங்களான சில பிரபுக்களோடு கலந்து யோசித்தார். அவர்களில் முக்கியமானவர்கள் மகாராஜாவின் சர்தார் மல்ஹார்ஜி காடிகேராவ், ராஜாவின் மைத்துனரான அனபா சேட்கே, மகாராஜாவின் முக்கிய காரியஸ்தரான மானூஜி ராவ், மற்றும் மகாராஜாவுக்கு வேண்டிய சர்தார்கள், ஜகதாப் இவர்களுடன் கலந்து சையிந்தைக் கொல்லுவதென்று நிச்சயம் செய்தார்.

ஒரு நாள் மகாராஜா தன்னுடைய சிநேகிதர்களையும் பிரபுக்களெல்லோரையும் பரிவாரங்களுடன் வரவழைத்து ஒரு குறிப்பிட்ட இடத்தில் இருக்கும்படி செய்து தான் மற்றொரு இடத்தில் தனிமையிலிருந்துகொண்டு, மொகலாய சமஸ்தானத்திலிருந்து சில கடிதங்கள் வந்திருப்பதாகவும் அவைகளைப் பார்க்கவேண்டுமென்றும் சையிந்துக்குச் சொல்லியனுப்பினார். அப்போது சையிந்து கர்வத்தினால் மதோன்மத்தசையில் இருந்ததால் மகாராஜாவின் யோசனை முதலியவைகளையொன்று

மறியாமல் மகாராஜாவிடமிருந்து அநேக தடவைகள் அழைப்புகள் வந்த பிறகு அவரிடம் சென்றான். அவன் வந்த பிறகு மகாராஜா அவனுடன் சில உபசார வார்த்தைகள் பேசிவிட்டு, ஜலமோசனத்துக்காகப் போவது போல் வேறோரிடம் சென்றார். உடனே மகாராஜாவால் யோசனை செய்யப்பட்டிருந்ததை யனுசரித்து சமீபத்திலிருந்த பிரபுக்கள் சில வேலையாட்களை ஏவி சைந்தை அசையாமல் கைகால்களை இறுகக் கட்டி அவனை மற்றோரிடத்திற்குக் கொண்டுபோய்ப் பரலோகப்ராப்தியடையும்படி செய்தார்கள். பிறகு அவன் வீட்டையும் நாசம் செய்ய ஏவி, ஓடிப்போனவர்களைத் தவிர மற்றவர்களைப் பிடித்துக்கொண்டு வந்து, சத்ருவின் உபத்திரவமில்லாமல் செய்தார்கள்.

பிறகு மகாராஜா அனபா. சேட்கே என்பவருக்கு சர்க்கில் உத்யோகத்தையும் (அதாவது மந்திரிப் பதவியையும்) மல்லார் காடேராவுக்கு கில்லேதார் பதவியையும் (அதாவது கோட்டையைக் காப்பாற்றும் அதிகாரத்தையும்) டபீர் நாதோ பந்த் என்பவருக்குக் காரியதரிசி வேலையையும் கொடுத்து ராஜ்யபாரத்தை செவ்வனே நடத்தி வந்தார்.

பிறகு மகாராஜா ஸ்ரீராமேச்வர யாத்திரை நிமித்தமாய்த் தன் பரிவாரங்களுடன் புறப்பட்டார். சென்றவிடத்தில் அநேக தானதருமங்களைச் செய்துவிட்டுத் திரும்பி வரும்போது ராமனாதபுரத்து ஜமேதாரான மறவர், தன் ராஜ்ய பரம்பரை இந்த மகாராஜாவின் முன்னோர்களால் ஸ்தாபிக்கப்பட்டதென் றறிந்து, தன்னிருப்பிடத்திலிருந்து கொஞ்ச தூரம் வந்து, தன் கோட்டையில் ஒரு நாள் தங்கி யிருந்துவிட்டுப் போக வேண்டுமென மகாராஜாவை வேண்டினார். மகாராஜாவும் அதற்குச் சம்மதித்து, அப்படியே சென்றார். அப்போது வாயிற் காப்போர்கள், பிந்தி வந்த சிலரை இன்னாரென்று தெரியாமல் தடுத்தார்கள். அந்த சமாசாரம் மகாராஜாவிற்குத் தெரிந்து அவர் உடனே திரும்பினார். இதையறிந்த ராமனாதபுரத்தரசன் பயபக்தியுடன் இரண்டு நாழிகை மகாராஜாவின் பல்லக்கைப் பின்தொடர்ந்து

அவரைப் பலவிதமாய் வேண்டிக்கொண்டதனால் மகாராஜாவும் மிகுந்த தயையுள்ளவராதலால் மனமிரங்கி மறுபடியும் ராமநாத புரம் சென்று அங்கு ஒரு நாள் தங்கி அவரிடம் மரியாதைகளைப் பெற்றுத் திரும்ப தம் ராஜ்யத்தை யடைந்தார். ராமநாதபுரத் தரசனும் இப்பால் தன் பாட்டனரின் தாக்ஷிண்யத்திற்காகத் தான் இப்போது நவாபைச் சார்ந்தவரா யிருந்தபோதிலும், முன்னிருந்த ஸ்திதியை மறக்காமல் மகாராஜாவின் சேவையைச் செய்தார்.

பாவா சாயேபுவின் ஆட்சியின் முடிவில் சந்தா சாஹேப் என்பவர் திருச்சிக் கோட்டையின்மீது படையெடுத்தாரென்று முன்பு கூறப்பட்டிருக்கிறது. அதே சந்தா சாஹேப் திருச்சிக் கோட்டையைக் கைப்பற்றி, பிரதாபசிம்ம மகாராஜா ஆட்சி புரியும் காலத்தில், தஞ்சையை நோக்கி வந்தார். பிரதாபசிம்ம மகா ராஜாவும் அச்சந்தா சாஹேபுடன் இரண்டு மாத காலம் நன்றாய் யுத்தம் செய்தார். சந்தா சாஹேபும் இவருடன் எத்தனை நாள் யுத்தம் செய்வதென்று நினைத்து, தனக்கும் திருச்சிறைப்பள்ளியில் பாளையக்காரர்கள் வராமல் பந்தோபஸ்து செய்யவேண்டியிருந்தபடியால், ஆற்காட்டிலிருந்து தன்னுடன்கூட வந்த சப்தர் அல்லிகானிடம் பட்டுக்கோட்டையைத் தவிர பாக்கியுள்ள தஞ்சை ராஜ்யத்தில் (நவாபுக்குள்ள பாத்தியதையை) ஒப்பு வித்து விட்டுத் தான் திருச்சிறைப்பள்ளியை நோக்கிச் சென்றார்.

பிறகு சப்தர் அல்லிகானும், ராஜ்யம் தனக்கு ஸ்வாதீனமாகு மென்றும், கோட்டையிலிருப்பவர்கள் (வெளி வராமல்) எப்படி இராஜ்ஜியத்தை யாளக்கூடுமென்றும் யோசித்து, அகிழைக் காப்பாற்றுபவனைத் தன் வசப்படுத்திக்கொண்டு, திருவையாற்றுக்கு மேற்கு பாகத்தை சப்தர் அல்லியாறு என்று பெயரிட்டு அவ்விதமே நாணயத்தை வழங்கி இரண்டு வருஷ காலம் அதிகாரத்தை நடத்தி வந்தார்.

அப்போது பிரதாபசிம்ம மகாராஜாவுக்குப் பணக்கஷ்டம் ஏற்பட்டு தன் சேனைகளுக்குக் கொடுக்கவேண்டிய சம்பளத்திற்

குப் பணமில்லாமற் போனபோது, சேனைகளும் சண்டை செய்ய மறுத்ததினால் சாதாராவிலுள்ள சாஹு ராஜாவுக்குக் கடிதமெழுதியனுப்பினார். அப்போது சாஹு ராஜா வீரு பாயிக்கு ஸ்வீகாரம் கொடுக்கப்பட்டவரும் நாகப்பூரில் வசிப்பவருமான ரகோஜி போன்ஸலே என்பவரையும், பத்தேசிங் என்பவரையும் 60,000 குதிரைப் படையையும் சேர்த்து அனுப்பினார். அவர்கள் வெகு வேகமாக வந்திறங்கின சமாசாரத்தைக் கேள்வியுற்ற சப்தர் அல்லிகான் ராஜ்யத்தைவிட்டுத் திருச்சினாப்பள்ளிக்கு ஓடிவிட்டார். பிறகு அரசருக்கு ராஜ்யம் வசமாயிற்று.

பிறகு ரகோஜி போன்ஸலேயும், பத்தேசிங்கும் திருச்சினாப்பள்ளிக்குச் சென்று, மதுரையிலிருந்து எதிர்நோக்கி வந்துகொண்டிருந்த சந்தா சாஹேபின் சகோதரனையும், சப்தரல்லிகானையும் கொன்று, சந்தா சாஹேபைப் பிடித்துக் கைதுசெய்து திருச்சினாப்பள்ளிக் கோட்டையைக் கைப்பற்றினார்கள். அப்போது பிரதாபசிம்ம மஹாராஜா அவர்களிடம் தன் மந்திரியான அன்னப்பா சேட்கேயை யனுப்பினார். அந்த மந்திரி திருச்சியையடைந்து ரகோஜி போன்ஸ்லேயையும், பத்தேசிங் என்பவரையும் பேட்டிகண்டவுடன் அவ்விருவரும் பிரதாபசிம்ம மகாராஜாவைத் திருச்சிக் கோட்டையை ஒப்புக்கொள்ளும்படி சொல்லியனுப்பினார்கள். இதைக் கேட்ட அரசர் தாம் அக்கோட்டையை ஒப்புக்கொள்ள முடியாது என்று சொல்லிவிட்டார். பின்பு ரகோஜி போன்ஸ்லேயும், பத்தேசிங்கும் திருச்சி ராஜ்யத்தையும் கோட்டையையும் ராஜி கோர்படேயின் புதல்வரான முராஜி கோர்படேயிடம் ஒப்புவித்துவிட்டு, சந்தா சாஹேபைச் சிறைப்பிடித்துக்கொண்டு, சாதாராவிலுள்ள ஷாஹு ராஜாவிடம் சென்றனர். இங்கு பிரதாபசிம்ம மகாராஜா தஞ்சாவூர் ராஜ்யத்தை ஆண்டு வந்தார்.

பிறகு அன்னப்பா சேட்கே சர்க்கில் வேலையிலிருந்து ராஜ்ய காரியங்களை ஒருவாறு நடத்தியபோதிலும் சில அதிக்கிரமங்களையும் செய்தார். அதன் விவரம் சிறிது கூறப்படுகிறது. மகாராஜாவுக்கும் அவர் குடும்பத்தினர்க்கும் மட்டும் உரித்தான

ஆடை முதலிய அலங்காரங்களைத் தானும் தன் ஸ்திரீகள் முதலிய வர்களும் அணிந்து வந்தார்கள். இதைத் தவிர, மகாராஜா சமீ பத்தில் வரும்போதும், எதிரில் நேரில் பேசும்போதும் மரியாதை யின் வரம்பு மீறி நடந்து வந்தார். அதனால் மகாராஜா மன வருத்தமுற்று அன்னப்பா சேட்கேயை சர்க்கீல் பதவியிலிருந்து நீக்கி மாஜி ராவுக்கு சர்க்கீல் பதவியும் சேனைத்தலைவர் பதவி யையும் கொடுத்து, அன்னப்பா சேட்கேயைக் கொஞ்சகாலம் வீட்டோடு இருக்குமாறு சொன்னார். இதைப் பொறுக்காமல் அன்னப்பா சேட்கே ஸர்க்கீல் பதவியும், சேனைத்தலைவர் பதவி யும் வெகுகாலம் தன் வசமே இருந்ததால் சைனியம் முழுவதும் இப்போதும் தனக்குக் கட்டுப்பட்டு இருக்குமென்ற தவறான எண்ணத்தினால் தன் சகோதரர் முதலிய சுற்றத்தார்களுடன் (பழைய அந்தஸ்துக்குரிய) விலையுயர்ந்த பட்டாடைகளை யுடுத் திக்கொண்டு பகிரங்கமாக இருப்பதென்று முடிவுசெய்து கொண்டு அவ்விதமே இருந்தார்.

அப்போது மகாராஜா, முன்பே இந்த அன்னப்பாவின் கெட்ட நடத்தையை அறிந்திருந்ததினால், அவரிடம் சந்தேகங் கொண்டு அவர் ஆயுதம் முதலியவைகளுடன் எதற்காக வெளியே வந்திருக்கவேண்டுமென விசாரித்தனுப்பியபோது, அன்னப்பா இதைத் தாளாமல், எந்த மஹாராஜாவின் சோற்றையுண்டு பதவி யையும் கௌரவத்தையு மடைந்தாரோ அவரையே எதிர்த்து ஆயுதந் தரித்து இரண்டொருவரைக் காயமும் செய்தவுடன், மஹாராஜா நடந்த விருத்தாந்தத்தை யறிந்து, அவர் அடங்கா மல் இருந்ததால் தன் பிரஜைகளை அவருக்கு விரோதமாகக் கலகம் செய்யும்படி ஏவினார். அவரவர்களுக்குள் நடந்த கை கலப்பில், அன்னப்பா, அவர் சகோதரர் முதலான ஆறு ஏழு பேர்கள் இறந்தனர். பிறகு மகாராஜா, அன்னப்பா சர்க்காருக் குச் செய்த சேவைகளை நினைத்து அன்னப்பா மரணமடைந்த தற்காகப் பச்சாத்தாபமடைந்தார்.

பிறகு திருச்சினப்பள்ளிக் கோட்டையிலுள்ள முரார்ஜி கோர்படே என்பவர் தன் முகம்மதிய மந்திரியான இன்னிஸ்கான்

என்பவரின் போதனையின் பேரில் தஞ்சாவூர் ராஜ்யம் சிறியதா யிருந்தபோதிலும் செழிப்புள்ள ராஜ்யமாக இருக்கிறபடியால் அதைக் கைப்பற்ற வேண்டுமென்று நினைத்தார். ஆனால் அங்குள்ள ராஜா தனக்கு யஜமான் ஸ்தானத்திலிருப்பதாலும், சிறுபாகமாவது ஸ்வாதீனம் செய்துகொள்ள வேண்டுமென்றாலும் சேனையின் பகிரங்க ஒத்துழைப்புக் கிடைக்காததலால், சில்லரையான இடையூறுகள் செய்து கொண்டிருக்க வேண்டுமென்று யோசனை செய்து, இன்னிஸ்கானுடன் 2000 காலாட் படைகளைச் சேர்த்தனுப்பினார். இன்னிஸ்கான் தஞ்சைக் கோட்டைக்கு வந்து, நேரில் சண்டை செய்ய வராமல் சிற்சில இடங்களில் கொள்ளையடித்தும், சிற்சில ஜனங்களை அடித்துத் துன்புறுத்தியும், சில்லரை உபத்திரவங்களை ஆரம்பித்தார். அப்போது பிரதாபசிம்ம மகாராஜா தன் சேனாதிபதியான மானாஜி ராயருக்கு உத்திரவு கொடுத்து அவருடன் ஒரு சிறு சைனியத்தையும் கொடுத்தனுப்பினார். அவரும் இன்னிஸ்கானைச் சிலநாள் பின் தொடர்ந்து சென்றார். கடைசியில் ஒரு நதிக்கரையில் அவன் அகப்பட்டுக்கொண்டான். அவனுடன் சண்டை செய்து அவனுடைய 300 குதிரைப் படைகளை நாசமாக்கி, 700 காலாட்களையும், 500 குதிரைகளையும் கீழே வீழ்த்தினார். அந்தச் சண்டையில் சர்தார் இன்னிஸ்கான் ஓடி ஒளிந்துவிட்டான். அதோடு தஞ்சைக்கு முரார் ராவின் உபத்திரவம் முடிவடைந்தது.

பிறகு, முன் சந்தா சாஹேப் வடதேசத்திலிருந்து இப்பிராந்தியத்திற்கு வந்து திருச்சினாப்பள்ளி ராஜ்யத்தைப் பிடித்துத் தஞ்சாவூர் அரசரோடு யுத்தம் செய்து கடைசியில் ரகோஜி போன்ஸலே, பத்தேசிங், இவ்விருவர்களுடைய கையில் அகப்பட்டுப் புனா பிராந்தியத்திற்குக் கொண்டுபோகப்பட்டு ஷாஹூ ராஜாவினால் கோட்டையில் வைக்கப்பட்டபோது அவரோடுகூட இருந்த முகம்மது அரபு என்ற பெயருடைய ஒரு பெரிய பிரபு, இரண்டு மூன்று ஆயிரம் காலாட் படைகள், ஐந்து யானை, சில துப்பாக்கி யாட்கள் கூடிய சேனையுடன், தன் சொந்த முறைமை

யில் வெளிக்கிளம்பி புதுச்சேரியில் பிரஞ்சுக்காரர்களின் சிறிது உதவியைக்கொண்டு நாட்டைக் கொள்ளையடிப்பதும், இராக் காலத்தில் உடையார்பாளையம் காட்டில் ஒளிந்துகொண்டிருப்ப தும், இவ்விதமாகப் பலதடவை செய்து வந்தார். இவ்விதம் தஞ்சாவூர், திருச்சி இராஜ்யங்களின் பலத்தை அலக்ஷியம் செய்து வந்த இவருக்கு எதிராக பிரதாபசிம்ம மகாராஜா தன் கில்லே தாரான மல்லார்ஜி காடே என்பவரையும் மானுஜிராவ் ஜகதாப் என்பவரையும் ஒரு சேனையுடன் அனுப்பினார். அவர்கள் ஒரு மாதம் வரையில் அந்த அராபியரைப் பின்தொடர்ந்து கடைசி யில் திருக்காட்டுப்பள்ளிக் கோட்டைக்குச் சமீபமாக அவரைப் பிடித்து, அவருடைய யானை, குதிரைகளைக் கைப்பற்றிக்கொண்டு அவரிடத்திலுள்ள "ஜுலுப்கவர்கான்" என்ற வீர விருதை யும் மற்ற விருதுகளையும் பறித்துக்கொண்டு அவரையும், அவ ரோடு இருந்தவர்களையும் கொன்றுவிட்டார்கள். பிரதாபசிம்ம ராஜா இதைக் கேட்டுச் சந்தோஷமடைந்து அந்த விருதுகளெல் லாவற்றையும் மல்லார்ஜி காடே ராயருக்கு ஒரு பகுதியும், மானுஜி ராயருக்கு மற்றொரு பகுதியுமாகக் கொடுத்தார்.

இந்த சமயம், ஆங்கிலேயர் *தேவிக்கோட்டையிலுள்ள கோட்டையைக் கைப்பற்றுவதற்காகத் தங்கள் சேனையின் பகுதி யொன்றை அனுப்பி, தேவிக்கோட்டையைக் கைப்பற்றினார்கள். மகாராஜாவுக்கும் ஆங்கிலேயருக்கும் விரோதமில்லாமலிருக்கும் போது, அவர்கள் வந்ததற்குக் காரணமென்னவெனில், தேவிக் கோட்டையிலுள்ள ஆங்கிலேயரின் பெரிய கப்பல் ஒன்று மூழ்கி விட்டது. அதிலுள்ள சாமான்களையும், இரண்டொரு நாய்களை யும் மகாராஜா வைத்துக்கொண்டதைக் காரணமாகக்கொண்டு, ஆங்கிலேயர்கள் அத்துறைமுகம் தங்களுக்கு வேண்டியிருந்தபடி யால் அதை ஆக்கிரமித்தார்கள். அப்போது மகாராஜா, சேனைத் தலைவரான நாகாஜி ராயரிடம் சேனையை யனுப்பினார். யுத்தம் செய்து அக்கோட்டை பிடிக்கப்பட்டது. அப்போது தேவிக்

*தேவிக்கோட்டை— இது கொள்ளிட நதியின் முகத்துவாரத்திற் கருகேயுள்ளது.

கோட்டையில் மகாராஜாவின் உத்தரவின்பேரில் ஜப்பர் சாயேப் என்பவனைக் கில்லேதாராக நியமித்துவிட்டு நாநாஜி ராயர் தஞ்சையை யடைந்தார். மறுபடியும் இரண்டாந் தடவையாக ஆங்கிலேயரின் சேனை தேவிக்கோட்டையின்மேல் படை யெடுத்தது. அப்போது மகாராஜா சில சர்தார்களுடன் சேனையை யனுப்பினர். அந்த யுத்தத்தில் ஆங்கிலேய சேனையைச் சேர்ந்த காலாட்படை கொள்ளிடக் கரையில் இருந்தது. கொள்ளிடத்துக் கரை அதிக உயரமாக விருந்தது. அதனால் தஞ்சாவூர் சேனையைச்சேர்ந்த குதிரைப் படை, நினைத்த இடத்தில் இறங்குவதற்கு வசதி இல்லாததால் கொஞ்ச தூரத்திற்கப்பால் ஒரே வழியாக இறங்கவேண்டி யிருந்தது. ஆற்றில் எல்லா சேனைகளும் இறங்கி வரும்போது ஆங்கிலேயரின் சைன்யம் அவைகளைத் தாக்கியது. அப்போது ஆற்றில் மணல் அதிகமிருந்தபடியால், குதிரைப் படைகள் குதிரைகளைச் செலுத்திக்கொண்டு சண்டை செய்ய முடியாமற் போயிற்று. சில குதிரைப் படைகள் நாசமடைந்தன. அப்போது வீரப்பா என்னும் சர்தார் ஒருவர் யுத்தகளத்திற்கு வந்தார். பிறகு ஆங்கிலேயர் மகாராஜாவுடன் பேச்சு வார்த்தை நடத்தி, ஒரு உடன்படிக்கை எழுதிக் கொடுத்தார்கள். அதன்படி, தேவிக்கோட்டை ஆங்கிலேயருக்குக் கொடுக்கப்பட்டது. அது கி. பி. 1749-ம் வருஷத்தில் நடந்தது.

பிறகு ஹைதராபாத்திலுள்ள நிஜாம் ஷாஜதிகான் என்ற மூத்த ராஜகுமாரர் தக்ஷிணப் பிராந்தியத்தைப் பற்றிய செய்தியைக் கீழ்வருமாறு கேள்வியுற்றார்:—"சந்தா சாஹேப், தோஸ்த் அலிகானின் மகனான பதர் அலிகான் முதலியவர்களை யழைத்துக்கொண்டு, பிரஞ்சுக்காரர்களோடு சிநேகஞ் செய்துகொண்டு அவர்களுடைய உதவியைக் கொண்டு திருச்சினப்பள்ளி ராஜ்யத்தைப் பிடித்தார்கள். அப்போது ஷாஹு ராஜாவிடமிருந்த ரகோஜி போன்ஸலே, பத்தேசிங் என்னும் மராட்டியர்கள் தஞ்சாவூர் ராஜாவின் சகாயத்துக்காகச் சென்று திருச்சினப்பள்ளி ராஜ்யத்தைப் பிடித்துச் சந்தா சாஹேபைக் கொண்டு வந்து கோட்டைக்குள் அடைத்துவிட்டார்கள்." இந்த சமா

சாரத்தைக் கேட்டு பாதுஷா திருச்சினுப்பள்ளியின்மேல் தன் கொடியை நாட்டி, அக்கொடியைத் தான் ஜீவித்திருக்கும் வரையில் கீழே இறக்குவது உசிதமில்லையென்று ஷாஹூ மகாராஜாவுக்கு சிநேக பாவத்தில் கடிதம் எழுதிவிட்டு, அவருடைய அனுமதியின்பேரில் 80,000 குதிரைப் படைகளுடன் திருச்சினுப்பள்ளியை யடைந்தார். திருச்சினுப்பள்ளிக் கோட்டையிலுள்ள முராரிஜி ராயருடன் ஆறுமாத காலம் போராடி முராரிஜி கோர்படே என்பவரைத் தந்திரமாக வெளிக் கொண்டுவந்து திருச்சினுப்பள்ளிக் கோட்டையையும், ஆற்காட்டுப் பிரதேசத்தையும், கூடவந்திருந்த அனவர்திகானுடைய ஸ்வாதீனத்தில் வைத்துவிட்டுத் தான் ஹைதராபாத்துக்குச் சென்றார்.

ஆற்காட்டுப் பிராந்தியத்திற்கும், திருச்சினுப்பள்ளி ராஜ்யத்திற்கும் அதிகாரி அன்வர்திகான் ஆனதினுல், அந்த அன்வர்திகானின் மகனுன மாபோஸ்கான் என்பவர், ஆற்காட்டுப் பிராந்தியத்திற்கு உள்பட்டிருக்கும் தஞ்சாவூரிலிருந்தும் பேஷ்கஷ் என்னும் கப்பம் வரவேண்டுமென்று அதிகார முறையில் சொல்லியனுப்பினுர். அப்படிக் கேட்கப்பட்ட கப்பத் தொகையில் ஒரு பாகத்தை விட்டுக்கொடுப்பது உசிதமென்று தஞ்சை பிரதாபசிம்ம மகாராஜா சொல்லி யனுப்பினுர். அதைப்பற்றி யோசிக்காமல் மாபூஸ்கான் தன் சேனையுடன் யுத்தத்திற்கு வந்தார். அப்போது மகாராஜாவும் தம் சேனையை அனுப்பினுர். இருவருக்கும் தஞ்சாவூருக்கு வடக்கே இரண்டு மைல் தூரத்தில் யுத்தம் நடந்தது. மாபூஸ்கான் தன் சேனையைக்கொண்டு எதிரிகளைச் சமாளிக்க முடியாமல் போகவே, அவர் சேனைகள் சின்னுபின்னமாக்கப்பட்டு, அவரும் தோற்கடிக்கப்பட்டு ஓடிப்போய் விட்டார்.

பிறகு மாபூஸ்கான் தான் தோல்வியடைந்ததினுல் வருத்தமுற்றுத் தன் தகப்பனுரான அனவர்த்திகானிடம் தெரிவித்தார். அதை யறிந்து அனவர்த்திகான் யோசனை செய்ததாவது:— "தஞ்சாவூர் மகாராஜா பதில் சரியாகத்தான் சொல்லி யனுப்பியிருக்கிறுர். அதை யறியாமல் மாபூஸ்கான் அவசரப்பட்டுத்

தோல்வியடைந்தார். ஆனாலும் பாதுஷாவின் சேனை பின்வாங்கியது என்று இருக்கக்கூடாது'' என்று பொறாமை யடைந்து, அனவர்த்திகான் பெரிய சேனையையும், குதிரைப் படை, பீரங்கி முதலியவைகளையும், மற்றும் காளஹஸ்தி, வேங்கடகிரி, வேடவல்லம் முதலிய இடங்களிலுள்ள பாளையக்காரர்களையும் சேர்த்துக்கொண்டு தஞ்சாவூர் அரசருடன் யுத்தத்திற்குக் கிளம்பித் தஞ்சாவூருக்கு வடகிழக்குப் பாகத்தில் ஆறு மைலுக்கப்பால் பசுபதிகோவில் என்னும் ஊருக்குச் சமீபத்திலுள்ள மைதானத்தில் இறங்கினார். அப்போது பிரதாபசிம்ம மகாராஜாவும் தம் சேனையில் 3000 படைகளையும் கொஞ்சம் பீரங்கி முதலான முஸ்தீப்புகளையும் சேர்த்து கோவிந்தராவ் சேட்கேயையும், மானாஜி ராவ் ஜகதாப் என்பவரையும் அனுப்பினார்.

இரண்டு சேனைகளுக்கும் காலை வேளையில் யுத்தம் நடந்தது. தஞ்சாவூர் சேனையெல்லாம் எதிரிகளின் பீரங்கிகளைப் புறக்கணித்து உள்ளே புகுந்தன. அனவர்த்திகானின் சேனை முழுவதும் குழப்பமடைந்து தஞ்சாவூரின் சேனையால் தாக்கப்பட்டுக் கொல்லப்பட்டன. பெயர் பெற்ற அநேக வீரர்கள்கூட நிற்க மாட்டாமல் ஓடிப்போய் விட்டார்கள். கடைசியில் தஞ்சாவூர் சேனையிலுள்ள படைகள் அனவர்த்திகான் சவாரி செய்யும் யானையை ஈட்டி முதலியவைகளால் தாக்கி அதை அசைவற்றுப் போகும்படி நிறுத்தி, அம்பாரியிலுள்ள கயிறுகளை அறுத்தார்கள். அப்பொழுது அனவர்த்திகான் பிடிக்கப்பட்டு, நான்கு நாழிகைவரையில் தஞ்சையின் சேனையின் முன்பாகத் தன் பேச்சுவன்மையால், தனக்கு ஏதாவது தீங்கு நேரிட்டால், பிரதாபசிம்ம மகாராஜாவைப் பழிவாங்க நேரிடும் என்று எச்சரித்துச் சமாளித்துக்கொண்டார்.

இதற்குள்ளாகக் கோட்டைக்குச் சமீபம் வந்துவிட்டபடியால் மகாராஜாவுக்குச் சமாசாரம் தெரிந்து, மகாராஜாவும் பாதுஷாவின் சுபேதார் ஆனபடியால், அனவர்த்திகானை விட்டுவிடும்

படி கட்டளை யிட்டதினால் அவரை விட்டுவிட்டுச் சேனை சென்று விட்டது. இதையறிந்த பாதுஷா, மகாராஜாவுக்கு ஆடைகளும், கடிதமும் அனுப்பி, மகாராஜாவிடமிருந்து தானும் ஆடைகளும், கடிதமும் பெற்றுக்கொண்டு ஒருவிதமாகப் பேச்சு வார்த்தைகளைச் சமாதானமாக முடித்துக் கொண்டார். அன்வர்த்திகானும் ஆற்காட்டுக்குத் திரும்பினார். அந்த சமயத்தில் வெள்ளை யானை யொன்று வந்திருந்தது.

பிறகு, முன்கூறப்பட்ட ரகோஜி போன்ஸலேயும், பத்தேசிங்கும் திருச்சினாப்பள்ளியைக் கைப்பற்ற வந்த சந்தா சாஹேபை மலைப்பிரதேசத்திலுள்ள கோட்டையில் வைத்திருந்தவர்கள் இப்போது அந்த சந்தா சாஹேபுக்கு "நீர் எங்கு வேண்டுமானாலும் செல்லலாம். ஆனால் தஞ்சாவூர் ராஜ்யம் நமது தேசமாதலால் நீர் அங்கு செல்லக்கூடாது" என்று எழுதி, அவ்வாறே உறுதி மொழியும் வாங்கிக்கொண்டு அவரை விடுவித்தனர்.

சந்தா சாஹேப் அங்கிருந்து கிளம்பி, ராஸ்த் மோஹிதீன் கான் என்பரை யணுகி, அவரோடு பேச்சுவார்த்தை முடித்துக் கொண்டு 25000 காலாட் படைகளும் அதற்குத் தகுந்த பீரங்கி முதலியவைகளையும் கொண்டு, ராஸ்த்மோஹிதீன் கானுடன் தெற்குப் பிரதேசத்தை நோக்கிப் படையெடுத்துச் சென்றார். அப்போது பிரஞ்சுக்காரர்களுக்கும் கடிதமெழுதி அவர்களுடன் உடன்படிக்கை செய்துகொண்டு, அவர்களுடைய உதவியினால் ஆற்காடு சுபேதாரான அனவர்திகானைக் கொன்று, ஆற்காட்டை யடைந்தார்கள். அப்போது ஆற்காட்டிலுள்ள மஹமது அலி கான் இரகசிய மார்க்கமாய் நாகப்பட்டணத்தை யடைந்து, இரண்டு மூன்று நாட்கள் அங்கு தங்கியிருந்து, பிரதாபசிம்ம மகாராஜாவுக்கு அங்கிருந்து கடிதம் எழுதினார். மகாராஜாவும் அக்கடிதத்தின் வணக்கமான போக்கையும், அப்போதைய கால நிலைமையையும், தம்மை அண்டினவருக்கு உதவி செய்யவேண்டுமென்பதையும் உத்தேசித்து, பிற்பாடு சந்தா சாஹேப், மோஹிதீன் கான் என்பவர்களிடமிருந்து உபத்திரம் ஏற்பட்டால் பிறகு

பார்த்துக்கொள்ளுவோமென்ற உத்தேசத்துடன் மஹம்மது அலியை வரவழைத்துத், தம் அரண்மனையின் நந்தவனத்திலுள்ள கட்டிடத்தில் இடங்கொடுத்து வைத்துக்கொண்டார்.

நவாப் மஹம்மது அலிகான் மூன்று மாதகாலம் மகாராஜாவின் பாதுகாப்பிலிருந்து, ஸ்ரீரங்கபட்டணத்தின் அதிபதிக்கும், தேவராஜ தளவாய் என்பவருக்கும், தக்ஷிணப் பிராந்தியத்தின் பாளையக்காரர்களெல்லோருக்கும் ஹைதராபாதிலுள்ள நாஸர் ஜங் என்பவருக்கும், ஆர்காடு பிராந்தியத்திலுள்ள காளஹஸ்தி, வேங்கடகிரி, பொம்மராஜ் முதலிய இடங்களிலுள்ள பெரிய பாளையக்காரர்களுக்கும், கடிதமெழுதி யனுப்பி, மூன்று மாதத்திற்குப் பிறகு, திருச்சினப்பள்ளிக் கோட்டையை யடைந்தார். நவாப் மகம்மது அலி அடைக்கலமாக வருவதற்கு முன்பே, பிரதாபசிம்ம மகாராஜா தன் மகனான துளஜா மகாராஜாவுக்கு, முதன் முதலாக, மோஹிதே வம்சத்தாரின் மகளை விவாகம் முடித்தார். அந்த பாயிசாஹேபாவின் பெயர் ராஜஸ் பாயி சாஹேப்.

பிறகு சிலநாள் கழித்து, மகாராஜாவின் முதல் மனைவி அஹல்யா பாயி சாஹேப் என்பவர் தெய்வகதி யடைந்தார். நான்காவது மனைவியான யச்வந்த் பாயி சாஹேபாவின் வயிற்றில் இரண்டு கன்னிகைகள் பிறந்தார்கள். அவ்விரு கன்னிகைகளையும், விவாகத்திற்குரிய வயது வந்ததும், ஒரு கன்னிகையை மஹடிக் வம்சத்திலும், மற்றொரு கன்னிகையை ஷிம்பால்கர் வம்சத்திலும் கலியாணம் செய்து கொடுத்தார். பிரதாபசிம்ம மகாராஜாவினால் எடுத்துக்கொள்ளப்பட்ட ஏழு ஸ்திரீகளில் அன்னபூர்ணாபாயி என்பவரின் வயிற்றில் ராமஸ்வாமி, கிருஷ்ணஸ்வாமி என்று இரண்டு பிள்ளைகள் பிறந்தனர். ஆனால் அவர்கள் சரியான வகையில் பிறக்கவில்லை யென்றும் ஒழுங்கற்ற முறையில் பிறந்தார்களென்றும் ஊரில் வதந்தியொன்று உலவி வந்தது. அவர்களுள் இளையவரான கிருஷ்ணஸ்வாமி என்பவர் கொஞ்சநாட்களிருந்து பிறகு தெய்வகதி யடைந்தார். மூத்த மகனான

ராமஸ்வாமி என்பவர் இருந்தார். அவருடைய பெயர்தான் பிறகு அமர்சிங் என்று வழக்கத்தில் வந்தது. இங்கு சொல்லப் பட்ட நான்கு சமாசாரங்களும் ஒரே காலத்தில் நடந்தவைக ளல்ல. ஏழு அல்லது ஐந்து வருஷங்கள் முன்பின் இருக்கும் என்பது அறியத்தக்கது.

பிறகு நடந்தவை இனி எழுதப்படுகின்றன. ஹிராஸத் மொஹிதீன்கான் என்பவரும், சந்தா சாஹேபும் தக்ஷிணப் பிராந் தியத்தைப் பிடிக்கவேண்டுமென்ற காரணத்தினால் புதுச்சேரி மார்க்கமாய்க் கிளம்பித் திருச்சிறைப்பள்ளிக்கு வருமுன் பிரதாப சிம்ம மகாராஜாவுக்கு, சேனையின் உதவிக்காக ஏதாவது பணம் கொடுக்கவேண்டு மென்று சொல்லி யனுப்பினார். மகாராஜா, நவாப் மகம்மது அலிகான் தமக்கு வேண்டியவராதலால், அவ ருடைய சத்ருவுக்கு உதவி செய்யக்கூடா தென்று நினைத்து மறுதளித்துவிட்டார். அந்தக் கோபத்தினால் சந்தா சாஹேப் ஹிராஸத் மோஹிதீன் கானையும் அவருடைய சேனையையும் அழைத்துக்கொண்டு தஞ்சாவூரை முற்றுகை செய்தார். மகா ராஜாவின் சேனை வெளிக்கிளம்பி தீரத்துடன் போர் புரிந்தது. சந்தா சாஹேப் முதலானவர்கள் இரண்டு மூன்று தடவை கோட்டையை யிடித்து நாசஞ் செய்தார்கள். மகாராஜாவும் உடனுக்குடன் இடிக்கப்பட்ட கோட்டையின் பாகங்களைத் திரும்பவும் செப்பனிட்டுத் தன் பராக்கிரமத்தினால் சத்ருக்களை விரட்டியடித்ததினால், சந்தா சாஹேப் முதலானவர்கள் தம் எண்ணம்நிறைவேறாமல் கொஞ்சம் சண்டையிட்டும் கொஞ்ச காலம் சமாதானப் பேச்சு வார்த்தை நடத்தியும் வந்தார்கள். அதற்கெல்லாம் மகாராஜா இடங்கொடுக்காமல் இரண்டு மூன்று மாத காலம் வரையில் சண்டையிட்டு வந்தார்.

இதற்குள்ளாக, நாஜர்ஜங் என்பவர் அநேக முஸ்தீப்பு களுடன் ஹைதராபாத்தை விட்டுக் கிளம்பி ஆற்காட்டுக்கு வந்து சேர்ந்தார். அவருடைய பின்னணிப் படையிலுள்ள குதிரைப் படை முன் வந்தது. அவர் ஆற்காட்டிலிருந்த சந்தா சாஹேபின்

சர்தாரான சேஷ ராயர் என்பவரைக் கொன்றுவிட்டார் என்ற சமாசாரம் சந்தா சாஹேபிற்கு எட்டியவுடன், தஞ்சாவூர் முற்றுகையை விட்டுவிட்டு, ஹிராஸத் மொஹிதீன்கானுடன் சில சாமான்களை விட்டு விட்டு, எல்லோரும் புதுச்சேரியை அடைந்தார்கள். நவாப் மகம்மது அலிகானும், திருச்சினுப்பள்ளியிலிருந்து கிளம்பி நாஜர்ஜங்கை எதிர்கொண்டு ஆற்காட்டையடைந்தார். அப்போது உதவிக்காகத் தஞ்சைக்குச் சொல்லியனுப்பினார். தஞ்சை மகாராஜாவும் தன் சேனைத்தலைவரான மானுஜி ராயரைச் சேனையோடு நாஜர்ஜங்கிற்கு உதவிக்காக அனுப்பினார். அவர் சென்று சிலநாட்கள் இருந்து பிறகு வந்துசேர்ந்தார்.

பிறகு, நாஜர் ஜங் தெய்வகதி யடைந்தா ரென்ற சமாசாரம் வந்தது. சந்தா சாஹேபும் நாஜர் ஜங் இறந்தவுடன் திருச்சியை நோக்கி, ஸ்ரீரங்கத்திலுள்ள பிரஞ்சுக்காரர்களின் உதவியைக் கொண்டு யுத்தத்திற்கு வந்து சேர்ந்தார். அப்போது தஞ்சாவூர் ராஜ்யத்தில் வேலையிலுள்ள ஜமேதார் அலம்கான் என்ற பட்டாணியர், 100 குதிரைக்கு அதிபதியாயிருந்தவர், பிரதாபசிம்ம மகாராஜாவுடன் மனஸ்தாபப் பட்டுக்கொண்டு சந்தா சாஹேபுடன் சேர்ந்துகொண்டார். பிறகு சந்தா சாஹேபையும் லக்ஷியம் செய்யாமல், அநேக பட்டாணியர்களைச் சேர்த்துக்கொண்டு, மதுரை ராஜ்யத்திலுள்ள துரும்புரு என்னும் ஊரின் ஜாகிர்தாராயிருந்த தன் மைத்துனனுடன் ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டு, நாட்டிலுள்ள கள்ளர்கள் சிலரைச் சேர்த்துக்கொண்டு, மதுரையை யடைந்து, அங்கிருந்து மாபூஸ்கானுடன் சண்டை யிட்டு, அவரைத் திருச்சிக்குவிரட்டி யடித்துவிட்டு மதுரை, திருச்சினுப்பள்ளி பிராந்தியங்களைப் பிடித்துக்கொண்டார். பிறகு கொஞ்ச நாட்களுக்குள் மூன்று நான்கு ஆயிரம் சேனையைச் சேர்த்துக் கொண்டு, அந்த சேனையுடன் சந்தா சாஹேபின் உதவிக்கு வந்தார். ஆக, சந்தா சாஹேப், பிரஞ்சுக்காரர்கள், அலம்கான் இம்மூவரும் ஒன்று சேர்ந்து, திருச்சினுப்பள்ளியை நோக்கி யுத்தத்திற்கு வந்தார்கள்.

அப்போது, மஹம்மது அலிகான் திருச்சிறுப்பள்ளியி லிருந்து கொண்டு, தனக்கு மிகவும் வேண்டியவரான தஞ்சாவூர் அரசருக்கு சொல்லியனுப்பிய மாத்திரத்தில், மகாராஜா தன் சேனையிலிருந்து 1000 குதிரைப் படைகளையும், 15000 காலாட் படைகளையும், பெரிய பீரங்கி யந்திரத்தையும், சேனைக்கு வேண் டிய உணவுப் பொருள்களையும் கொடுத்து, மானுஜி ராவ் என்ற சர்தாருடன் சகாயத்திற்கு அனுப்பினர். அப்படியே விஜய ரகுநாத நாயுடுவும், மானுஜியுடன் தன் சேனையிலுள்ள சிறிய பாகத்தைக் கொடுத்தனுப்பினர். அவ்விதமே, ராமநாதபுரத்து மறவரும், உடையத் தேவரும் தங்களாலான சிறியதோர் உதவி யை அனுப்பினர்கள். இதைத் தவிர, நவாப் மகம்மது அலிகான் சொல்லியனுப்பியதற் கிணங்கி, ஸ்ரீரங்கப்பட்டணத்துப் பெரிய சேனையுடன் நந்தராஜ் தளவாய் என்பவர், சைதம் கதூ என்ற சர்தாருடன் கிளம்பி, தன் சர்தாரான கத்தீ கோபால ராவ் என்ப வரைத் திருச்சிக்கு அனுப்பி, நவாப் மகம்மதலிகானுக்கு திரவிய சகாயம் செய்து, தானும் தன்னுடைய பெரிய சைன்யத்துடன் மஹம்மதலிகானின் உதவிக்கு வந்து சேர்ந்தார். அப்படியே, முரார்ஜி கோர்படேயும் தன்னுடைய சேனையுடன் நவாபின் சகா யத்திற்கு வந்தார். இவ்விதமாக சந்தா சாகேபின் சேனையும், மஹமத் அலி, முரார்ஜி கோர்படே முதலியவர்களின் சேனைக ளும் யுத்தத்திற்குத் தயாராயிருந்தார்கள். ஏற்கனவே சொல்லிய படி, முந்தி தஞ்சாவூர் ராஜ்யத்தில் வேலையிலிருந்த அலம்கானும் மதுரைப் பிராந்தியத்தைப் பிடித்துக்கொண்டு சந்தா சாஹேபின் உதவிக்கு வந்தார். அவர் தன்னுடைய சேனையையும் வேறொரு வருடைய சிறியதோர் சைன்யத்தையும் அழைத்துக்கொண்டு மானுஜி ராவுடன் எதிர்நோக்கி யுத்தத்திற்கு வந்தான். அப் போது, மானுஜி ராவும் தன் சேனையுடன் யுத்தத்திற்கு வந்து, இருவரும் கைகலந்து, துப்பாக்கிச் சண்டை நடந்துகொண்டிருக் கும் போது, ஆங்கிலேயரிடத்திலுள்ள சர்தார் மேதர் என்பவர், கொஞ்சம் சைனியத்துடன் திருச்சியை நோக்கிப் போய்க்கொண் டிருக்கும்போது, வழியில் யுத்தத்திற்குத் தயாராயிருந்த மானுஜி ராவை நோக்கி, அவரை யணுகி சமாசாரத்தைக் கேட்டார்

மாஜி ராவும் நடந்த எல்லா விருத்தாந்தங்களையும் சொன்னார். இதைக்கேட்டு, மேதர், பீரங்கி யந்திரமிருந்த இடத்தை யணுகித் தன் கையினால் பீரங்கியை நாலைந்து தடவைகள் வெடித்தார். அவைகளில் ஒன்று அம்பாரியிலுள்ள அலம்கானின் கழுத்தில் விழுந்து அவருடைய தலையைக் கீழே வீழ்த்தியது.

உடனே தஞ்சாவூரின் சேனை அலம்கானின் சேனையின்மேல் விழுந்து, யுத்தம் நடந்தபோது யுத்த களத்திற்கு வந்த சேனையைத் தவிர்த்து மற்றுமுள்ள சேனை நிற்கமாட்டாமல் சின்னா பின்னமாயிற்று. எஞ்சிய சேனையைத் தஞ்சாவூர் சேனை, மாஜி ராயரிடம் ஒப்புவித்தது. இவ்விதமாக மஹமத் அலிக்கு முதல் ஜயம் தஞ்சாவூர்க்காரர்களிடமிருந்து உண்டாயிற்று.

அதன் பிறகு மஹமதலி கானுக்கும் சந்தா சாஹேபுக்கும் வெகுநாள் யுத்தம் நீண்டது. ஸ்ரீரங்கத்துக்கும் திருச்சினாப் பள்ளிக்கும் மத்தியில் காவேரி நதி இருப்பதால், காவேரிக்கு வடக்குக் கரையில் சந்தா சாஹேபுக்காக பிரஞ்சுக்காரர்களின் முஸ்தீப்புகளும், காவேரிக்குத் தென்கரையில் நவாப் மஹமதலிக்காக ஆங்கிலேயர்களின் முஸ்தீப்புகளும் இருந்தன. யுத்தம் ஆரம்பமாயிற்று.

அப்போது நந்தராஜ், முரார்ஜி கோர்படே, மற்றும் மாஜி ராவ் ஜகதாப் ஆகிய எல்லோரும் சந்தா சாஹேபின் சைனியத்தை ஒரு வழியிலும் போகவொட்டாமல் நாலாப் பக்கங்களிலும் சூழ்ந்து கொண்டார்கள். அப்போது, சந்தா சாஹேபினிடம் செலவுக்குப் போதிய பணமும் இல்லை. சைனியத்திற்கு வேண்டிய உணவுப் பொருள்களும் ஆகிவிட்டதால், அவருடைய சைன்யத்துக்கு மனச்சோர்வு ஏற்பட்டுக் கலகம் உண்டாயிற்று. சந்தா சாஹேப் ஓடிப்போய்விட வேண்டுமென்று நினைத்தபோதிலும், எங்கும் வழியில்லாமல் நாலாப் பக்கங்களிலும் சத்ருக்களின் சைனியம் சூழ்ந்து கொண்டிருந்தது. தன் சைனியமும் தனக்கு அடங்காமற் போகவே, சந்தா சாஹேப் கீழ்க்கண்டவாறு யோசனை செய்தார்:—

"நான் நினைத்த எண்ணங்களில் ஒன்றும் சபலமாகவில்லை. இங்கிருந்து எங்கு செல்வது என்பதற்கு ஒரு இடமும் கிடையாது. எப்படியாவது தப்பிப் போய்ப் பிழைத்துக் கொள்வோமென்றாலும் சேனையிலுள்ளவர்கள் என்னை விடுவதில்லை வெளியேயும் எதிரிகள் சைன்யங்களால் சூழப்பட்டிருப்பதால், நம்முடைய சைன்யமே இன்னும் இரண்டு நாளில் நம்மைப் பிடித்து மகமத் அலியிடம் கொடுத்து விடுவார்கள். மகமத் அலியின் தகப்பனாரை நான் கொன்றிருக்கிறேன். அதற்கு அவன் பழி வாங்குவான். ஆகையால், தஞ்சாவூர்க்காரர்கள் போக்கியர்களாயும், நல்லவர்களாயும், சூரர்களாயு மிருக்கிறார்கள். அவர்களிடத்தில் சென்றால் அவர்கள் ரக்ஷிப்பார்கள். ஒருக்கால் காப்பாற்றாமலிருந்தாலுமிருக்கலாம். ஏனென்றால் முன் நடந்த ஒரு சம்பவம் முதற்கொண்டு அவர்களுடன் நான் சிநேகமாக இருக்கவில்லை. தவிரவும் மராட்டியர்களிடம் ப்ரமாணம் செய்து கொடுத்து வந்தும், தஞ்சாவூரோடு சண்டை செய்தேன். ஆகையால் அவர்கள் எவ்விதம் என்னைக் காப்பாற்றுவார்கள்? இதைத்தவிர அவர்களுக்கு மஹமத் அலிகான் சிநேகமும், ஆங்கிலேயருடைய சிநேகமும் அதிகமாயிருக்கிறது. இந்தக் காரணத்தைக்கொண்டும் அவர்கள் என்னை ரக்ஷிக்கமாட்டார்கள். ஆனாலும் என்னை உயிருடன் மஹமத் அலிகானிடம் ஒப்புவிக்காமல், உங்கள் கையாலேயே கொன்று விடுங்களென்று வேண்டிக்கொள்ளுகிறேன். இங்கிருந்து மஹமத் அலியிடம் சிக்கிக்கொள்வதைக் காட்டிலும், தஞ்சாவூர்க் காரர்களிடமிருந்து கொல்லப்படுவது நன்று" என்று திடமாய் யோசித்து, நள்ளிரவில் ஒருவருக்குந் தெரிவிக்காமல் ஒரு குதிரையின்மேல் ஏறிக்கொண்டு ஒரு வேலைக்காரனைக் கூட அழைத்துக்கொண்டு மிகவும் ரகசியமாய் தஞ்சாவூரின் சைன்யம் இருந்த இடமாகிய, திருச்சிக்குக் கிழக்கிலும் காவேரி நதிக்குத் தெற்கிலும் உள்ள இடத்தையணுகி, சர்தார் மானாஜி ராவுக்கு ரகசியமாகச் சொல்லியனுப்பினார். அப்போது மானாஜி ராவ் தான் மட்டும் கொஞ்ச தூரம் சென்று சந்தா சாகேபுவை சந்தித்துப் பேசியதாவது:— "நீங்கள் எதற்காக வந்தீர்கள்? உம்மைக் காப்பாற்ற எங்களால் ஒரு

விதத்தாலும் முடியாது. பிரதாபசிம்ம மகாராஜாவுக்கும் உங்கள் விஷயத்தில் கோபம் அதிகமாக இருக்கிறது. ஆகையால் உங்களை எங்களால் காப்பாற்ற முடியாது. இப்பொழுதும் உங்களுக்கு வேண்டிய செலவுக்குத் தருகிறேன். நீங்கள் உங்கள் சேனையுள்ள விடத்திற்குப் போங்கள். அங்கே செல்ல உங்களுக்குப் பிடிக்கா விட்டால், செலவுக்கு வேண்டிய பொருளைத் தருகிறேன். கூட நம்பிக்கையான மனிதனையும் தருகிறேன். இப்பொழுதே இங்கிருந்து கிளம்பி தெற்குத் திக்கில் அதிக மரங்களுள்ள இடத்திற்குச் செல்லலாம். அங்கிருந்து முன்னே வெகுதூரம் செல்ல இஷ்டமிருந்தால் செல்லலாம். இல்லாவிடில் இங்கிருந்து உடையார்பாளையம் காட்டிற்கு அப்பால் உள்ள மரங்களடர்ந்த வேடவல்லம், திருநாமலை என்ற இடத்திற்குச் செல்லலாம். உமக்கு எவ்வாறு தோன்றுகிறதோ அப்படியே செய்யலாம்" என்று சொன்னார். இதற்கு சந்தா சாகேப் பதில் கூறியதாவது :— "இந்த சமாசாரங்களெல்லாம் எனக்குத் தெரிந்ததுதான். நீங்கள் செய்யவேண்டிய உபகாரம் என்னவென்றால், மஹமத் அலி கானிடம் மட்டிலும் என்னை ஒப்புவிக்கவேண்டாம். அப்படி நேரும் பக்ஷத்தில் உங்களுடைய மனிதர்களைக்கொண்டே கொன்று விடுங்கள். இந்த அபயத்தைக்கொடுங்கள்" என்று கேட்டுக்கொண்டார்.

அப்போது மானாஜி ராயரும் அவருடைய பிராணனை ஒப்பிவிக்கிறதில்லை என்று அபயம் கொடுத்து, அவருக்காக ஒரு தனிமையான இடத்தை ஏற்படுத்தி ரகசியமாய் பந்தோபஸ்து செய்துவைத்து, வேறு காரியமாகத் தஞ்சாவூருக்குச் சென்றார். முன் நடந்த செய்திகளைக் குறித்து விஸ்தாரமாய் எழுதியதற்கு பிரதாபசிம்ம மகாராஜா பதில் சொல்லியதாவது :— "இந்த சந்தா சாகேபு செய்த காரியங்களை உத்தேசித்தால் அவரை நாம் காப்பாற்றவே கூடாது. இருந்தபோதிலும் சரணமடைந்தபிறகு நாம் ஒன்றையும் நினைவுக்குக் கொண்டுவரக்கூடாது. அவரைக் காப்பாற்றுவதுதான் சரி" யென்று சொல்லி சந்தா சாஹேபைத் தஞ்சாவூருக்கு அனுப்பும்படி உத்தரவிட்டார்.

அப்போது சந்தா சாஹேப் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்து போய்விட்டார் என்ற சமாசாரம் நவாப் மஹமத் அலி கானுக்குத் தெரிந்து அவர் தேடியபொழுது, மூன்றாவது நாள் தஞ்சாவூர் சைன்யத்திலிருப்பதை யறிந்து, அப்பொழுது மானுஜி ராயரையும் மகாராஜாவையும் பிரார்த்தனை செய்ததாவது :—

"மகாராஜாவினால் என் உயிர் பிழைத்தது. மகாராஜா எனக்கு அபயமளித்ததால் நான் பிழைத்து மறுபடியும் என் பாக்கியத்தை அடைந்தேன். அப்பொழுதும் ராஸத் மொஹிதீன் கானும், சந்தா சாஹேபும் வந்தார்கள். அப்பொழுதும் என்னை அங்கீகரித்து எனக்கு அபயமளிப்பதற்கு யார் தைரியமுள்ளவர்களாயிருந்தார்கள்? அந்த சமயத்தில் மஹாராஜா தன்னிடத்தில் யார் வந்தாலும் பார்த்துக்கொள்ளுகிறேன் என்று சொல்லி தைரியத்தோடு எனக்கு அபயமளித்ததினால் நான் ஐசுவரியத்தை யடைந்தேன். இப்பொழுதும் அப்படியே என் மீது தயை கூர்ந்து என் தந்தைமீது அவன் செய்த பழியைத் தீர்த்துக்கொள்ளுவதற்காகச் சந்தா சாஹேபை என்னிடம் கொடுக்கவேண்டும்" என்று அநேக விதமாய்ப் பிரார்த்தித்தார். இதைத் தவிர, நந்தராஜனும், முராரீஜி கோர்படேயும் தங்களிடத்தில் சந்தா சாஹேபை ஒப்புவிக்குமாறு கேட்டனர். அவ் விதமே ஆங்கிலேய சர்தார்களும் சந்தா சாகேபைத் தங்களிடத்தில் ஒப்புவிக்குமாறு அதிகார தோரணையில் கேட்டனர். அப்போது மானுஜி ராயருக்கும் அவருக்கும் சம்பாஷணை தொடங்கி உயிரை ஒருபோதும் ஒப்புவிக்கப் போவதில்லையென்று தீர்மானித்து சந்தா சாகேபைக் கொன்றுவிட்டார். கி. பி. 1752-ம் வருஷம் ஜூன்மாதம் 3ந்தேதியன்று சந்தா சாகேபின் தலையை வெட்டி நவாபிடம் அனுப்பி, மானுஜி ராவ் தஞ்சைக்குப் புறப்பட்டு வந்தார். இதற்கு முன்பே தஞ்சாவூரின் சைன்யம் உதவிக்கு வந்த போது கி. பி. 1752-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 21ந்தேதி மானுஜி ராவ், கோவிலடியிலுள்ள பிரஞ்சுக்காரர்களின் கோட்டையின் வசதிகளைச் சின்னாபின்னமாக்கிக் கோட்டையை வசப்படுத்திக் கொண்டார்.

பிறகு, சந்தா சாகேபின் தலையை வெட்டினவுடன், நவாப் மஹமத் அலிகான், பிரதாபசிம்ம மஹாராஜாவின் தான தருமம் முதலிய செலவுகளுக்காகவென்று ஒரு லக்ஷ ரூபாய் பொறும்மான முள்ள அளங்காடு பிராந்தியத்தையும், கோவிலடியிலுள்ள கோட்டையையும் கொடுத்தார். அப்படியே விஜயரகுநாதராய தொண்டமானுக்கு பேஷ்கஷ் என்னும் கப்பத்தை விட்டுக்கொடுத்தார்.

நந்தராஜனும், முரார்ஜி கோர்படேயும் திருச்சினப்பள்ளியின் ஆசையை வைத்துக்கொண்டு நவாபுடன் யுத்தத்தைத் தொடங்கினார்கள். அப்பொழுதும் தஞ்சாவூர் மகாராஜா நவாபிற்கு உதவியை அனுப்பினர். கொஞ்ச நாள் யுத்தம் நடந்து, அந்த யுத்தத்தில் நந்தராஜனிடத்திலுள்ள ஒரு யானை ஓடிவந்து தஞ்சையை யடைந்தது. மேலும் நந்தராஜனிடத்திலுள்ள ஒரு பீரங்கியைத் தஞ்சையிலுள்ள சர்தார்கள் வீழ்த்திக்கொண்டு வந்தார்கள். அதன் பிறகு, நவாப் மகமத் அலிகான் திருச்சினப்பள்ளிக் கோட்டையில் ஆங்கிலேயருடைய இடங்களை நன்றாய்ச் செப்பனிட்டுத் தான் சீக்கிரமாய் ஆங்கிலேயரின் சைன்யத்தைக் கொஞ்சம் எடுத்துக்கொண்டு சென்னப்பட்டணம் சென்றார். இந்த சமாசாரத்தை நந்தராஜனும், முரார்ஜி கோர்படேயுமறிந்து தங்களை ஏமாற்றிவிட்டுச் சென்றார்களென நினைத்து, முரார்ஜி கோர்படேயின் சகோதரரான புஜங்க ராவும், அவருடைய மாப்பிள்ளையும் குதிரைப் படைகளுடன் பின் தொடர்ந்து, பன்னிரட்டி திருவாதிக்குச் சமீபத்தில் நவாபின் பல்லக்கைத் தாக்கினார்கள். உடனே நவாபினிடத்திலுள்ள ஜனங்கள் பீரங்கிப் பிரயோகம் செய்ய, முரார்ஜி கோர்படேயின் தம்பியான புஜங்க ராவும், அவருடைய மாப்பிள்ளையும் கொல்லப்பட்டார்கள். நவாப் முன் சென்றுவிட்டார். நவாப் முன் நோக்கிச் சென்ற செய்தியை யறிந்த முரார் ராவ், மிகவும் வருத்தமடைந்து, தன் சைன்யங்களுடன் தன் இருப்பிடத்திற்குச் சென்றார். நந்தராஜன் இரண்டு காவேரியாற்று நடுவிலுள்ள பிரதேசத்தை ஆக்ரமித்துக்கொண்டு, கொஞ்சநாள் ஜம்புகேசுவரத்தில் தங்கியிருந்து பிறகு, தன் ஸ்தானமாகிய ஸ்ரீரங்கப்பட்டணத்தை நோக்கிச் சென்றார்.

பிறகு பிரதாபசிம்ம மஹாராஜா தன் புத்திரரான துளஜா மகாராஜருக்கு மாடீகரின் பெண்ணான ராஜகுமார பாயி சாஹிபாவை இரண்டாவது கல்யாணம் முடித்தார். உடனே நான்கு ஆறு மாதத்திற்குள் மோஹிதேயின் பெண்ணான மொஹனா சாஹேபாவை துளஜா மகாராஜாவுக்கு மூன்றாவது கல்யாணம் செய்துவைத்தார்.

அதன்பிறகு மகாராஜா தன் சேனாதிபதியான மானாஜி ராயரைத் தக்ஷிணபிராந்தியத்திற்கு அனுப்பவேண்டிய ஒரு அவசியம் ஏற்பட்டது. அது என்னவெனில்,—ராமநாதபுரத்து ஜமீன்தாரான மறவர் எப்போதும் மஹாராஜாவின் பாதுகாப்பில் இருப்பவர். இருந்தபோதிலும் தற்சமயம் புதிதாக யௌவன தசையிலுள்ள அவருக்கு அதிகாரம் கிடைத்தால், யௌவன மதத்தினால் கொஞ்சம் உதவியைத் தேடிக்கொண்டு, நவாப் மஹமத் அலிகானின் சிநேகம் தனக்கு சாசுவதமானது என்று எண்ணி, தக்ஷிணப் பிராந்தியத்திலுள்ள மகாராஜாவின் ராஜ்யத்தில் சில கொடுஞ் செய்கைகளைச் செய்தார். மகாராஜாவும் இரண்டொரு தடவை மன்னித்து விட்டார் பிறகு, அவருடைய காரியங்களில், நவாபும் உள்கையாயிருப்பதை யறிந்தார். தக்ஷிண பிராந்தியத்திலுள்ள ராஜ்யம் எப்போதும் தஞ்சை சமஸ்தானத்தைச் சேர்ந்தது. மகாராஜா ராமேச்வர யாத்திரைக்குச் சென்றபோது, ராமநாதபுரத்துக் கதிபதியான வயது முதிர்ந்த மறவர் ஒருவர் இருந்தார். அவர் மகாராஜாவுக்கு அநேக சேவைகளைச் செய்து, அவருடைய பிரீதிக்கு வசமானதின் காரணமாக, அந்த திருவாடநீரி ராஜ்யத்தை அவர் தாக்ஷண்யத்திற்காக கொஞ்சகாலம் அவரிடம் ஒப்படைத்திருந்தார். பிறகு, அந்த மறவரின் மகன், நவாபின் விஷமத்திற்கு வசமாய், மகாராஜாவின் ராஜ்யத்தில் துஷ்டநடத்தைகளை ஆரம்பித்தபடியால், தன் சேனையையும், சேனாதிபதியையும் தென் திசைக்கு அனுப்பக் காரணம் ஏற்பட்டது. அப்போது, மானாஜி ராவ் சேனையுடன் சென்று சண்டை செய்து, ஹநுமந்தகட், வரூர், மங்கள், குவடி என்ற கோட்டைகளைச் சின்ன பின்னமாக்கி வசப்படுத்திக்கொண்டு,

திருவாடநீரீ பிராந்தியத்தையும் ஜயித்து, ஆர்முக் கோட்டைக்கு எச்சரிக்கை செய்து யுத்தம் நடத்தினர். ராமநாதபுரத் ததிபதியும் வகுக்ரா கோட்டையிலிருந்து சண்டை செய்தார். அதே சமயத்தில், மகாராஜாவும், ஆர்முக் கோட்டையை விட்டுவிட்டு, வேறு காரியமாய்த் தஞ்சைக்கு வரும்படி மானுஜி ராயருக்குக் கடிதம் அனுப்பினர். மானுஜி ராவும் ஆர்முக் கோட்டையை வசப்படுத்தாமல், திருவாடநீரி பிராந்தியத்தையும், தான் ஜயித்த மற்ற இடங்களையும் பந்தோபஸ்து செய்துவிட்டுத் தஞ்சைக்கு வந்தார்.

இச்செய்தியை, நவாப் மஹமத் அலிகான் அறிந்து, மகாராஜாவுக்கு எச்சரிக்கை செய்வது யுக்தமில்லை யென்று கி. பி. 1762ல் ஆங்கிலேயரின் சர்தாரான மாஸ்டர் ஆப்ரி என்பவருக்குக் கடிதம் எழுதினதாவது :— "திருச்சினாப்பள்ளி பிராந்தியத்தில் இருக்கிற மறவரின் ராஜ்யத்திலுள்ள ஹனுமந்தகுடி முதலான ஏழு கோட்டைகளை மகாராஜா வசப்படுத்திக் கொண்டார். இது மாத்திரமில்லை, கர்னல் க்ளியூ என்பவர், கர்னல் ஹர்நாநாதா என்பவரால் எழுதப்பட்ட ஆங்கிலேயரின் கொடி யொன்றை எடுத்துக்கொண்டு, ஹனுமந்தகுடியில் இருந்தவர் மகாராஜாவுக்கு அநேக விதமாய்ச் சொல்லியும், மகாராஜா அவர் சொல்லைக் கேட்காமல் கோட்டைகளைக் கைப்பற்றிக்கொண்டது மட்டுமல்லாமல், கர்னல் க்ளியூவினிடத்திலுள்ள கொடியையும் கிழித்தெறிந்தார்" என்று எழுதினர். இச்செய்தியும் மகாராஜா அறிந்தார்.

பிறகு, கொஞ்சநாள் கழித்துப் புதுச்சேரித் துறைமுகத்துக்குத் துரைத்தன அதிகாரத்துக்கு முஸேலாலி என்பவர் வந்தார். அவர் முன்பின் ஒன்றும் விசாரிக்காமல் அகாரணமாய் தஞ்சாவூருடன் யுத்தத்திற்கு வந்தார். தஞ்சாவூர் அரசரும் யுத்தத்திற்குக் காரணமென்னவென்று வினவ, அவர் சரியான படி பதில் அளிக்காது, தஞ்சைக் கோட்டையை முற்றுகை செய்தார். பிரதாபசிம்ம மகாராஜாவும் இரண்டுமாத காலம் எதிரி

யோடு கோட்டையிலிருந்து யுத்தம் செய்தார். பிறகு, தம் சைன்யத்தோடு வெளியில்கிளம்பி, முஸேலாலி சைன்யத்தை எதிர்த்து அநேக சர்தார்களைக் கொன்று, சில சைன்யங்களை அவருடைய பிராந்தியத்திற்கு அனுப்பி, அவருடைய சைன்யத்திற்கு உணவு பொருள்கள் கொஞ்சம்கூட வராமல் தடுத்தார். அதைக்கண்டு முஸேலாலி பயந்து, பெரிய பீரங்கி முதலியவைகளைக் கீழே போட்டுவிட்டு, வெகு வேகமாக எங்கும் நிற்காமல் புதுச்சேரியை அடைந்தார். அப்பொழுது மகாராஜா தன் ராஜ்யத்தில் ஓர் உத்திரவு போட்டார்:—இந்த சமஸ்தானத்தில் பரம்பரையாய் நடந்த வழக்கமாவது, ஐரோப்பியர் யாராவது ஒருவர் வந்தால், அவர் எங்கிருந்து ராஜ்யத்தில் பிரவேசிக்கிறார்களோ அங்கங்கு சுங்கவரி வசூலிக்கவேண்டும். அது எவ்விதமென்றால், ஐரோப்பிய சர்தார் நடந்து வந்தால், ஒவ்வொரு ஆளுக்கும் ஐந்து வராகன் வீதமும், குதிரையின்மேல் சவாரி செய்து வருபவருக்கு அதற் கதிகமாயும், ஐரோப்பியர்கள் யாராவது பல்லக்கில் உட்கார்ந்து வந்தால், அவர்களுக்கு விசேஷ வரியும், மற்றும் சேனையை யழைத்துக்கொண்டு யாராவதொரு ஐரோப்பிய சர்தார் வருவதாயிருந்தால், அவர் மகாராஜாவுக்கு முன்பே சொல்லியனுப்பி, வரி வசூலிப்போருக்கு வரியை வசூலிக்காம லிருக்குமாறு உத்திரவு போடுவதும் வழக்கமாயிருந்தது. தற் காலம் கடற்கரையிலிருக்கும் ஐரோப்பியர்கள் சமஸ்தானத்திற்கு வேண்டியவர்களா யிருக்கிறார்கள். மேலும் அவர்கள், வருவதும் போவதும் இனிமேல் எப்போதும் இருக்கும். அதிலும், சைன்யத்தோடு வருபவர்கள் நிச்சயமாய் நமக்குத் தெரிவித்துவிட்டுத் தான் வருவார்கள். மற்றும் வரும் ஐரோப்பியர், எத்துறைமுகத் திலிருந்து எப்படி வந்தாலும் அவர்கள் கொடுக்கவேண்டிய வரி யைத் தள்ளிவிட உத்திரவு வேண்டியதில்லை'' என்றும் கட்டளை யிட்டார்.

பிறகு புதுச்சேரியிலுள்ள கவர்னரும், சேனைத்தலைவனும், சென்னையிலுள்ள கோட்டையை முற்றுகை யிட்டார்கள். சந்தா சாகேபின் குழப்பத்தை அடக்கி, நவாபிற்கு அநேகவிதமான

உபகாரங்களைச் செய்ததால், சென்னை கவர்னர் மகாராஜா வுடன் விசேஷமான சிநேகத்தோடு இருந்தார். அதனால், மகா ராஜாவிற்கு உதவி அனுப்புமாறு எழுதினர். அப்போது மகா ராஜா திருச்சினாப்பள்ளியிலிருந்து சென்ற, மஹமத் இசூப்கான், மக்தான் என்பவர்களோடு நானூறு ஐந்நூறு குதிரைப் படை களை உதவியாக அனுப்பினர். மகாராஜாவிடமிருந்து வந்த சேனைகள், சென்னைக்கு வந்திறங்கின. முசேலாலியின் சைன்யத் துக்கு உணவுப் பொருள் வராமலும், சேனையும் மேல்நோக்கிச் செல்வதற்கியலாமலும் அநேக விதமாய்த் தாக்கி, வழியை மறித்து விட்டன. அதற்குமேல் முசேலாலி தன் சேனையைச் சமாளிக்க முடியாமல் புதுச்சேரிக்குத் திரும்பி வந்துவிட்டார். சென்னை கவர்னர் பிகட் துரை காரைக்கால் வந்து இறங்கின போது இரண்டாமுறை மகாராஜாவிடமிருந்து உதவியை நாடி னர். அப்போதும் மகாராஜா உதவி யனுப்பிச் சௌகரியங்களைச் செய்தார். பிறகு மூன்றுவது தடவையாக, பிகட் துரை புதுச் சேரிக் கோட்டையில் வந்திறங்கி யுத்தஞ் செய்தார். அப்போதும் மகாராஜாவின் உதவியை நாடினர். அப்போதும் மகாராஜா பெரிய சேனையை யனுப்பிச் சகாயஞ் செய்தார்.

இவ்விதமாக மூன்று தடவையும், ஆங்கிலேயரின் சொந்த ராஜ காரியத்தின்பொருட்டு மகாராஜா உதவி அனுப்பியதற்காக பிகட் துரை மிக்க சந்தோஷமடைந்து, தான் இங்கிலாந்துக்குப் போவதற்கு முன் மாஸ்டர் டுப்ளிகேஸ் என்னும் சர்தாரை மகா ராஜாவிடம் அனுப்பி, மகாராஜாவுக்கும் ஆங்கிலேயருக்குமுள்ள சிநேகத்தை, விசேஷமாய் விருத்தி செய்வதற்கு ஏற்பாடு செய்தார்.

பிறகு, மானாஜி ராவ் ஜகதாப் என்பவருக்கு சர்க்கீல் வேலை யும் சேனைத் தலைவர் வேலையும் கொடுத்திருந்த போதிலும், அவ ருடைய நடத்தை சரிவர இல்லாததினால், அவரைக் கொன்று விட வேண்டுமென்று நினைத்தபோதிலும் மன்னித்து, வேறு இரண்டொருவரை அவர்களுடைய குற்றங்களுக்காக கொன்றார்.

மானுஜியைக் கொன்றுவிட வேண்டுமென்று மகாராஜாவுக்கு எண்ணமில்லாததினால், அவரைக் கொல்லாமல், அவரிடமிருந்து சர்க்கீல் பதவியை மட்டில் எடுத்துவிட்டார். பிராமண ஜாதியில் பிறந்தவர், எந்த வஞ்சகமான காரியத்துக்கும் துணிகரமாய் வராமல், பயந்து தன் புத்தியால் காரியங்களைச் செய்வாரென்று நிச்சயஞ்செய்து, எல்லா இராஜ்ய தந்திரத்தையும் டபீர் நாரோபந்த் என்பவரிடம் ஸ்வாதீனம் செய்வித்து, அப்படியே கடைசி வரையில் நடத்தி வந்தார்.

பிறகு நவாப் மகமத் அலிகான் திருச்சினாப்பள்ளியில் வந்திருந்து, தஞ்சாவூர் மகாராஜாவுக்கு பேஷ்கஷ் நிமித்தம் சொல்லி யனுப்பினார். அப்போது மகாராஜா சொல்லி யனுப்பிய பதிலுக்கும் நவாப் பின்பு சொல்லி யனுப்பியதற்கும் முறண்பாடு ஏற்பட்டதினால், மகாராஜா சேனையைத் தயாரித்து, யுத்தத்திற்குச் சித்தமாயிருந்தார். அப்போது ஆங்கிலேய துரைத்தனத்தாரின் சர்தார்கள், மகாராஜா, நவாபிற்குச் செய்த உபகாரத்தையும், தங்களைக் காப்பாற்றின விதத்தையும், எண்ணி, நவாபிற்கும் வாங்கவேண்டிய ரீதியை உபதேசித்து, தாங்கள் மத்யஸ்தர்களாயிருந்துகொண்டு, இதுவரையில் கொடுக்கவேண்டிய பேஷ்கஷுக்கு ஒரு எல்லையை ஏற்படுத்தி, மேலும் ஒவ்வொரு வருஷம் கொடுக்கக்கூடிய பேஷ்கஷை ஆங்கிலேயர்கள் வழியாய் கொடுப்பதென்று ஏற்பாடு செய்து, இருதிறத்தாரும் பூதலூர் என்ற இடத்தில் பேட்டி காண்பதென்று ஒப்பந்தம் ஏற்படுத்தி, சமாதானம் செய்தார்கள்.

அதற்குள்ளாக மகாராஜாவின் புத்திரரான துளஜா மகாராஜாவின் இரண்டாவது மனைவிக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது.

முன்பு தெய்வகதி அடைந்த ஷஹாஜி ராஜா பிழைத்திருக்கிறானென்று சொல்லி, குப்பி என்ற வேலைக்காரியின் மகனை சுயான்யாவுக்குத் தஞ்சை ராஜ்யம் அடைய ஏற்பாடு செய்து

ஓடிப்போன் கோதாஜி காண்டகா என்பவன் அரியலூரின் காட்டுப் பிரதேசத்தில் ஒரு குக்கிராமத்தில் வந்திருக்கிறனென்று மகாராஜா அறிந்து, நம்பத்தக்கவர்களான இரண்டு சிப்பாய்களையும் அவர்களுடன் மற்றும் சிலபேர்களையும் அனுப்பி, அந்த கோதாஜி காண்டகாவைக் கொன்றுவிட்டார்.

இவ்விதமாகப் பிரதாபசிம்ம மகாராஜா இராஜ்யம் நடத்தி வரும்போது உத்தமமான கீர்த்தி பரவிற்று. அதைப்பற்றி இனிச் சிறிது சொல்லப்படுகிறது. வடக்கில் சாதாரா, புனு, ஔரங்காபாத் வரைக்கும், கிழக்கு திக்கில் சமுத்திர மத்திய பிரதேசத்திலுள்ள அச்சி, யாழ்ப்பாணம், கண்டி, சிங்களத்தீவு வரைக்கும், தெற்கிலும் மேற்கிலும் மலையாளம், கொழும்பு, கொச்சி, கிடாகாலி, ஸ்ரீரங்கபட்டணம், பூதலூர் வரைக்கும், வடக்கே குத்தி, கிருஷ்ணா நதிக்கரை, பனுல்கட் வரைக்கும், பிரதாபசிம்மமகாராஜாவின் நன்னடத்தை, உத்தமமான அரசாக்ஷி முறை, தான தருமங்கள், நெறிமுறையின் கீர்த்தி, வள்ளல் தன்மை, சௌரியம், எதிரிகள் அஞ்சும் பராக்ரமம், முதலான புகழ் பரவிற்று. ராஜ்யத்திலுள்ள ஜனங்களெல்லோருக்கும் மகாராஜாவின் தானம், கொடை முதலான குணங்களினுலும், ஜனங்களை ரஞ்சிக்கும் சக்தியினுலும் சுகம் விருத்தியடைந்தது. இவ்விதம்நடந்துவரும் நாளில் ராஜாவின் பரலோகப்பிரயாணநாள் சமீபித்ததை அறிவிக்கும் சில அறிகுறிகள் தோன்றின. அதன் விவரம் பின் வருமாறு:— முதலாவதாக, மரணத்துக்கு ஆறு மாதத்திற்கு முன்பு மகாராஜாவின் மனப்பான்மை மிகவும் முன் கோபமுள்ளதாக ஆயிற்று. அதற்கு ஒரு திருஷ்டாந்தம் சொல்லப்படுகிறது. பகவானுடைய தரிசனம் செய்வதற்காக மகாராஜா ஒருசமயம் திருவாரூருக்குச் சவாரி கிளம்பினர். அப்போது மகாராஜாவின் சேவையிலிருந்த மாவள வகுப்பைச் சேர்ந்த இரண்டு மராட்டியர்கள் பின் தங்கினர்கள். அவர்கள் மகாராஜாவின் சேவைக்கு ஏதாவது இடையூறு உண்டாகுமோவென்று பயந்து, மகாராஜாவின் சவாரியில் சேரவேண்டுமென்று, வேகமாக வந்தத

னால் அவர்களுடைய உடம்புக் காற்றும் அடிச்சுவட்டினின்று புழுதியும் மகாராஜாவின் உடம்பில் பட்டதென்றெண்ணி, மகாராஜா அந்த சமயத்திலேயே அவர்களைச் சிரச்சேதம் செய்வித்தார். சிரச்சேதம் செய்யத்தகுந்த குற்றம் அவ்விருவர்களிடத்திலும் இல்லாததால், மகாராஜா இன்று வரையில் இருந்துவந்த நடத்தைக்கு இது விபரீதமாயிருக்கிறதென்று ஜனங்களுக்குத் தோன்றிற்று. இம்மாதிரி இன்னும் சில உக்கிரமான காரியங்கள் நடந்தன. இதைத் தவிர ஒரு பிரபலமான தெய்வீக திருஷ்டாந்தமும் நடந்தது. அது என்னவென்றால்:—

மகாராஜாவின் மரணத்திற்கு மூன்று மாதத்திற்கு முன் இராக்காலத்தில் பன்னிரண்டு நாழிகைக்குமேல் 22 நாழிகை வரையில் ஒரு பெரிய அழுகை ஒன்று கேட்டுக்கொண்டிருந்தது. மகாராஜா முதல் எல்லா ஜனங்களும், இச்சத்தம் கோட்டைக்கு வெளியில் உண்டாகிறதென்று அங்கு சென்றபோது, கோட்டைக்குள் சத்தம் கேட்டது. கோட்டைக்குள் வந்தால் கோட்டைக்கு வெளியில் சத்தம் கேட்பது போல் இருந்தது. இவ்வாறு மூன்று மாத காலம் நடந்தது. தவிர, திவான் அரண்மனையின் மேற்கு பாகத்தில், முன் நாயுடு வம்சத்தார் ஆண்ட அரண்மனையின் கோபுர மொன்றிருந்தது. அந்த கோபுரத்தில் வடக்குப் பக்கத்தில் இருந்த சிகரமொன்று திடீரென்று இடிந்து விழுந்தது. இவை முதலியவை அசுப அடையாளங்களென்று ஜனங்கள் பேசிக்கொண்டார்கள். இன்னுஞ் சில அசுப அடையாளங்களும் ஜனங்கள் கண்களுக்குத் தென்பட்டன. பிறகு, பிரதாபசிம்ம மகாராஜாவும் தம் தபோ பலத்தினாலும், யோகாப்பியாசத்தினாலும், குரு உபதேசத்தை நன்றாய் அப்பியாசஞ் செய்துகொண்டு தம்முடைய மரண காலத்தை நன்றாயறிந்துகொண்டு, கடைசி காலத்தை மனச்சாந்தியுடன் கழித்துக்கொண்டிருந்தார்.

அப்போது துக்கோஜி மகாராஜாவின் எடுத்துக்கொள்ளப்பட்ட ஸ்திரீகளிடத்தில் உண்டான புத்திரர்களெல்லோரும்

காலஞ் சென்றுவிட்டார்கள். அவர்களில் நானா சாகேபிற்கு உண்டான அப்பூ சாஹேப் என்ற ஒரு புத்திரன் மட்டில் இருந்தாரென்று முன்பு கூறப்பட்டிருக்கிறது. அந்த அப்பூ சாஹேப் தனக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட ஸ்திரீயினிடத்தில் உண்டான பிள்ளையான நானா சாஹேபை மட்டில் வைத்துவிட்டுத் தெய்வ கதியடைந்தார். பரலோகமடைந்த அப்பூ சாகேபின் உத்தரக் கிரியைகளைப் பிரதாபசிம்ம மகாராஜாவே அந்த நானா சாகேபைக் கொண்டு பத்து நாள் வரையில் நடத்திவைத்தார். பன்னிரண்டாவது நாள் மகாராஜாவுக்கு அந்தியகாலம் நெருங்கியது அப்போது தன் குமாரனுகிய துளஜா மஹாராஜாவுக்கு உத்தம நெறியைப்பற்றிய புத்திமதிகளைச் சொல்லிவிட்டுத் திடமான பிரக்ஞையுடன் சகம் 1685 சுபானு வருஷம் (1763) பரம பதத்தை யடைந்தார். அவருடன் அவருடைய மூன்றுவது மனைவியான யமுனுபாயி சாகேபும், ஐந்தாவது மனைவியான சக்வார்பாயி சாகேபும் இருவரும் உடன்கட்டை ஏறினுர்கள்.

உடனே துளஜா மகாராஜா சிம்மாசன மேறினுர். அப்போது நவாப் மஹமத் அலிகான், மகாராஜாவுக்கு மங்கள வஸ்திரமும் பத்திரமும் "முதர் முருக்" என்ற பெயருடையதும், ஒன்றரை ஆள் உயரமும், ஒட்டகையைப் போன்றதுமான ஒரு அபூர்வ பக்ஷியையும் அனுப்பினுர்.

பிறகு துளஜா மகாராஜா நாலைந்து வருஷம் வரையில் தன் தந்தையான பிரதாபசிம்ம மகாராஜாவின் உத்திரவுப்படியே, யோக்யமான பரிவாரங்களை முறைப்படி ரக்ஷித்து வந்தார். நவாப் முகம்மது அலிகானுக்குச் சந்தோஷம் உண்டாகவேண்டுமென்று சர்தார் அருணகிரிஅப்பா என்பவரோடு ஒரு சிறு சைனியத்தை அனுப்பி, மதுரையிலுள்ள கும்தீன் மகம்மது இசூப்கான்பேரில் படை யெடுத்தார். அவ்விதமே வெங்கட்ராவ் காடே என்பவரை சேனையின் ஒரு பகுதியுடன் அனுப்பி பங்களூரிலுள்ள ஹைதர் நாயக்கின் நாட்டின்பேரிலும் படையெடுத்தார். எல்லா அரசர்களும் நவாபுகளும் புகழும்படியாக ராஜ்யபாரம் செய்தும் வந்தார்.

பிறகு, ஆதிமுதல் தன்னை யனுசரித்து வந்தவர்களுக்குக் கைம்மாருகத் தகுந்த பதவி யளிக்கவேண்டுமென்று நினைத்து, ஹுசேன் என்னும் முகம்மதியர் ஒருவருக்கு மந்திரி பதவியைக் கொடுத்தார்.

அப்போது ஹைதரலிகான் ஆற்காட்டின்மீது படையெடுத்து தஞ்சாவூரின் சமீபம் திருமலவாடிக்கு வந்து நவாபுக்குச் சவால் விடுத்தார். மகாராஜா அவருக்கு நான்கு யானைகளும், ஒரு லக்ஷ வராகன் வரையில் பணமும் கொடுத்தார். அதை வாங்கிக்கொண்டு ஹைதர் அலி சென்றுவிட்டார். புதிதாக நியமிக்கப்பட்ட ஹுஸேன்கான் இராஜ்ய நடவடிக்கைகளை எப்படி நடத்தியபோதிலும், முக்கியமான வேலைகளெல்லாம் பிரதாபசிம்ம ராஜாவின் பேரிலேயே நடத்தப்பட்டது நவாப் மஹமத் அலிகானுக்கு ஆற்காடு சுபாவின் பேஷ்கஷ், தஞ்சாவூர் சமஸ்தானத்திலிருந்து ஒவ்வொரு வருஷமும் ஆங்கிலேய சர்க்கார் வழியாகக் கொடுக்கப்பட்டு வந்தது. ஹுசேன் கானின் விபரீத புத்தி அதிகரித்து வந்ததினால் அவனால் நடத்தப்பட்ட ராஜ்யபாரம், சமஸ்தானத்துக்கே கேடுவிளைவிக்கக்கூடும், அல்லது கேடு வந்துவிட்டது, என்று சந்தேகமில்லாமல் சொல்லக்கூடிய நிலைமை ஏற்பட்டது.

பிறகு, துளஜா மகாராஜா தனக்கு ஆலோசனைக்காகத் தகுதியுள்ள சிலரைத் தெரிந்தெடுத்து அவர்கள் யோசனையையும் அனுசரித்தார்.

துக்கோஜி மஹாராஜாவின் காலத்திலிருந்து ராமநாதபுரத்துப் பாளையக்காரர்களுக்கு உதவி செய்வது முதலிய வழக்கம் தஞ்சை சமஸ்தானத்தில் இருந்து வந்தது. ஒருசமயம் நாகப்பட்டணத்துத் துறைமுக வழியாய் மகாராஜாவுக்கு பேஷ்கஷுக்காகக் கொடுக்கப்பட்ட யானை கப்பலில் வரும்போது, அந்தக் கப்பல் ராமநாதபுரத்துக் கடற்கரைக்கு வந்தது. அப்போது, ராமநாதபுரத்தார்கள், அந்த யானை மகாராஜாவுக்குச் சொந்தமானதென்றறிந்தும், அதை அவரிடம் அனுப்பாமல் வைத்துக்

கொண்டார்கள். மகாராஜா உடனே கோபங்கொண்டு, ராமநாதபுரத்தின்மேல் படையெடுத்துச் சென்று, கோட்டையை முற்றுகை செய்து, யுத்தஞ் செய்து கோட்டையைக் கைப்பற்றிக் கொள்ளும் சமயம், மகாராஜா தீர்க்காலோசனை செய்து கோட்டையை எடுத்துக்கொள்ளாமல், ராமநாதபுரத் தரசனிடமிருந்து தன்னுடைய சேனையின் செலவிற்காகப் பொருள் வாங்கிக் கொண்டு தஞ்சைக்குத் திரும்பிவிட்டார்.

இந்தசமயத்தில் தன் பெண்ணை, காண்டகேக்கு அநேக வைபவங்களுடன், அதிகம் செலவு செய்து விவாஹம் செய்து கொடுத்தார்.

இவ்விதச் செலவுகளினால் நவாபிற்குக் கொடுக்கவேண்டிய பேஷ்கஷ் இரண்டு வருஷமாய்க் கொடுக்கப்படாமல் பாக்கி நின்று விட்டது. அப்பொழுது மஹமத் அலி அடியிற் கண்டபடி யோசனை செய்தார்:— தஞ்சை அரசரான துளஜா மகாராஜா புத்திமானுகவும், பலமுள்ளவராகவும் இருப்பதோடு வட இந்தியாவில் உள்ள மகாராஷ்டிரர்கள் தொடர்பு உள்ளவராகவும் இருக்கிறார். மேலும் யௌவனதசையிலிருப்பவராயும், சூரராயும், எப்போதும் தன் யோக்யதைக்குத் தக்கபடி நடப்பவராகவும் இருக்கிறார். நமக்கு ஒரு சமயம் சிரமம் ஏற்படலாம். இந்தக் காரணங்களை உத்தேசித்து எந்த விதத்திலாவது இவரை நமக்கு கட்டுப்பட்டவராகச் செய்து கொள்ளவேண்டும். தற்சமயம் பேஷ்கஷின் பாக்கியிருக்கிறது. அதைக் கேட்டனுப்பி உடனே சேனையைத் திரட்டி, சமயம் பார்த்துத் தஞ்சாவூர் ராஜ்யத்தை ஆக்ரமித்து அரசரையும் நம் வசப்படுத்திக் கொள்ளவேண்டும். ஒருக்கால் அவர் பேஷ்கஷைக் கொடுத்துவிட்ட போதிலும், படிப்படியாக ராஜ்யத்தை ஆக்ரமித்துக்கொண்டு அரசரையும் வசப்படுத்திக் கொள்ளவேண்டும். இதுவே மேலான யோசனை" என்று நிச்சயித்து பேஷ்கஷைக் கேட்டனுப்பினர்.

அப்போது, ராஜா துர்மந்திரிகளின் ஆலோசனைக்கு வசமாகி பேஷ்கஷ் கொடுக்க முடியாதென பதிலனுப்பிவிட்டார்.

அதையே காரணமாக வைத்துக்கொண்டு நவாப் மஹமத் அலி கான், அரசரின் முன்னோர்கள் செய்த உதவியையும் நினைக்காமல், ராஜதந்திரத்திலேயே புத்தியைச் செலுத்தி, ராஜ்யத்தை ஆக்ரமித்துக்கொள்ளும் வகையில், தன் மூத்த மகனான உமததுல்லா உம்ரா என்பவருடன் யுத்தத்திற்கு வேண்டிய சாதனங்களுடன் சேனையைக் கொடுத்து யுத்தத்திற்கனுப்பினார். சேனையும் கோட்டையைச் சுற்றிக்கொண்டு யுத்தம் தொடங்கிற்று. இதைக் கண்ட மகாராஜாவின் துர்மந்திரிகள், தங்களுக்கு யுத்தஞ்செய்ய சாமர்த்தியம் இல்லாமையால், மேற்கொண்டு செய்யவேண்டியதென்ன என்று தோன்றாமல், ராஜிப்பேச்சு நடத்தவேண்டுமென்று, அரசரைக் கோரினார்கள்.

அப்போது அரசர் யோசனை செய்து, புராதனமாய்த் தன் தந்தையின் காலத்திலுள்ள இரண்டொருவரோடு தீர்க்காலோசனை செய்து, ராஜிப்பேச்சு நடத்தி, சேனையின் செலவை சுமார் 50, 60 லக்ஷ ரூபாய் என்பதாகத் தீர்த்து, சில நகைகளைக் கொடுத்து, பாக்கிக்குப் பாதி பிராந்தியத்தின் மகசூலையும் ஈடாக வைத்தார்.

பிறகு உமததுல் உம்ரா தஞ்சாவூர் கோட்டைக்குச் சமீபமாய் மேற்கே ஆறு மைல் தூரத்திலுள்ள வல்லத்துக் கோட்டையில் இருந்துகொண்டு, நவாபினால் கொடுக்கப்பட்ட எளங்காட்டுப் பிராந்தியத்தை ஸ்வாதீனப்படுத்திக்கொண்டு, தன் சேனைகளைக் கூட்டிக் கொண்டு திருச்சிக்குத் திரும்பினார்.

பிறகு மகாராஜா தன்னிடத்திலிருந்த சர்தார் சதாசிவ ராவ் சூரியவம்சீ என்பவரைச் சென்னையிலிருந்த நவாபினிடம் பேச்சு வார்த்தைக்காக அனுப்பினார். ஆனால் நவாபின் அபிப்பிராயம் வேறு விதமாக இருந்தது. அந்த சர்தாரிடம் ஒரு குதிரையும், வஸ்திரமும், கடிதமும் மட்டும் அனுப்பினாரேயல்லது, இருவரின் சந்திப்பினால் சமாதானம் ஏற்படவில்லை. பிறகு, மகாராஜாவிடமிருந்து நவாப்பிற்குச் சேரவேண்டிய பணம் முழுவதும் செலுத்தப்பட்ட பின், ஒரு வருஷம் கழித்து மகாராஜாவுக்குத் தம்

சேனைகளுக்குக் கொடுக்கப் பண முடை ஏற்பட்டது. அப்போது நவாப், மகாராஜாவின் சேனையிலுள்ளவர்களுக்கு லஞ்சம் கொடுத்து அவர்களை மகாராஜாவுக்கு எதிர்க் கக்ஷியில் சேர்ந்து சண்டை செய்ய ஏற்பாடு செய்தார். மற்றும் சில சர்தார்களை ஏவி மித்ரபேதஞ் செய்து ராஜ்யத்தை அபகரிக்க ஏற்பாடும் செய்தார். இதற்குள்ளாக, அப்போது மராட்டியர்களிடமிருந்து சர்தார் மாதவராவ் சதாசிவ் என்பவர் சௌத் என்னும் வரியை நவாபிடம் வசூலிப்பதற்காகச் சென்னைக்கு வந்தார். அவரையும் நவாப் தன் ஸ்வாதீனப்படுத்திக்கொண்டு, அவருடைய அபிப்பிராயத்தையும் வாங்கிக்கொண்டு, தஞ்சாவூர் ஸமஸ்தானத்தை ஆக்ரமித்துக்கொள்வதற்காகத் தன் இரண்டாவது பிள்ளையான மதார் முலுக் என்பவருக்கு அதிகாரம் கொடுத்து, யாதொரு காரணமுமின்றிப் படைகளை யனுப்பினர். யுத்தம் ஆரம்பித்ததும் கபடமாய் தஞ்சைக் கோட்டையையும், தஞ்சை ராஜ்யத்தையும் ஆக்ரமித்துக் கோட்டையில் தன் இருப்பிடத்தை ஏற்படுத்திக்கொண்டு, ராஜ்யத்தின் அதிகாரம் முழுமையும், அரசரின் பழைய சிப்பந்தியான டபீர் நாரோபந்த் என்பவரிடத்தில் ஒப்புவித்து, தான் கொஞ்ச காலம் கும்பகோணத்தில் தங்கியிருந்து, பிறகு அங்கிருந்து சென்னையிலுள்ள நவாப் மஹமத் அலியிடம் போய்ச் சேர்ந்தார்.

இதுவரையில் சம்புமகாராஜாவின் பரம்பரையான போஸல வம்சத்தார்கள் வசம் இருந்து வந்த தஞ்சாவூர் ராஜ்யம், மேலே சொன்னபடி இரண்டு வருஷ காலம் நவாபின் ஆட்சியின் கீழ் இருந்தது. மேற்கூறியபடி சேனைகள் எவ்விதமாக இருந்தபோதிலும், அரசரின் ஆப்த பரிவாரங்கள் மாத்திரம் யுத்தத்திற்குச் சென்றிருந்தால் பெரியதோர் சேனையையும் நாசம் செய்திருப்பார்கள். அப்படியிருந்தும் கோட்டை அன்னியர்களால் ஆக்ரமிக்கப்பட்டுவிட்டதே யென்றால் இதற்கும் காரணம் இங்கே நடந்த பெரியதோர் குற்றம் என்று எல்லா ஜனங்களும் சொல்ல ஆரம்பித்தார்கள். அது என்னவெனில்,— துளஜா மகாராஜா பட்டத்திற்கு வந்த நாள் முதற்கொண்டு அநேக தான தருமங்கள்

செய்திருக்கிறார். அநேக அக்ரஹாரங்கள் தானம் செய்திருக்கிறார். அநேக தேவாலயங்களை ஜீர்ணோத்தாரணம் செய்திருக்கிறார். மகம்மதிய மதத்திலுள்ளவர்களுக்குக்கூட அநேக தர்மங்களை ஊர்ஜிதம் செய்திருக்கிறார். ராஜாவும் புத்திமானாகவும் அநேக வித்தைகளைக் கற்றவராகவும், சரீர திடமுள்ளவராகவும் சூரராகவும் இருந்திருக்கிறார். இப்படிப்பட்ட மகாராஜாவுக்கு ராஜ்யபாரம் ஆரம்பித்தவுடன் நான்கு வருஷ காலம் துர்மந்திரிகளின் சிநேகம் ஏற்பட்டு, அவர்களுடைய போதனைகளுக்கு வசமாயிருந்தபடியால், அந்த துர்மந்திரிகளால் சில அகாரியங்கள், மகாராஜாவுக்குத் தெரிந்தும் தெரியாமலும் நடந்துவந்தன. அந்த துர்மந்திரிகளுள் லிங்கோஜி போன்ஸலே என்று சொல்லப்படும் கிலிபிலி அண்ணாவுக்கு மந்திரி பதவி கிடைத்தது. கிலிபிலி அண்ணாவின் உண்மையான போக்கு வெளிப்படக்கூடிய சந்தர்ப்பம் ஒன்று ஏற்பட்டது. அவர் மந்திரி பதவி அடைந்தவுடன் சிப்பாய் வேலையிலுள்ள ஆரணியைச் சேர்ந்த கோனேர் ராவ் என்ற பெயருள்ள மகாராஷ்டிர பிராமணர் ஒருவர் அவரை எதிர்த்துப் பேசினார். அதனால் மந்திரி கோபங்கொண்டதாக நினைத்து, அவருடனிருந்த ஒருவன் அந்த கோனேர் ராவ் என்பவரை அவமரியாதையாய்ப் பேசினார். அதனால் அவ்விருவருக்கும் பேச்சு வார்த்தை நடந்து அடிதடி உண்டாயிற்று.

அச்சமயம் சிலர் கோனேர் ராவோடு சண்டை செய்ததினால் அவர் காயமடைந்து கீழே விழுந்தார். அப்பொழுது அப்பிராமணரை அதிக உபத்திரவம் செய்தார்கள் என்று சொல்ல இடமுண்டாயிற்று. மஹாராஜா இச்செய்தியை யறிந்தும் அப்பிராமணரை வீட்டிற்கு அனுப்பி அவருக்கு வேண்டிய உபசாரங்களைச் செய்திருந்தால் அவர் பிழைப்பாரோ, இறப்பாரோ என்ற பேச்சுக்கு இடமில்லாமலிருந்திருக்கும். அப்படிக்கல்லாமல், அந்த கிலிபிலி அண்ணாவின் பேச்சில் நம்பிக்கை வைத்து, அவருடைய அபிப்பிராயத்தையே அனுசரித்ததால், அந்த ஆரணி தேசத்துப் பிராமணரைக் காயமடைந்து உயிருடன் சுயநினைவுடன் இருக்கும்போதே, காலில் கயிறு கட்டி பஞ்சமரைக்

கொண்டு தெருவில் இழுத்துக்கொண்டு போகும்படி செய்தார்கள். அப்போது அப்பிராமணரின் ரத்தம் தெருவில் பரவிற்று. அவர் அதிக துக்கமடைந்து கொஞ்ச தூரம் இழுக்கப் பட்டவுடன் இறந்துவிட்டார். அப்போது எல்லா ஜனங்களும் இத் மிகக்கொடுமையான செயலென்று சொல்ல சந்தேகத்திற்கு இடமில்லாமல் ஆகிவிட்டது. ராஜ்யம் நஷ்டமாவதற்கும் இதுவே காரணமென்று லோக வதந்திக்குக் காரணமாயிற்று.

பிறகு, நவாப் தஞ்சைக் கோட்டையைக் கைப்பற்றின விவரங்களை எல்லாம் ஆங்கிலேயதுரைத்தனத்தின் சீமையிலுள்ள அதிகாரிகளுக்கு (Court of Directors)க் கடித மூலமாய்த் தெரிவித்தனர். இதைக் கேட்ட ஆங்கிலேய சக்கரவர்த்தியும் மற்றும் சில சர்தார்களும் நினைத்ததாவது:— "எப்போதும் சென்னைப்பட்டணத்திலிருந்து சமாசாரம் வரும்போது நவாபைப் பற்றியும், தஞ்சை மகாராஜாவைப் பற்றியும் கிடைத்திருக்கும் தகவல்களிலிருந்து, மகாராஜாவிடமிருந்து நவாபிற்கு எப்போதும் உதவியே கிடைத்திருக்கிறதேயன்றி ஒருபோதும் அபகாரம் நடக்கவில்லை என்று தெரிகிறது. இவ்வாறிருக்கும்போது, பேஷ்கஷின் அல்ப காரணத்திற்காக நவாப் தஞ்சாவூரின்மேல் சேனையைத்திரட்டித் தன் பிள்ளைகளை அனுப்பிவிட்டார். அதற்கு அரசர், பேஷ்கஷ் பணத்தோடு, சேனையின் செலவிற்கும், கேட்டதற்குமேல் பணம் கொடுத்து, அவர் கட்டின கோட்டை ஒன்றையும், ராஜ்யத்தின் ஒரு பிராந்தியத்தையும் கொடுத்தும்கூட, நவாப் மஹமத் அலி காரணமில்லாமல் அந்த அரசரின்மேல் சேனையை ஏவி ராஜ்யத்தைக் கைப்பற்றியிருக்கிறார். அது மிகவும் பிசகான காரியம்'' என்று நினைத்து, அரசரால் செய்யப்பட்ட உதவியை நவாப் மறந்தது நன்றிகெட்ட செயலானதினால், தஞ்சாவூர் மகாராஜா, நவாபிடத்திலும் ஆங்கிலேய சர்க்காரிடத்திலும் நேர்மையான முறையில் சிநேகமாய் நடந்து வந்ததற்காகத் தஞ்சாவூரை அரசருக்கு மீட்டுக் கொடுக்கத் தீர்மானித்தார்கள். அதற்காக, பிகட் என்னும் துரையைச் சீமையிலிருந்து அனுப்பி, உடனே சென்னையின் அதிகாரத்தைப் பெற்றுக்கொண்டு, நவாப்

மஹமத் அலிகானிடமிருந்து தஞ்சாவூர் ராஜ்யத்தை வசப்படுத்தித் தஞ்சாவூரை துளஜா மகாராஜாவுக்குக் கொடுக்குமாறு, அவருக்கு உத்தரவளித்துச் சென்னைக்கு அனுப்பினார்கள்.

அவ்வாறே பிகட் துரை, சீமையிலுள்ள அதிகாரிகளின் உத்திரவுப்படி, அநேக உபாயங்களால் நவாபிடமிருந்து ராஜ்யத்தைக் கைப்பற்றித் தஞ்சையை யடைந்து, அங்குள்ள நவாபின் முகாமைப் பிடித்துக்கொண்டு, தஞ்சாவூர் ராஜ்யத்தையும், கோட்டையையும் துளஜா மகாராஜாவிடம் ஒப்புவித்து அவரைச் சிம்மாசனத்தில் அமர்த்தினர்.

அப்போது துளஜா மகாராஜா ஆங்கிலேய சர்க்காரின் கௌரவத்துக்கும், நீதிக்கும், அவர்கள் தயையோடு செய்த உபகாரத்திற்கும் கைம்மாறாக, மனமுவந்து ஒப்பி, தஞ்சைக் கோட்டையின் கிலேதார் பதவியையும். சேனைத் தலைமைவகிக்கும் அதிகாரத்தையும் ஒப்புவித்து, அச்செலவுக்காகத் தொகையை நிர்ணயப்படுத்தி, அதற்கு ஒரு லக்ஷ சக்ரம் வருமானமுள்ள ஊர்களையும், நாகூர் துறைமுகத்தையும் சந்தோஷத்துடன் ஆங்கிலேயருக்குக் கொடுத்தார்.

பிறகு நவாப் மஹமத் அலிகான் தனக்குப் பிரதிவருஷமும் கிடைக்கக்கூடிய பேஷ்கஷ் வருமானத்திற்காக பிரயத்தனஞ் செய்தார். அதற்குத் துளஜா மகாராஜா பதிலளித்ததாவது:— அகாரணமாகத் தன் கோட்டையை நவாப் கைப்பற்றிக்கொண்டார். அதுவுமல்லாமல் கோட்டையில், அரண்மனையிலிருந்தும், 125 வருஷ காலமாய் அரச பரம்பரையில் சம்பாதித்து வைத்ததுமான ஆபரணங்களையும் எடுத்துக்கொண்டார். அவ்வாபரணங்களின் விலை மதிப்பிட்டால் வரும் தொகையின் வருஷ வட்டி இரண்டு வருஷத்திய பேஷ்கஷ் வருமானத்தின் தொகை ஆகிறது. இதைத் தவிர, தாம் எல்லா விதத்திலும் ஆங்கிலேய சர்க்காரின் உபகாரத்திற்குக் கடமைப் பட்டவர். நவாபோ வென்றால் தம் ராஜ்யத்தையே அபகரித்து விட்டாராதலால், தாம் பேஷ்கஷ் வருமானத்தை கொடுக்கப்போவதில்லை'' என்று மறுதளித்து, தாம் ஜீவித்திருந்தவரையில் கொடுக்கவில்லை.

நீதியோடுகூடின ஆங்கிலேய சர்க்காரிடமிருந்து ராஜ்யம் கிடைத்தபிறகு, மகாராஜா செய்த நிச்சயமாவது:—"வணீஸ்கர ஜாதியாரையும் மற்றும் ஈனஜாதியாரையும் சமீபத்தில் வைத்துக்கொள்ளுதல், அவர்களுக்கு மந்திரிப்பதவி கொடுத்தல் இவைகளினால் பிரம்மஹத்தி முதலிய பாதகங்களுக்கும், ராஜ்யம் நஷ்டமாவதற்கும் காரணமாயிற்று. பிராமணர்கள் உத்தம ஜாதியார்களானதால் துரோகம் செய்யமாட்டார்கள். கொடுஞ் செயல்களுக்கு அஞ்சுவார்கள்," என்று எண்ணி, மந்திரிப் பதவியைக் கடைசிவரையில் பிராமணர்களுக்கே கொடுத்து வந்தார்.

துளஜா மகாராஜா விவாஹம் செய்துகொண்ட பெண்களுள், மோஹனபாயி சாகேப் என்பவர், நவாப் மஹமத் அல்லிகான் கோட்டையைப் பிடித்ததற்கு முன் வருஷத்தில் பிரசவித்துப் பிள்ளையோடு தெய்வகதி அடைந்தார். மீதியிருந்த இரண்டு ஸ்திரீகளில் மூத்தவரான ராஜஸபாயி சாகேபாவிற்கும், இளையவரான ராஜகுமாரபாயி சாகேபாவிற்கும் புத்ர சந்தானமில்லை. இனி புத்ர சந்தானம் உண்டாகாது என்ற சந்தேகம் தோன்றியதால், சந்ததிக்காக இரண்டு விவாகங்கள் செய்துகொண்டார். அவர்களில் ஒருவர் மஹாடிக் வம்சத்தின் பெண்ணான சுலக்ஷணபாய் சாஹேப் என்பவர்; மற்றொருவர் இங்களே வம்சத்துப் பெண்ணான மோஹனபாயி சாகேப் என்பவர். இவர்களைத் தவிர, எடுத்துக்கொள்ளப்பட்ட ஸ்திரீகளும் நால்வர் இருந்தனர். மோஹனபாயின் வயிற்றில் புத்ர சந்தானம் உண்டாயிற்று. ஆனால் பத்து தினங்களுக்குள்ளாகவே தெய்வகதி அடைந்துவிட்டது. பிறகு, அதே மோஹனபாயி சாகேப் வயிற்றில் அப்துல் பிரதாபராம் என்பவர் பிறந்தார். அந்த அப்துல் பிரதாபராம் என்பவர் ஆறு வருஷகாலம் வளர்ந்து பிறகு வைசூரியால் பரலோகமடைந்தார். இதைத் தவிர, அரசரின் இரண்டாவது ஸ்திரீயின் வயிற்றில் ஒரு கன்னிகை பிறந்தாள். அவளுக்கு எட்டு வயதில் விவாஹம் நடந்ததென்ற விவரம் முன்பு கூறப்பட்டுள்ளது. அப்பெண் வயிற்றில் மாருதிசாமி என்று ஒரு பிள்ளையும், சாந்தா பாயி என்ற பெண்ணும் பிறந்தார்கள். அவ்விரு

குழந்தைகளையும் விட்டு அரசரின் பெண்ணான அபரூபபாயி சாகேப் என்பவர் தெய்வகதி யடைந்தார். அதனால் அவ்விரு குழந்தைகளையும், துளஜா மகாராஜா, அவர்களுடைய தாயாரிட முள்ள அன்பினால் தாமே வளர்த்து வந்தார். துரதிர்ஷ்டவசமாக அவ்விரு குழந்தைகளும் அப்துல் பிரதாபராமராஜா தெய்வகதி அடைந்த வருஷத்திலேயே, பரலோகமடைந்தார்கள்.

இவ்வாறு, தம் பிள்ளைகள், பெண்கள், பேரன் பேத்திகள் முதலியவர்கள் தான் இருக்கும்போதே இறந்துவிட்டதால், துளஜா மகாராஜா தன் சரீர அபிமானத்தையும் துறந்தால்தான் துக்கம் சாந்தி அடையுமேயல்லாமல் வேறு வழியில்லை யென்று நிச்சயித்து, அதிக வைராக்கியத்தோடு அன்ன ஆகாரங்களில் கூட ஆசை வைக்காமல் காலத்தைக் கழித்தார். இதனால் சரீரத்தில் பெரியதோர் வியாதி உண்டாகி அந்த வியாதியுடன் மூன்று வருஷ காலம் கழித்தார்.

அந்த சமயத்தில் நவாப் ஹைதர் அலிகான் என்பவர் ஆற்காடு, சென்னைப்பட்டணம் முதலிய நாடுகளின்மேற் படை யெடுத்து வந்து தஞ்சையை யடைந்து, துப்பாக்கிப் பிரயோகஞ் செய்து கோட்டையிலுள்ள ஆங்கிலேயரின் சைன்யத்துடன் சண்டையிட்டுத் தஞ்சாவூர் பிராந்தியம் முழுமையும் சூழ்ந்து கொண்டார் அந்நாளில் தஞ்சாவூர் நாட்டிலும் கோட்டையிலும் பஞ்சம் ஏற்பட்டு தானியங்கள் கிடைக்கவில்லை. இச்சமயத்தில் ஜனங்கள் மத்தியில் குழப்பமேற்பட்டு, ஒவ்வொருநாளும் அநேக ஜனங்கள் மடிந்து போனார்கள். அறுநூற்று, எழுநூற்றுச் கணக்காய் ஜனங்கள் மடிந்தார்கள். அந்தப் பஞ்சத்தில்தான் வேறு வழியில்லாமல் ஜனங்களை ஜனங்கள் அடித்துத் தின்றார்கள். அதனுடன் அப்பஞ்சமும் படையெடுப்பும் ஒழிந்தது.

அதன்பின், அரசர் தன் சரீரம் அதிகநாட்கள் இராதென நிச்சயமாயறிந்து, மேற்கொண்டு யோசனை செய்தார். தனக்கு உண்டான பிள்ளைகளும், பேரன்களும் தனக்கு முன்பே பரலோகத்தை யடைந்துவிட்டார்கள். மேலும் தன் சரீரமும் அதிக

நாள் நில்லாது; தன் உத்தரக்கிரியைக்கும் ராஜ்யமாளுவதற்கும் பாத்யதையுள்ளவர் ஒருவருமில்லை. தனது பிதாவான பிரதாப சிம்ம மஹாராஜா, ராஜரிஷியைப் போல் நற்கீர்த்தி பெற்று, எல்லா பந்து ஜனங்களும் அவருடைய பெருமைக்கு வசமாய்த் தாங்களே வந்து சேரும்படி நடந்துகொண்டார். அப்படியிருந்தும் விவாஹமாகாத ஸ்திரீயிடம் பிறந்தவர் என்ற குறை அவருக்கு ஏற்பட்டுவிட்டது. அப்பேர்ப்பட்ட பேச்சுக்கு இனி இடங்கொடுக்கக் கூடாது என்று தீர்மானித்து, தம் குலத்திலேயே, தம் கோத்திரத்திலேயே, தாயாதிகளுக்குள், ரூபம், குணம் இவற்றிற்சிறந்த ஒருவரை சாஸ்திரோக்தமாய் ஸ்வீகாரம் எடுத்துக்கொண்டு, ஜாதகர்மம் முதலான ஸம்ஸ்காரங்களைச் செய்து, சரபோஜி ராஜா என்று பெயர் சூட்டினர்.

அந்த சரபோஜி ராஜா எந்த வம்சத்தைச் சேர்ந்தவர் என்ற விபரம் எழுதப்படுகிறது.

போசல வம்சத்து ஆதி புருஷரான சம்பு ராஜா முதற்கொண்டு பதின்மூன்றுவது புருஷர் பாபாஜி ராஜா. அவருடைய வயிற்றில் மாலோஜி ராஜா, விட்டோஜி ராஜா என்றிருவர் பிறந்தார்கள். மாலோஜி ராஜாவின் வயிற்றில் ஷஹாஜி ராஜா பிறந்தார். அந்த ஷஹாஜி ராஜாவினிடத்தில் சிவாஜி ராஜா, ஏகோஜி ராஜா என்றிருவர் பிறந்தனர். அவர்களுடைய கீர்த்தியைப்பற்றியும், இரண்டாவது புத்ரரான விட்டோஜி ராஜாவின் பிரசித்தியைப்பற்றியும், அந்த விட்டோஜி ராஜாவின் சந்ததியினர் தான் தற்காலம் சாதாராவிலும், பனலாவிலும் ராஜ்யபாரம் நடத்துகிறார்களென்ற விவரத்தைப்பற்றியும் முன்பே கூறப்பட்டுள்ளது. தற்சமயம் துளஜா மகாராஜா ஸ்வீகாரம் எடுத்துக்கொண்ட சரபோஜி மகாராஜா, அவ்விட்டோஜி ராஜாவின் வம்சத்தவராதலால் அந்த வம்ச விஸ்தாரம் விவரிக்கப்படுகிறது.

விட்டோஜி ராஜாவின் எட்டு பிள்ளைகளில் கடைசி மகன் த்ரியம்பக்ஜி ராஜா. அவருடைய குமாரர்களில் கங்காஜி ராஜா என்பவர் ஒருவர்; அந்த கங்காஜி ராஜாவுக்கு, உவாஜி ராஜா என்றும், தாவோஜி ராஜா என்றும் இரு புத்திரர்கள் இருந்

தார்கள். தாவோஜி ராஜாவின் சந்ததி விஷயமாய் பிறகு வேண்டிய இடத்தில் விவரிக்கப்படும். உவாஜி ராஜாவுக்குப் பிள்ளையாக கங்காஜி ராஜாவும், கங்காஜி ராஜாவுக்குப் பிள்ளையாக சுபான் ராஜாவும், சுபான்ஜி ரராஜாவிடத்தில், உவாஜி ராஜா, ஷஹாஜி ராஜா என்ற இரு புத்திரர்களும் பிறந்தார்கள். ஷஹாஜி ராஜாவின் வயிற்றில் பிறந்தவர்தான் சரபோஜி ராஜா. உத்தம வம்சத்தைச் சேர்ந்தவராதலால் அந்த சரபோஜி மகாராஜாவை துளஜா மகாராஜா சரியான முறையில் சாஸ்திரப்படி ஸ்வீகாரம் எடுத்துக்கொண்டு, யானைமேல் சகலவாத்ய வைபவங்களுடன் வந்து, ஊரில் எல்லோருக்கும் சர்க்கரை வழங்கி, எல்லா சுற்றத்தாருக்கும் விருந்து செய்வித்தார்.

அந்த சமயத்தில் கனம் ஆங்கிலேயக் கம்பெனியாரின் பிரதிநிதியாகத் தஞ்சாவூர் கோட்டையில் மாஸ்டர் ஜான் ஹடாலேப்ஸன் என்பவர் இருந்தார். அவரிடமும் மற்றும் சேனைத்தலைவர்களான கர்னல் இப்ஸ்லி, கம்மாண்டர் உஷ்டோட் இவர்களிடமும், ஷ்வார்ட்ஸ் என்னும் பாதிரியாரிடமும், ஆக இந்நால்வரிடமும் சரபோஜி ராஜாவை ஒப்புவித்து, அரசர் சொல்லியதாவது:- “மஹாராஜா சரபோஜிக்கு இந்த ராஜ்யத்தின் பாத்யதை சஹஜமாய் இருந்தபோதிலும், சட்ட முறையை யனுசரித்து நாங்கள் ஸ்வீகாரம் செய்துகொண்டிருக்கிறோம். நமது ராஜ்யத்திற்கும், ஐசுவரியத்திற்கும், வம்சத்திற்கும் இவர்தான் அதிபதி. இவரை உங்கள் கையில் ஒப்புவிக்கிறோம். எங்களுக்குப் பின்னால் இந்த சரபோஜி ராஜாவிடமிருந்து ராஜ்யபாரத்தை நடத்தி, பிரியத்துடன் இவரைக் காப்பாற்றவேண்டும்” என்று சொல்லி அந்நால்வர் கைகளிலும் சரபோஜி ராஜாவை ஒப்புவித்தார்.

உடனே இது நடந்த நான்காவது, ஐந்தாவது நாளில் அதாவது வஸந்த பஞ்சமி நாளான சுப முகூர்த்தத்தில், ஸ்ரீ பிரதாபராமஸ்வாமி மஹாலில் தர்பார் நடத்தி, ராஜாஸனம் போடும்படி செய்து, அந்த ஆசனத்தின்மேல் சரபோஜி ராஜாவை உட்கார வைத்து, தர்பாருக்கு வந்த எல்லா சபையோர்களிடமிருந்து

அரசரைப்போல் சரபோஜி ராஜாவுக்கு சன்மானம் செய்வித்துத் தான் கவலையற்றவராய் ஆனார் மேலும் சென்னை அரசாங்கத் தாருக்கும் நடந்த சமாசாரத்தைத் தெளிவாய் எழுதி அனுப் பினார்.

இம்மாதிரி நடந்தவுடன் துர்நடத்தையுள்ள சபையோர்கள் சிலர் ஒன்றுகூடி யோசித்ததாவது:-"மகாராஜாவின் முடிவுகாலம் சமீபித்துவிட்டது. மகாராஜாவும் தன்னுடைய ராஜ்யத்தை ஆளுவதற்கும், வம்சத்தை விருத்தி செய்வதற்கும் உத்தம குலத்திலுதித்த சரபோஜி ராஜாவை அரசராக நியமித்து ஆங்கி லேய சர்தார்களிடம் ஒப்புவித்துவிட்டபடியால், இதன் பிறகு அரசரின் காலமானவுடன் ஆங்கிலேயர்களிடம் அபிமானம் ஏற் பட்டு, சரபோஜியை சிம்மாசனதித்ல் வைத்து எல்லாகாரியத் திற்கு முன்னணியில் ஆங்கிலேயர் முற்படுவார்கள். அப்பொழுது நம்முடைய பிழைப்பெல்லாம் நசித்துப்போய்விடும். நம்மில் ஒருவருடைய கௌரவமும் நிலைக்கப்போவதில்லை" என்று யோசித்து, அரசருக்கு முறைப்படி விவாகமாகாத ஸ்திரீகளில் ஒருவர் வயிற்றில் பிறந்த அமரசிங் என்பவரைத் தேர்ந்தெடுக்க நிச்சயித்தார்கள். இராஜ்ஜியத்தை நடத்தும் பாத்தியம் அந்த அமர்சிங்குக்குச் சற்றுக்குறைவாக இருந்தபோதிலும், வயதால் பெரியவராதலால், பலவித பாவனைகளைச் செய்து, அவரை முன் நிறுத்தினால் தாங்கள் எல்லாவற்றையும் அனுபவிக்கலாமென்று நினைத்தார்கள். மேலும் மகாராஜா பிழைத்திருக்கும்போதே அமரசிங்கைக் கூப்பிட்டனுப்பி மகாராஜாவின் மடியில் உட்கார வைக்கவேண்டுமென்ற விபரீத யோசனையுடன், எல்லோரும ஒரு மனத்தினராய், மகாராஜாவிற்கு மனோபலம் குன்றியிருந்தபோது மகாராஜா கூப்பிட்டு அனுப்பியதாக அமரசிங்கைக் கூப்பிட் டனுப்பி, மகாராஜா செய்த ஏற்பாடென்று ஒரு வதந்தியைக் கிளப்பி, அவ்வாறே சென்னை அரசாங்கத்தாருக்கும் தாங்கள் கிளப்பிய வதந்திக்கு ஒத்தபடி ஒரு கடிதம் எழுதி, அதற்கு மகாராஜாவின் முத்திரையிட்டு அதை அரசாங்கத்தாருக்கு அனுப்பிவிட்டார்கள்.

இதற்கு மறுநாள், சகம் 1708 பராபவ சம்வத்ஸரம், துளஜா மகாராஜா பரமபதத்தையடைந்தார். அவருடைய உத்தரக் கிரியைகளை அமரசிங்கே துஷ்டசபையோர்களின் பலத்தைக்கொண்டு, பாவனைக்காக சரபோஜி ராஜாவையும் கூட வைத்துக்கொண்டு, சாஸ்திர மரியாதையைக் கொஞ்சங்கூட லக்ஷியம் செய்யாமல், தாமே நடத்தினர்.

பிறகு சென்னையரசாங்கத்துக்கு அதிகாரியாயிருந்த சிராஜ்வல்காமல் என்பவரை யணுகி, இந்த துர்போதனைக்காரர்கள் தங்கள் யோசனை எவ்விதம் கைகூடுமோ, அதற்குத் தக்கபடி யோசனைசெய்து, முதலில் லேடிகாமலுக்குத் தெரிவித்து, அவள் மூலமாய் சிராஜ்காமலுக்குத் தெரியப்படுத்தினர்கள். சிராஜ்காமலும் இந்த யோசனையை அங்கீகாரம் செய்து, அதற்காக வங்காள அரசாங்கத்தாருக்கு எவ்விதம் எழுதவேண்டுமோ அவ்வாறு எழுதி, அவர்களுடைய உத்திரவை வரவழைத்துக்கொண்டு, தான் தஞ்சாவூருக்கு வந்தார்.

இதற்குமுன்பே அந்த துர்ப்போதனைக்காரர்கள் தஞ்சையிலுள்ள ஆங்கிலேய சர்தாரையும் தங்களுடைய அபிப்பிராயத்திற்கு ஒத்தவாறு இருக்கும்படி செய்து, முன்கூட்டியே எந்தப் பேச்சுவார்த்தைக்கும் முன்வராமலிருக்குமாறு, ஏற்பாடு செய்தார்கள். சிராஜ்காமல் என்பவர் தஞ்சாவூருக்கு வந்துசேர்ந்தவுடன் அவரிடம் சூழ்ச்சிசெய்து, சரபோஜி ராஜாவின் பக்ஷத்திலுள்ளவர்களையும் அமரசிங்கின் பக்ஷத்திலுள்ளவர்களையும் தவிர்த்து நடுநிலைமை (மத்பஸ்த) யாயுள்ளவர்களை விசாரித்துத் தெரிந்துகொள்ளுவதாக மத்யஸ்த முறையை பாவனைசெய்வித்து; சாஸ்திரமறியாத பன்னிரண்டு பண்டிதர்களைக்கூட்டி, சாஸ்திர மரியாதையைப் புறக்கணித்து, லௌகிக நியாயத்தையும் அனுசரிக்காமல், தங்களுடைய யோசனையின்படி சொல்வித்து, அந்த மத்யஸ்தர்களின் சாக்ஷிபத்தையொட்டி இந்த ராஜ்ஜிபத்திற்கு அமர்சிங்தான் உரித்தானவர் என்று சொல்லி, சகம் 1709 பிலவங்க வருஷம், அமரசிங்கைத் தஞ்சாவூர் ராஜ்யத்தில் பட்டம் கட்டுவித்தார்கள்.

பிறகு அமரசிங் ராஜ்யபாரம் நடத்திக்கொண்டு வந்தார். உண்மையான பாத்தியமுள்ள சரபோஜி ராஜாவை, துளஜா மகாராஜா ஸ்வீகாரம் எடுத்துக்கொண்டு ஆங்கிலேய கம்பெனியாருக்குத் தெரிவித்திருந்த போதிலும், அமர்சிங் அவர் மேல் பொறாமைகொண்டு, அவருக்கு உபத்திரவம் செய்து வந்தார். இதை ஷ்வார்ட்ஸ் என்னும் பாதிரி விசாரித்தறிந்துகொண்டதில், அவருக்கு சரபோஜி ராஜாவின்மேல் தயைஉண்டாகி, சமாசாரங்களெல்லவற்றையும் கம்பெனியார்களுக்குத் தெரிவித்தார். அந்த சமயத்தில் கம்பெனியின் பிரதிநிதியாக மாஸ்டர் ராம் என்பவர் தஞ்சாவூருக்கு ரெஸிடெண்டாக வந்தார்.

ராம் என்பவர், பாதிரிஷ்வார்ட்ஸ் கம்பெனிக்குத் தெரிவித்த சமாசாரத்தைக் சீமையிலுள்ள அதிகாரிகளு (Court of Directors) க்குத் தெரிவித்து, அங்குள்ள அதிகாரிகளின் உத்திரவுப்படி சரபோஜி ராஜாவை அமர்சிங்கின் வசத்திலிருந்து விடுவித்து, அவருக்கு அரண்மனையிலேயே வேறு இடத்தைக் கொடுத்து அவருடைய ரக்ஷணையின் பொருட்டு கம்பெனியார் உத்தியோகஸ்தர்களை நியமித்தார். பிறகு சீமையிலுள்ள அதிகாரிகள், ஷ்வார்ட்ஸ் பாதிரியினிடமிருந்தும், வேறு சில பண்டிதர்களிடத்திலிருந்தும் சரபோஜி ராஜாவின் நிஜமான பாத்யதையை அறிந்து, அவருக்கும் அவருடைய குடும்பத்திற்கும் வேண்டிய செலவுகளுக்குக் கொடுக்கும்படியும் செய்தார்கள்.

சரபோஜி மன்னர், வீணாய்க் காலத்தைக் கழிக்காமல் ஷ்வார்ட்ஸ் பாதிரியினிடமிருந்து ஆங்கிலம் எழுதப் படிக்கக் கற்றுக்கொண்டார். அப்போது ஷ்வார்ட்ஸ் பாதிரியும் மனப்பூர்வமாய் அவருக்கு அப்பியாசம் செய்வித்தார். அதனால் சரபோஜி ராஜா ஆங்கிலம் சரியான முறையில் கற்றுக்கொண்டார். அவ்விதமே ஸ்வபாஷையான மகாராஷ்டிரத்தையும், அதற்கான லிபிகளையும், தமிழையும், பயின்றார். அதற்குப் பிறகும் அமர்சிங் அவருக்கு ஒவ்வொரு சமயமும் இடைஞ்சல் செய்துகொண்டு வந்தாராதலால் அந்த சரபோஜிராஜா ஷ்வார்ட்ஸிடம் தெரி

வித்தார். ஷ்வார்ட்ஸ் பாதிரி அதை ஆங்கிலேயருக்குத் தெரிவித்தார். அதற்கப்பால் கம்பெனியார்கள், சரபோஜிராஜா, அவர் தாய், இருவருடைய அபிப்பிராயத்தையுமறிந்து அதையனுசரித்து அவரை சென்னைக்கு வரும்படி ஏற்பாடு செய்தார்கள். அவ்விதமே சரபோஜி ராஜாவும் அவருடைய தாயாரும் சென்னைக்குச் சென்று கம்பெனியாரின் சம்ரக்ஷணையிலிருந்தார்கள். அவர்களுடன் சென்ற ஷ்வார்ட்ஸ் பாதிரி சாகேப், ஜரீக் பாதிரி சாகேபை தன் காரியத்திற்காக வைத்துவிட்டுத் தான் தஞ்சைக்குத்திரும்ப வந்து சேர்ந்தார். கம்பெனியார்கள் சரபோஜி ராஜாவையும் அவருடைய தாயாரையும் கௌரவமாக நடத்தி வந்தார்கள். மேலும் சரபோஜி ராஜாவின் பாத்யதையைத் தெளிவாய் விசாரணை செய்யவேண்டுமென்று அவர்கள் விரும்பியதும், அவ்விஷயமாய் தஞ்சாவூர் பண்டிதர்கள் எந்த நூலிலிருந்து நிச்சயம் செய்தார்களோ அந்த நூலை சரபோஜி ராஜா கம்பெனியாருக்குத் தருவித்துக் கொடுத்தார். அப்போது கம்பெனியார்கள் அமரசிங்கை இது விஷயமாய்க் கேட்டபோது அமரசிங் இதற்கு விரோதமாய் பதில் எழுதியனுப்பினர். அதையும் எடுத்துக்கொண்டு காசி முதலிய இடங்களுக்குச் சென்று விசாரணை செய்யப்பட்டது. சரபோஜி ராஜாவை, தஞ்சையிலேயே அமர்சிங்கினிடமிருந்து உபத்திரவம் ஏற்படாத இடத்தில் இருக்கும்படி உத்திரவு செய்தார்கள். சரபோஜிராஜாவும் அப்படியே இருந்தார். ஏற்கனவே அமர்சிங்கினிடத்தில் சாஸ்திரமறியாமையாலும், பயத்தினாலும், ஆசைமிகுதியினாலும் சாக்ஷியம் கொடுத்த பன்னிரண்டு பண்டிதர்களில் இறந்துபோனவர்கள் தவிர மற்றவர்கள் தாங்கள் செய்தது அநியாயமென்று சரபோஜி ராஜாவிடமும் ஷ்வார்ட்ஸ் பாதிரியினிடம் தெரிவித்தார்கள். இந்த சமாசாரத்தை ஷ்வார்ட்ஸ் பாதிரி கம்பெனியாருக்கு எழுதியனுப்பினர்.

சில நாட்களுக்குப் பிறகு ஷ்வார்ட்ஸ் பாதிரி தெய்வகதியடைந்தார். அப்போது சரபோஜிராஜா மிகவும் விசனமடைந்தார். பிறகு ஷ்வார்ட்ஸ் பாதிரி ஸ்தானத்திற்கு ஜனீக் என்னும்

பாதிரி வந்தார். அவர் சரபோஜிராஜாவின் நடத்தையைக் கவனித்து வந்ததினால் அவருக்கு அரசரிடத்தில் அதிக பிரியமுண்டாயிற்று. அப்போது ஜனீக் பாதிரியின் சிநேகிதரான டூரியன் என்பவர் ரெஸிடெண்ட் பதவிக்கு வந்தார். அவரும் அரசருடைய ஒழுங்கான நடவடிக்கைகளைக் கவனித்து வந்ததினால் அரசரின் விசனத்திற்கு ஒருவாறு ஆறுதல் ஏற்பட்டது.

பிறகு ஆங்கிலேய கம்பெனியார்கள் தாங்கள் செய்த விசாரணையில் எல்லா விதத்திலும் சரபோஜி ராஜாவின் பாத்யதை பேபலமாயிருப்பதை யறிந்தார்கள். தவிரவும் அமர்சிங்க ஆண்ட சுமார் 11 வருஷ காலத்தில் குடிகளுக்கு ஒருவித க்ஷேமமும் நடக்கவில்லை. சரியான முறையில் பணம் வசூலாகவில்லை. அப்படி வசூலான பணமும் சர்க்காருக்கு வந்து சேரவில்லை. சிப்பந்திகளுக்கும் சம்பளம் சரியாய்க் கிடைக்கவில்லை. கம்பெனி சர்க்கார் செலவுகளுக்கும் சரியானபடி பணம் செலுத்தப்படவில்லை. அரசாங்கத்திற்குக் கடன் ஏற்பட்டது. சில ஜனங்கள் அநியாயமாய்ப் பொய்ப் பத்திரங்களையும் சிருஷ்டித்துக் கொண்டார்கள்.

இவ்விதம் ஒழுங்கற்ற முறையில் ராஜ்பம் நடந்தபோது, கம்பெனியார்கள் ரெஸிடெண்ட் டூரியன் மூலமாய் அமரசிங்கை பட்டத்திலிருந்து நீக்கி, எல்லா விதத்திலும் யோக்கியமுள்ள சரபோஜிராஜாவை சகம் 1720 காளயுக்தி வருஷம் தஞ்சாவூர் ராஜ்யத்தில் பட்டம் கட்டுவித்தார்கள். உடனே இவ்விஷயமாய் விசாரணை நடந்ததைப்பற்றி ஒரு அறிக்கையையும் விளம்பரப்படுத்தினார்கள். இதனால் ஜனங்களுக்கு ஆங்கில அரசாங்கத்தாரின் நேர்மையான போக்கு வெளிப்படலாயிற்று.

சரபோஜிராஜாவும் பட்டத்திற்கு வந்ததும் தனக்கு முன்பு அமர்சிங் காலத்தில் நடந்த அக்கிரமங்களை நீக்கி, ஒழுங்கான முறையில் அரசுசெலுத்தி, பிரஜைகளுக்கு சௌக்கியத்தைக் கொடுத்தார். அரசாங்கக் கணக்குவழக்குகளைச் சீர்படுத்தி, அரண்மனையில் ஒழுங்கற்றவைகளை ஒழுங்குப்படுத்தி, சில புதிய ஏற்பாடுகளையும் செய்து, நேர்மையான முறையில் அரசு செலுத்

தினர். அப்போது ஆங்கிலேய கப்பெனியின் படைகள் டிப்பு சுல்தான்மீது படையெடுத்தன. அச்சமயம் மகாராஜாவுக்கு சேனை போகும் மார்க்கத்தைப்பற்றித் தெரிவிக்கப்பட்ட போது, மகாராஜாவும் தம்முடைய சக்திக்கு அதிகமாய் தம் பிருதுகளி லுள்ள குதிரைகள் சிலவற்றையும் தாம் உட்காரும் ரதத்தின் குதிரைகளையும், யானைகளையும் கொடுத்து, கம்பெனியார்கள் விரும்பின இடத்திற்குப் போய்ச் சேரும்படி செய்தார்.

மகாராஜா தமக்கு சமான குலமான காண்டகே குலத்தின் பெண்ணான யமுனாபாயி சாகேப் என்பவரையும், அஹல்யாபாயி சாகேப் என்பவரையும் விவாகம் செய்துகொண்டார்.

பிறகு, அமர்சிங் மகாராஜாவின் காலத்தில் ரெஸிடெண்டாக யிருந்த மாக்லோட் துரை பணவிஷயத்தில் மகாராஜாவிடம் சரி யாக நடந்துகொள்ளாதது பற்றி கம்பெனியார்களுக்குத் தெரிந் தது. ரெஸிடெண்ட் டூரியன் துரை மூலமாக அதை விசாரித்த போது ரெஸிடெண்ட் டூரியன் துரைக்கு 1800-ம் வ்ருஷம் மே 27-ந்தேதி சரபோஜி ராஜா எழுதிய கடிதத்திலிருந்தும் சாக்ஷிகள் மூலமாகவும் மகாராஜாவின் நேர்மையான நடவடிக்கை கம்பெனிக் குத் தெரிவிக்கப்பட்டவுடன், கம்பெனியார்கள் மகாராஜாவின் காரியஸ்தரை அனுப்பும்படி உத்திரவு செய்தார்கள். அப்போது மகாராஜா தத்தாஜி அப்பாவையும் மற்றும் அனுபோகமுள்ள இரண்டொருவரையும் அனுப்பினார். விசாரணை முடிவில் கம் பெனியார்கள் தங்கள் ஸ்வஜாதியாரிடம் பக்ஷபாதம் காட்டாமல் மகாராஜாவின் நேர்மையான முறையை வெளிப்படுத்தினார்கள். அப்போது மக்லோட் துரையும் அவர் மனைவியும் தங்களுடைய கஷ்டகால நிலைமையைத் தெரிவித்து அரசரை மன்னிக்கும்படி வேண்டினர். மகாராஜாவும் அவர் செய்த அபகாரத்தை மறந்து அவருக்குப் பதினாயிரம் ரூபாய் அதிகமாய்ப் கொடுக்கும்படி செய்தார். இந்த சமாசாரம் முழுதும் அப்போது இருந்த பாதிரி மார்களுக்குத் தெரிந்திருந்து அவர்கள் உண்மையாக சாக்ஷி சொன்னதினால் அவர்கள் செய்த உபகாரத்திற்கு மகாராஜா கடமைப்பட்டவராக ஆனார்.

மகாராஜா மணம் செய்துகொண்ட இரண்டாவது மனைவியான அஹல்யாபாய் சாகேபாவிடம் ஒரு பெண் குழந்தை பிறந்தது. அக்குழந்தைக்கு சுலக்ஷணபாய் சாகேபாவென்று பெயரிட்டார்கள்.

பிறகு, அமர்சிங் மகாராஜாவின் காலத்தில் தஞ்சை ராஜ்யம் நன்றாய் பரிபாலிக்கப்படாத காரணத்தினால், ராஜ்யத்தில் அநேக அக்கிரமங்கள் நடந்து கொண்டிருந்ததால் ராஜ்யம் முழுமையும் ஆங்கில அரசாங்கத்தின் ஆளுகைக்கு விட்டுவிட்டால் சரியான முறையில் ராஜ்யம் நடக்குமென்று மகாராஜாவுக்கு த்தெரிவிக்கப்பட்டது. மகாரர்ஜாவும் அதற்கு இசைந்து ஆங்கில அரசாங்கத்தாரிடம் ராஜ்யத்தை விட்டுவிட்டார். ஆங்கில அரசாங்கத்தாரும் மகாராஜாவின் நிர்மலமான நடத்தைக்கும் நிர்மலமான சித்தவிருத்திக்கும் வியந்து, மகாராஜாவின் கோட்டையிலிருந்த ஆங்கிலேயரின் இடங்களைக்காலிசெய்துவிட்டார்கள். அப்போது ஆங்கில அரசாங்கத்தாருக்கும், மகாராஜாவுக்கும் ஒரு உடன்படிக்கை நடந்தது. அந்த உடன்படிக்கை ஏற்பாடு செய்வதில் டூரியன் துரை உதவியாயிருந்தார்.

பிறகு ஆங்கில அரசாங்கத்தின் தெற்கு பிரதேசத்திலிருந்த மருதை என்னும் பாளையக்காரரை அடக்க வேண்டியிருந்தது. அதற்காக தம் ரக்ஷணைக்காக வைத்திருந்த சைன்யத்தில் மகாராஜா சிவண்ணு என்பவருடன் 50வீரர்களையும், மொகலாயர் 20பேர்களையும் மற்றும் அநேக படைகளையும், அவர்களுடைய சைன்யத்தின் செலவுக்காகத் தாமே கையிலிருந்து பணத்தைக் கொடுத்து ரெஸிடென்ட் ப்ளாக்பர்ன் துரையோடு 1801-ஞு ஜூன் 7-ம் தேதி உதவி அனுப்பினார்.

மஹாராஜா, தனக்கு விவாகமாவதற்கு முன் எல்லா குணங்களும் பொருந்திய ஒரு ஸ்திரீயை எடுத்துக் கொண்டிருந்தார். அவளும் மகாராஜாவின் மனதிற்கிணங்க நடந்து வந்தாள். அவள் இரண்டு தடவை கர்ப்பம் தரித்துப் பிரஸவித்து இருகுழந்தைகளும் இறந்து போயின. இரண்டாவது பிரஸவ சமயத்தில் அந்த அம்மாளும் இறந்துவிட்ட படியால், நற்குணங்களோடு

கூடின அவள் மரணம் அரசரின் சோகத்துக்குக் காரணமாயிற்று. ஆனால், அந்த அம்மாள் இறக்கும் தறுவாயில், தன் பெயரால் ஒரு அன்னசத்திரம் ஏற்படுத்த வேண்டுமென்று மகாராஜாவைக் கேட்டுக்கொண்டாள். மகாராஜாவும் அதற்கு இசைந்து சேது வுக்கு (ராமேசுவரத்திற்கு)ப் போகும் வழியில் உத்தமமானதும் யாத்திரிகர்களுக்கு மிகவும் உபயோக மாயுள்ளதுமான ஒரு சத்திரத்தையும், பக்கத்தில் ஒரு அக்ரஹாரத்தையும், ஒரு கோயிலையும் ஒரு சிங்காரவனம், குளம் இவைகளையும் கட்ட ஏற்பாடு செய்து, அவ்விடத்திற்கு முக்தாம்பாள்புரமென்று பெயரிட்டு, அதை நன்றாய் நடத்துவதற்கான ஏற்பாடுகளையும் செய்து வைத்தார். இவைகளெல்லாம் அந்த அம்மாளின் சாசுவதமான ஞாபகச் சின்னங்களாக இருக்கின்றன.

பிறகு மகாராஜா தீர்த்த யாத்திரை செய்ய உத்தேசித்து சோழ தேசம் முழுவதும் ஒரு தடவையும், ஸ்ரீரங்க க்ஷேத்திரம் ஒரு தடவையும், கங்கா யாத்திரை ஒரு சமயமும், பழனி யாத்திரை மற்றொரு சமயமும், இம்மாதிரி மூன்று, நான்கு தடவைகள் யாத்திரை செய்தார் எல்லா யாத்திரைகளிலும் ஆங்கில ரெஸிடெண்டாக இருந்த ப்ளாக்பர்ன் என்பவர் ஒவ்வொரு இடத்திலும் மஹாராஜாவுக்குத் தக்க மரியாதை செய்ய ஏற்பாடு செய்தார். மகாராஜாவும் ரெஸிடெண்ட் துரையின் உபகாரத்தை வெகுவாக மெச்சினார்.

மகாராஜாவுக்கும் கம்பெனி சர்க்காருக்கும் ஒப்பந்தமேற் பட்டபோது மகாராஜாவுக்குத் தன் தேசத்தில் எவ்வித மரியாதை நடக்குமோ அவ்விதமே கம்பெனிக்கு ஸ்வாதீனமுள்ள தேசத்திலும் மரியாதை நடத்துவதாக ஒப்புக்கொள்ளப்பட் டிருந்தது. அந்த ஏற்பாட்டை ப்ளாக்பர்ன் துரை ஸ்திரப் படுத்தி ஒழுங்காக அமுலுக்குக் கொண்டுவந்தார். ப்ளாக் பர்ன் துரையினால் செய்யப்பட்ட மற்றொரு உபகாரத்தையும் மகா ராஜா மெச்சினார். அது யாதெனில், மகாராஜாவுக்கும் ஆங்கி லேய சர்க்காருக்கும் நடந்த உடன்படிக்கையில் மகாராஜா தன் ராஜ்யமுழுதையும் நீதி பரிபாலனம் செய்யும்படி ஆங்கிலேய

சர்க்காரிடம் ஒப்புவிக்கும்பொழுது, மகாராஜாவுக்கு சாதகமான சில ஷரத்துக்களை ஆங்கிலேய சர்க்கார் ஒப்புக்கொள்ளும்படி செய்தார். அதே உடன்படிக்கையில், ஆங்கிலேயர்கள் அன்னிய நாட்டின்மேல் படையெடுத்த போதும் அன்னிய நாட்டார் ஆங்கிலேயர் மேல் படையெடுத்தபோதும் மகாராஜாவின் கோட்டையில் ஆங்கிலேயர்கள் முகாம் வைத்துக் கொள்ளலாமென்று ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அதையனுசரித்து, ஆங்கிலேய சர்க்கார் ஓர் படையெடுப்பை ஆரம்பித்தபோது உடன்படிக்கையின்படி முகாம் வைத்துக்கொள்ள ஏற்பாடு செய்யப்பட்டது. அப்போது முன் சொல்லப்பட்ட துரை யவர்கள் மகாராஜாவின் நடத்தையையும், மகாராஜாவின் விசுவாசத்தையும் கம்பெனிக்காரர்களுக்குத் தெரியப்படுத்தி, அவர்களுக்கு மகாராஜாவின் மேல் ஸ்திரமான பிரியமுண்டாகும்படி செய்தார். ப்ளாக் பர்ன் துரையின் இந்த உபகாரத்தை மகாராஜா மிகவும் மெச்சினார். மேலும் டூரியன் என்பவர், மாக்லோட் என்பவரின் ரெஸிடென்ஸி காலத்தில் ஏற்பட்ட விவஹார விஷயத்தில் மகாராஜாவின் நேர்மையையும் மகாராஜாவின் வாய்மையையும் சாக்ஷியங்களின் பலத்தையும் கம்பெனியாருக்குத் தெரியப்படுத்தினார். இந்த உபகாரம் மட்டுமில்லாமல் தான் சீமைக்குச் சென்ற பிறகும், மகாராஜாவிடம் பிரீதியுடன், மகாராஜாவுக்குச் சில புத்தகங்களையும், பூகோளப்படங்களையும், புத்தகம் கட்டுவதற்காக ஜரிகை வேலை செய்த துணிகளையும், சில வெள்ளிச் சாமான்களையும் அனுப்பினார். இந்தக் காரணங்களினால் டூரியன் சாஹேபின் உபகாரத்தை மகாராஜா எப்போதும் மெச்சி வருகிறார்.

மகாராஜா பழனி தீர்த்தயாத்திரைக்குப் போகுமுன்னரே அவருக்கு ஒரு கன்னிகை உண்டாயிருந்தது. சௌபாக்யவதி அஹல்யாபாயினிடத்தில் மகாராஜாவுக்கு இரண்டாவது கன்னிகை உண்டாயிற்று. அதற்கு ராஜகுமாரபாயி சாகேபா வென்று பெயரிட்டனர். சரபோஜி மகாராஜாவின் ராஜ்யபார காலத்தில் ஒருபோதும் நம் தேசத்திற்கு வராத அபூர்வமான, ஒரு பக்ஷி இருந்தது. பாஜ் என்ற பெயருடன் அது இங்கு இருந்து வந்தது. மகாராஜாவின் தர்மபத்தினியான சௌபாக்

யவதி அஹல்யாபாயி சாகேபாவின் வயிற்றில் முன் கூறப்பட்ட இரண்டு கன்னிகைகள் பிறந்தபிறகு அந்த அம்மாளிடத்திலேயே மகாராஜாவுக்கு மூன்ருவது கன்னிகை பிறந்தாள்.

அந்தக் குழந்தைக்கு பாயம்மா பாயி சாகேப் என்று பெய ரிட்டனர். தற்சமயம் சரபோஜி மகாராஜா எப்பொழுதும் சிவபுராணத்தைக் கேட்டுக் கொண்டும், சிவபூஜையைச் செய்து கொண்டும், யாத்திரை செய்து கொண்டும் சரியான வழியில் காலத்தைக் கழிக்கிருர். எல்லா ஜனங்களிடத்திலும், எல்லா ராஜ்யங்களிடத்திலும் த்வேஷபுத்தியை நீக்கி யாரிடமும் அலக்ஷ்ய புத்தியில்லாமல் ஜனங்கள் அவரவர்கள் மதத்தின் படியும் நடக்க உதவி செய்து, வேதமார்க்கத்தைபனுசரித்து ஜனங்கள் யாருக்கும் மனவருத்தம் உண்டாகாமல், சரியான மார்க் கத்தில் இராஜ்ஜிய பரிபாலம் செய்து வருகிருர்.

ஸ்ரீமத் போசல வம்சத்தில் உதித்தவர்களும், தம்பதி சிரேஷ் டரான ஸ்ரீசங்கரனின் (அர்த்தநாரீசுவரன்) அருளால் அடையப் பட்ட டில்லி சுல்தான் ராஜ்பத்தில் 4ல் ஒருபாகம் (சவுத்) வாங்கும் பாத்தியத்தை நிலைநாட்டி வந்தவர்களும், சத்துருக்கள் இல்லாமல் செய்து கொண்டவர்களும், டில்லி சம்ராஜ்யத்தை எதிர்த்து நின்றவர்களும், அரசர்களின் குலங்களுக்குத் திலகம் போன்றவர் களும், மஹாராஷ்டிர சோழ தேசங்களின் அதிபதிகளுமான மகாராஷ்டிர மன்னர்களின் சரித்திரமானது எல்லா மனோபீஷ்டங் களையும் கொடுக்கக்கூடியது.

இப்படிப்பட்ட இந்த சரித்திரம் முதல் வர்ணத்தைச் சேர்ந்தவரும் மகாராஷ்டிர ஜாதியைச் சேர்ந்தவரும், பகவந்த ராயரின் பௌத்திரரான விட்டல ராயரின் புத்திரரும், தற்சமயம் சோழநாட்டின் அதிபதியான ஸ்ரீமந்த் ராஜேஸ்ரீ மகாராஜா சத்ர பதி சரபோஜி மகாராஜா சாகேப் அவர்களின் உண்மையான ஊழியரும் காரியதரிசியுமான, காசியப கோத்திரம், ஆசுவலாயன சூத்திரம், ரிக்வேத சாகையைச் சேர்ந்த பாபுராவ் என்பவரால் சாலிவாகனசகம் 1759 ருதிரோத்காரி வருஷம், மார்க்கசிர்ஷ மாதம் கிருஷ்ணபக்ஷ அமாவாசைக்குச் சரியான கி. பி. 1803ஹு டிசம்பர் மீ 13உ எழுதி முடிக்கப்பட்டது

